

ஸ்ரீ:

# கதைக்கொத்து

## மலர் 6

### கடவுள் வாழ்த்து

மாமேவு மொண்பஞ்ச தந்திரமாம் வண்கதையைக்
கோமேவு முப்பாலிற் கோத்திடுவாம்—பூமேவு
மங்கயத்து வேழ மளித்தான்மார் பத்துறையும்
பங்கயத்து மாதாட் பணிந்து.

## 1. இல்வாழ்க்கை

1. "வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்"

ஒரு வனத்தில் ஒரு வேடன் கையில் குருவிக்கூடுங் கண்ணியும் தடி முதலான வேட்டைக் கருவிகளும் எடுத்துக்கொண்டு திரியா நிற்கையில், அசதியிற் பெருமழை வந்து, இருட்டிக்கொண்டு பிரளய காலம்போலக் காற்றும் எழும்பிற்று. அப்போது, அவ்வனசரன் நடுக்கலெடுத்து,

மரத்தின் சார்பில் நின்று, "பகவானே! இந்த வேளையில் உன்னைவிட வேறு ஒருவரும் என்னைக்காப்பாற்றுவாரில்லை" என்று அலறினன்.

அவ்வேளையில், அம்மரத்தின் மேலிருக்கும் புறு, தன் பெட்டை வரவில்லை யென்று வியசனமாய், "இன்றைக்கு என் நாயகி வரவில்லை, அவளை யாராயினும் பிடித்தார்



களோ என்னவோ? அவளில்லாமல் இங்கு எங்கும் பாழாக் தோன்றுகின்றது: மனையாளில்லாத வீடு சுடுகாட்டைப்போ லிருக்கிறது; கற்பும், கணவன் இன்புறும்வகைச் செயலும் உள்ள இல்லாளை யுடையான் எவனே, அவனே பாக்கியவான்" என்று இப்படி அது புலம்பினதைக் கேட்டு, அவ்வேடன் கைக்கூட்டில் அகப்பட்டிருந்த

பெண்புரு துக்கித்து, "முற்பிறப்பில் தீவினை செய்தவர்களுக்குப் பலவகைப்பட்ட தளையுஞ் சிறையும் நோயும் வறுமையுஞ் சம்பவிக்கின்றன; அஃது இருக்கட்டும்; எச்சமயத்தில் எதுநேரிடுமோ அஃது எப்போதும் பிசகுகின்றதில்லை" என்று சொல்லி, பிறகு, தன் பதியைக் குறித்து, "ஓஓ! என் பிராணநாதா! நமது வீட்டுக்கு வந்த இவ்வேடனுக்குக் குளிர்முதலாகிய துன்பத்தை நீக்கி, உதவி செய்யவேண்டும். வந்தவிருந்தை ஓம்பாவிட்டால், அவன் தன் பாவத்தை இல்வாழ்வானுக்குக் கொடுத்து, இல்வாழ்பவன் புண்ணியத்தைக் கொண்டு போகிறான். ஆதலின், இவன் நம்முடைய பெண்டிரைப் பிடித்தானென்னுந் துக்கத்தை மனத்தில் வைக்காமல், இவனை இயன்றமாத்திரம் பூசிக்கவேண்டும்" என்றது.

இப்படிப் பெண்புரு சொன்னதைக்கேட்டு ஆண்புரு, "வேடா! உன் வரவு நல்வரவாகுக; நீ மனத்திற் சிறிதும் சங்கோச மில்லாமல், உன்வீடாக நினைத்து, வேண்டுவதைக் கேள்" என, வேடன், "கபோதமே! என் குளிரைப் போக்கடி" என்றான். புரு, காட்டிலிருந்து ஒரு கொள்ளி எடுத்துக்கொண்டு வந்து, சருகுகளின் மேல் வைத்து மூட்டி, வேடனைப்பார்த்து, "நெருப்பு மூண்டெரிகிறது; இதில் நீ குளிர்காய். முன்தீவினையால் நான் பறவையாயிருக்கின்றமையால் என்னண்டை உன் பசிக்கு ஏற்ற பதார்த்தம் இல்லை; இப்போது அநேகம் துன்பங்கட்கு இடமாகவும் பரோபகாரமாகாமலும் இருக்கிற இச்சரீரத்தை வைத்துக்கொண்டிருந்து பலனென்னை? இதனால் நீ உன் ஆத்மாவைச் சந்துஷ்டிசெய்" என்று சொல்லிக்கொண்டே, பிறர் உதவியின் பொருட்டு எரிகிற அழலில் ஆனந்தத்தோடும் விழுந்தது.

அப்போது வேடன் "ஆ! ஆ!! என்பொருட்டு இஃது உடலைத்துறக்க, நான் மாத்திரம் தீயொழுக்க முள்ளேனுய், வேறென்றன் தசையினுற் சீவனம் பண்ணுகிறேனே; பரோபகாரமும், சிறிதாயினுந்தயையுங் கனவிலும் அறியாது ஊனைத்தின்று ஊனைப் பெருக்கின பாவியாகி, கோர



நரகத்திற்குப் போவேன்; இதை எனக்குப் பிரத்தியக்ஷமாக இப் புரு காண்பித்தது. இதுமுதலாகப் பசிதாகம் குளிர் வெயிற்பொறுத்தல் இவற்ருல் உடம்பை உலர்த்தி, நான் பாபமில்லாதவனுகக் கடவேன்" என்று சொல்லிப் பச்சாத் தாபத்துடனே தன் கூடு தடி கண்ணி முதலான ஆயுதங்களை முறித்து எறிந்துவிட்டு, அந்தப்பெண்புருவை விட்டுவிட்டான், அஃது உயிரினுஞ் சிறந்த தன் நாயகன் தருமத்தின் பொருட்டு உடலைக் கொடுத்தா ,னென்றெ

ண்ணி, அந்தநெருப்பிற் குதித்து இறக்க, உடனே, அஃது ஒரு திவ்ய ஸ்திரீயாய்க் கணவனோடு கூடச் சொர்க்கத்துக்குப் போயிற்று. வேடனும் இரக்கத்தினாற் பரிசுத்தனாகி, நெருப்பிலே தேகத்தைப் போட்டு நற்கதி அடைந்தான்.

## 2. அடக்கமுடைமை

2, "யாகாவா ராயினு நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சோல்லிழுக்குப் பட்டு"

விஷ்ணுவர்மனென்னும் ஒரு மன்னனுக்கு வயிற்றில் ஒரு நோயுண்டாய், நாளுக்குநாள் உடம்பு மெலிந்துபோனதனால், அவன் தேசாந்தரங்கட்குப் போய், ஒரூரில் ஒரு கோயிலில் இருந்தான். அக்காலையில், அவ்வூரில் அரசு செய்து வந்த பலியென்பவனுடைய குமாரிகளிருவரும் தம்தந்தையினிடத்திற்கு வந்தபோது, அவர்களில் ஒருத்தி அரசனை நோக்கி, "ராஜனே! வெற்றியடைவாய்" என்றாள். மற்றொருத்தி, "நீநல்லபோசனம்பண்ணுவாய்" என்றாள்.

இதைக் கேட்டவுடனே, அரசனுக்குக் கண்கள் சிவந்து, அமைச்சர்களைப் பார்த்து, "இந்தக் கெட்ட பேச்சுக்காரியை நோயாளிக்குக் கொடுங்கள், இவள் நல்ல போஜனங்களை அனுபவிப்பதனைப் பார்ப்போம்" என்றான். அமைச்சர்கள் ராஜன் கட்டளைப்படியே, கோயிலில் இருந்த ராஜகுமாரனாகிய பிணியாளுக்கு அவளைக் கொடுத்தார்கள்.

பின்பு அவள், கணவனை ஈசுவரனைப் போலெண்ணிப் பணிவிடைகள் செய்து, அவனை அழைத்துக்கொண்டு, மற்றொரு தேயத்துக்குப் போம்போது, வழியில் ஓர் இடத்தில் தங்கி, வேலைக்காரனைக் கூட அழைத்துக் கொண்டு, சமையலுக்கான கடைச்சரக்குகள் வாங்கப்போ

னுள். அப்போது வியாதியஸ்தனுகிய ராஜகுமாரன் நித்திரைபோனுன். அவ்வேளையில், அங்கு ஒரு புற்றிலிருந்த பாம்பு ராஜன்கிட்டவந்து ஒலிக்க, அவ்வொலியைக்கேட்டு, அவன் வயிற்றிலிருந்த பாம்பும் சப்தித்தது. அப்போழ்து இரண்டுக்கும் வாக்குவாதம் உண்டாக, இதற்குள்ளே அவன் பெண்டாட்டிவந்து, ஒருமரத்தின் மறைவில் நின்று, அவற்றின் பேச்சுக்களைக் கேட்டுக்கொண் டிருந்தாள்.

புற்றுப்பாம்பு வயிற்றுப் பாம்பைப் பார்த்து, "அடா துராத்மாவே! இந்த அழகுள்ள ராஜபுத்திரனை ஏன் வருத்துகிருய்?" என, வயிற்றரவு, "ஆஹாரம் நிறைந்த குடத்திலிருக்கிற என்னை நீ ஏன் நிந்திக்கிருய்?" என்றது. புற்றரவு, "துஷ்டா! கடுகு தின்ருனுல் நீ இறப்பாய்; அவன் சுகமடைவான்; இஃது ஒருவர்க்குந் தெரியாது" என்றது. உடனே அவ்வயிற்றரவு, "வெந்நீரால் உனக்கும் லயம் வரும்" என்றது. இப்படி அவ்விரண்டு ரகசியங்களையுங் கேட்டு, அவள் வெந்நீரால் புற்றுப்பாம்பையும், கடுகினுல் வயிற்றுப் பாம்பையும் கொன்ருள். இரண்டு பாம்புகளும் தம் வாயினுலேயே கெட்டன.

## 3. புறங்கூருமை

3. "பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாடல் தேற்ரு தவர்"

ஒரு காட்டில் பிங்களன் என்னும் ஒரு சிங்கமும் ஸஞ்சிவகன் என்னும் ஓர் எருதும் கூடி, மிகவும் ஒருமையாக வாழ்ந்துவந்தன. அப்போது அச்சிங்கத்தினுடைய பிரதானி புத்திரர்களாகிய காடகன் தமனகன் என்னும் இரண்டு நரிகளும் ஒன்ருெடொன்று சம்பாஷிக்கத் தொடங்கின:

தமனகன், "நாம் காட்டிலே தனித்திருந்த சிங்கத்துடனே எருதைச்* சிநேகம் பண்ணுவித்தது யானை யானது தன் மத்தகத்தைக் கொத்துவதற்கு அங்குசத்தைத் தானே எடுத்துப் பாகன் கையிற் கொடுப்பதுபோல ஆயிற்று. முன்னாள் ஆட்டுக்கடாச் சண்டையில் நரி செத்ததும், ஆஷாட பூதியின் கூட்டுறவால் சந்நியாசி பொருளிழந்ததும் எப்படி அவரவர் குற்றத்தினாலேயே சம்பவித்தனவோ, அப்படியே நம்முடைய தோஷத்தினாலேயே நமக்கு இரை கிட்டாமற் போயிற்று" என, காடகன், "நாம் இப்போது செய்யத்தக்கது என்னை?" என்றது. அதற்குத் தமனகன், "யாதொன்று போயிற்றோ அதை மறுபடி சேகரிக்க வேண்டும்; எதைச் சம்பாதிக்க வில்லையோ அதைச் சம்பாதிக்க வேண்டும்; எதிராக வரும் விக்கினங்களைத் தடுக்க வேண்டும்; என்றிப்படி ஆலோசித்துப் பண்ணுகிறவனல்லனோ மந்திரி? இப்போது பிங்கள சஞ்சீவகர்களுக்குள்ள சிநேகத்தால் நமக்கு எல்லாச் சங்கடங்களும் நேரிட்டன. இவர்களுடைய நட்பைப் பிரித்தாற்றான் நமக்கு எள்ளளவேனும் அன்னங் கிடைக்கும்" என்று சொல்ல, காடகன், "அந்தப் பிங்கள சஞ்சீவகர்களுடைய உறவைக் கெடுக்க யாராலாகும்? மணியினின்றும் ஒளி பிரிக்கப்படுமோ; இது முடியாத காரியமன்றோ?" என்றது. தமனகன், "என்ன சொல்லுகிறாய்? உபாயத்தாலாவது பராக்ரமத்தால் ஆகுமோ? எவன் புத்திமானோ அவன் பலவான். எவனுக்குப் புத்தியில்லையோ அவனுக்குப் பலமெங்கே?" என, காடகன், "நீ சிங்கத்தினிடத்திற் போ; உனக்கு மங்களமுண்டாகட்டும்" என்றது.

---

* முப்பத்திரண்டாவது கதையைப் பார்க்க.

பிறகு தமனகன் அந்தச் சிங்கம் தனித்திருந்த சமயம் பார்த்துப் போய்த் தண்டம் பண்ணி, "சுவாமி! உமக்கு இன்றைக்கு ஒரு பொல்லாங்கு நேரிட்டது; அதை நான் அறிந்து, கட்டளை யில்லாமல் விண்ணப்பம் பண்ணிக் கொள்ளலானேன்" என்றது. சிங்கம், "அஃதென்னை? சொல்" என, தமனகன், "உம்முடைய மித்திரனாகிய சஞ் சீவகன் உம்மிடத்தில் விசுவாசங் காண்பித்து, உம்முடைய ராச்சியத்தைப் பிடுங்கிக்கொள்ள இச்சித்திருக்கிறான்; இதை நீர் பொய்யென்று நினைத்துக் கோபித்தாலும், அல் லது தண்டித்தாலும், ராஜனுக்கு ஒருதுன்பம் வரும்போது, தம் நலத்தைப் பாராமல், ராஜனுக்கு நல்ல உபாயங்களைப் போதித்து, செய்யத்தக்க காரியங்களைச் செய்வித்தல் மந் திரிகளுக்கு நீதித் தொழிலாகையால், உமக்கிதைத் தெரி வித்தேன்" என்றது.

பிங்களன் இதைக்கேட்டு, ஆச்சரிய மடைந்து சும்மா விருக்க, பின்னும் தமனகன்; "நீர் அவனை முக்கிய பிர தானியாக்கினீர்; அப்படியே இருக்கட்டும்; எனக்கென்ன? ராஜாவும் பிரதானியும் சமானமாயிருந்தால், ராஜலக்ஷ்மி அவ்விருவரிலே ஒருவனைக் கைவிடுவாள்; மேலும் எப் போது ராஜன் ஒருவனையே பிரதானியாக்குகிறானோ, அப் போது அந்தப் பிரதானிக்குக் கர்வமுண்டாகிறது; அவன் சுதந்தரனாய், ராஜ்ய ஆசையால் ராஜாவைக்கொல்ல இச்சிக் கிறான்; ஆகையால், இப்படிப் பட்ட மந்திரியை வேரோடு களையவேண்டும்; இல்லாவிடின் அவனால் தீங்கு நேரிடும். இது தங்களுக்குச் சொல்ல வேண்டுமா? தாங்கள் எல்லாம் அறிந்திருக்கின்றீர்கள்; உலகத்தில் செல்வத்தை விரும்பாத வன் அரியன்" என்று சொல்லக்கேட்டுச்சிங்கம் நகைத்து, "சஞ்சீவகனிடத்தில் எனக்கு இருக்கின்ற சிநேகம்

K. M. S. Ramanathan



போகாது; மித்திரர்கள் என்ன அநியாயம் பண்ணினு லும், அவற்றை நாம் பிரியமாகவே நினைக்கவேண்டும்" என்றது. தமனகன், "இதுதான் புத்திக்குத் தோஷம்; இதனால் உமக்கு அபாயம் வரும்; எவன் சாதுக் களது புத்தியைக் கேளாமல் துஷ்டர் புத்தியைக்கேட்கிரு ஞே அவன் மருந்து தின்னுத ரோகியைப்போல விபத்தை யடைவான்; காதுக்கினிமையாயும் இதம் பண்ணுவதாயும் இருக்கிற வசனந் துர்லபம்; காதகனுடைய வசனஞ் செவிக் கினிமையா யிருக்குமாயினும் அதைக் கேட்கலாகாது" என்றது. சிங்கம், "நான் அபயங் கொடுத்து ரக்ஷித்தவன் எனக்குத் துரோகம்பண்ணுவானே? என்ன பேச்சுப் பேசு கிருய்? போ" என்றது.

மறுபடியுந் தமனகன், "துஷ்டர்கள் குணம்மாறுமோ? நாயின் வாலைக் குணக்கெடுக்கலாமோ? எட்டி மரத்தை அமுதம் வார்த்து வளர்த்தாலும், அதற்குத் தித்திப் புண் டாகுமோ! எப்படியும் பிறர்க்கிதம் பண்ணுவது சாதுவுக்கு முக்கிய தருமம்; ஆகையால், தாங்கள் கேளாமலிருந்தும், இவ் விருத்தாந்தத்தைச் சொன்னேன்; இனிமேல் என் மேற்குற்றமில்லை; ஒருவேளை ராஜா பாமரர்களுடைய புத்தி யைக் கேட்டுச் சங்கடப் படும் போது, காரியக் காரர்மேல் குற்றஞ் சுமத்துகிருன்; ஆதலின் நான் சொன்னேன்" என்று சொல்லிச் சும்மா இருந்தது. அதற்குச் சிங் கம், "இதை நான் சஞ்சீவகனுக்குச் சொல்ல வேண்டும்" எனத் தமனகன், "அவனுக்கு இதைச் சொன்னுல், அவன் சாக்கிரதைப் பட்டு, வேரோர் உபாயத்தினுற் பொல்லாங்கு தேடுவான்; ஆகையால், இதை அவனுடன் சொல்லாதிருப் பதே யோக்கியம்; ராஜாவின் மந்திராலோசனை ரகசியமா கவே இருக்கவேண்டும்" என்றது.

இதைக் கேட்டு மறுபடியும் சிங்கம். "அந்தச் சஞ்சீவ கன் விரோதப்பட்டு என்ன செய்ய மாட்டுவான்? அவன் சாமர்த்தியம் எவ்வளவு?" என்று சொல்ல, நரி, "நாம் அவனை அறியமாட்டோம்; அவனது பராக்கிரமுஞ் சுபா வமும் நமக்கு எப்படித் தெரியும்? ஒருவன் குணத்தை யறியாமல் அவனைச் சேர்க்கலாகாது" என்றது. சிங்கம், "அந்த சஞ்சீவகனுடைய துஷ்டசுபாவம் இன்னபடி யென்று எனக்குத் தெரிந்தால், அப்போது நிசம்" என்று சொல்ல, தமனகன், "அந்த எருது தங்களைக் கொல்ல நினைத்துத் தன் கொம்புகளை முன்னிட்டுக் கொண்டு, உமது சந்நிதியில் வரும்போது, அது தங்களுக்குத் தெரியவரும்" என்று சொல்லிற்று. பின்பு எருதினிடம்போய், தன் மனத்தில், மிக்க வியசனமிருப்பதாகத் தோற்றுவித்தது.

அப்போது சஞ்சீவகன், "மித்திரா! சுகமா?" என்று கேட்கத் தமனகன், "சேவகனுக்குச் சுகமெங்கிருந்து வரும்? சம்பத்தும் விபத்துங் கூடவே யிருக்கின்றன; ராஜா வுக்குப் பிரியமா யாரிருக்கிறார்கள்? யாசகன் சம்மானத்தை அடைவானோ? இந்தக்காலமேது? தனக்கு மித்திரன் யார்? தன் வலி யெவ்வளவு? என்று எப்போதும் விசாரித்துக் கொண்டிருக்க வேண்டும்" என்றது. இதைக் கேட்டுச் சஞ் சீவகன், "இப்படி ஏன் சொல்லுகிறாய்?" என, தமனகன் "ராஜகாரியத்திலுண்டாகிய வஞ்சகத்தைமற்றொருவரோடு சொல்லலாமோ? ராஜா அறிந்தாற் கொல்லுவன்; ஆனாலும் நீ என் நம்பிக்கையாலே சிங்கத் தோடு சிநேகம் பண்ணின தால், உனக்குச் சொல்லுகிறேன்; அந்தச் சிங்கம் உன் மேல் மிகவுங் கோபங் கொண்டு, உன்னைக் கொன்று, தன் னுடைய சேனைக்கெல்லாம் விருந்திட நினைத்திருக்கிறது".

என்று சொல்ல, அதைக் கேட்ட வுடனே சஞ்சீவகன் வருத்தத்தோடும் ஆலோசித்துக்கொண் டிருந்தது.

தமனகன், "வேறே ஆலோசனை யென்ன? யாதொன்று சம்பவித்ததோ அதற்குத் தக்கதாக நடக்க வேண்டும்" என, சஞ்சீவகன், "நீ சொன்ன வெல்லாஞ் சரிதான்; உலகத்திலும் அப்படியே இருக்கின்றன; சாதாரணமாய் ஸ்திரீகள் துர்ச்சனர்களுக்கு வசமாயிருக்கிறார்கள்; ராஜாக்கள் துஷ்டர்களைப் பரிபாலிக்கிறார்கள்; துஷ்டனுடனே மிகவுஞ் சிநேகித்தால், அவன் விபரீதமாக நினைக்கிறான்; குருடனுக்குக் கண்ணாடியைக் காண்பித்தாலும், செவிடன் காதில் உபதேசித்தாலும், அவர்கள் விபரீதமாகவே நினைப்பார்கள். துஷ்டனும் அப்படியே விபரீதமாக நினைக்கிறான். எப்படிச் சந்தனமரம் பாம்போடு கூடியிருக்குமோ எப்படித் தாழை முட்களோடு கூடியிருக்குமோ அப்படியே பெரும்பாலும் ராஜாக்கள் துஷ்டர்களால் சூழப்பட்டிருக்கிறார்கள். ஆகையால் இப்படிப்பட்ட பொல்லாங்கு நமக்கு நேரிட்டது" என்றது.

இதைக் கேட்ட தமனகன், "அந்தச் சிங்கத்துக்கு வாய்ப் பேச்சு மாத்திரம் தித்திப்பே யல்லாமல் மனம் மிகவுங் கடோரந்தான்; பூர்வம் பிரமா கடலைக் கடப்பதற்குக் கப்பலை உண்டாக்கினான்; இருட்டைப் போக்கடிக்க விளக்கைச் சிருஷ்டித்தான்; யானையை அடக்க அங்குசத்தை நிருமித்தான்; துஷ்டர்களுடைய மனமடங்கும்படி யாதொன்றும் செய்யாமற் போனான்" என்றது. இவை யெல்லாங் கேட்டுச் சஞ்சீவன் பெருமூச் செறிந்து, பெரிய பொல்லாங்கு நேரிட்டது; இதினின்றுந் தப்பித்துக் கொள்ள எனக்குச் சாமர்த்தியமில்லை; எமனுடைய வாயில் அகப்பட்டவன் எப்படித் தப்பிப் போவான்? வஞ்சனை பண்ணு

கிற துஷ்டர்கள் ஒருவனிடத்திற் குற்றமில்லா திருப்பவும், அவனைக்கொலை செய்கின்றார்கள்: எங்கே கீழ்மக்கள் இருக்கின்றனரோ, அங்கே சுகமிராது. பிராணனுக்கு நாசம் வருமென்றே நினைக்கவேண்டும். இவ்விடத்திலும் அப்படியேயிருக்கிறது. துஷ்டர் கையில் அகப்பட்டுச் சும்மா இறப்பதைக்காட்டிலுஞ் சண்டை செய்வதே யோக்கியம். ஒருவன் சண்டை முனையிற் செத்தால் சொர்க்கம் அடைகிறான். சத்துருவை ஜயித்தால் ராஜ்யம் அடைகிறான். ஆதலால், சூரர்களுக்குச் சாவும் பிழைப்பும் சமானம்" என்றது.

அதைக்கேட்டுத் தமனகன், "பகைவர்களுடைய பராக்கிரமத்தை அறியாமல் எவன் பகைத்துக்கொள்ளுகின்றானோ, அவன் அவமானம் அடைவான்; அஃது அச் சிங்கத்திற்கு அகங்காரத்தினால் தெரியவில்லை" என்றது. சஞ்சீவகன் கேட்டு, தமனகனைப்பார்த்து, "நல்லது, அந்தச் சிங்கத்தின் சண்டைக் குறிப்பு எப்படி இருக்கும்? சொல்" எனத் தமனகன் "எப்போது அவன் காதுகளை நெறித்துக்கொண்டு, வாலைத்தூக்குவானோ, அப்போது கொல்ல நினைத்தானென் றறியவேண்டும், அக்காலத்தில் அப்படியே நீயும் அவனுக்கு முன்னே யிருக்கவேண்டும். சுத்த வீரனாகிய உனக்குத் தெரியாதா? எல்லாந் தெரிந்தவர்களுக்குச் சொல்வானேன்?" எனச்சொல்லிவிட்டுத் தமனகன் மறுபடி கரடகனிடத்திற்குப் போயிற்று.

அப்போது கரடகன், "என்னாயிற்று? சொல்" எனத் தமனகன், "காரியம் முடிந்தது; இருவருடைய சிநேகத்தின் வாயிலும் மண் விழுந்தது; இப்போது நான் சிங்கத்தின் கோபக்குறி இப்படி இருக்குமென்று சஞ்சீவகனுக்குச் சொன்னபடியே சிங்கத்தைச்செய்விக்கிறேன்" என்று, அதனிடம்போய், அப்படியே அதைச் செய்வித்தது.

பிறகு சஞ்சீவகன் சிங்கத்தினிடம் வந்து பார்க்க, தனக்குத் தமனகன் முன் சொன்னபடியே அஃதிருக்கக்கண்டு மிகவும் வியசனமடைந்து, பராக்கிரமத்தினுலேயே பிராணனை விடவேண்டுமென்று நிச்சயித்து, யுத்தத்திற்கு ஆரம்பிக்கவே, இரண்டுக்கும் பெரிய சண்டை விளைந்தது.

கரடகன் அதைப்பார்த்து, "தமனகா! துஷ்டா! உன் சேர்க்கையால் ராஜாவுக்கும் சிநேகனுக்கும் சண்டையுண்டாயிற்று; ராஜநீதியிற் சாம தான பேத தண்டமென்னும் நான்கு உபாயங்களிருக்கின்றன; அவைகளிற் சாமமென்னும் உபாயம் முக்கியமானது; அதனுற் காரியசித்தி யுண்டாவதுபோல மற்றவைகளால் உண்டாகாது: பகையிருந்தாலும் சாமோபாயத்தாலே போம்; இப்படி இருக்கையில், நீ ராஜாவைப் பெரிய பொல்லாப்பில் வீழ்வித்தாய்; ராஜாக்களிற் சிலர் ஈனர்களுடைய புத்தியைக் கேட்டுச் சங்கட மடைகிறுர்கள்; ஆகையாற் குணவந்தர்களுடைய கூட்டுறவு ராஜாக்களுக்கு இருக்கவேண்டும்; கபடியாக இருக்கிற பிரதானி புத்திசாலியானுலும், அவன் ஒரு போதும் ராஜாவண்டையில் இருக்கலாகாது; மற்றும் தானே சம்பத்தை அடையவேண்டு மென்று நினைத்து, ராஜாவினிடத்தில் வேறொருவன் சேரலாகா தென்று இச்சிப்பவனும் ராஜாவுக்கு உபயோகியாகான்; பலபெயர் சமர்த்தர்கள் ராஜாவினிடத்தில் இருந்தால், ராஜா பிரகாசிப்பான்; ஆசைக்காரரும் துஷ்டருமாகிய இவர்களுடைய கூட்டுறவால் ராஜா பிரகாசிக்க மாட்டான்; தன்னைவிட ராஜாவினிடத்தில் வேறொருவனு மிருக்கலாகா தென்று எவன் இச்சிக்கிறுனே, அவனை ராஜாவுக்குச் சத்துருவென்று நினைக்கவேண்டும்; அப்படியே நீ இந்தத் தீங்கு விளைத்தாய்; யசமானனுடைய தயை கிடைத்தாற்

சேவகர்கள் கர்வியாமல், மிகவும் அடக்கமாக இருக்கவேண்டும்; நீ அதைவிட்டு விபரீதமாக நடந்தாய். பிதாவைப் போலிருப்பான் புத்திரனென்பதை நீ பொய்யாக்கினாய்; இப்போது உனக்கு நான் என்னசொல்வேன்? பாம்பை வெகு நாள் வளர்த்தாலும், அஃது எப்படியும் வளர்த்தவனையே கடிக்கும்; ஆகையால் எனக்கு உன்னிடத்தில் பயந் தோன்றுகிறது; சொன்ன பொருளைத் தெரிந்து கொள்ளாதவன் கல்லுக்குச் சமானம்; அவனுக்கு உபதேசித்துப் பலனில்லை" என்று சொல்லிக் காடக தமனக நரிகளிரண்டும் பிங்களனிடத்திற்குப் போகும்போது, சிங்கம் சஞ்சீவகனோடுகூடச் சண்டை பண்ணி, அதைக் கொன்றுவிட்டு, வியசனமாய் உட்கார்ந்திருந்தது.

இதைக் கண்டு தமனகன் ராஜாவைப்பார்த்து, "சுவாமீ! தாங்கள் சத்துருவைக் கொன்று துக்கப்படுகிறீர்கள்; இது நியாயமன்றே; சத்துருவைக் கொல்லவேண்டுமென்று சாஸ்திர மிருக்கிறது, பிதாவானாலும், பந்துவானாலும், புத்திரனானாலும், மித்திரனானாலும் அவர்களில் எவன் தன்னைக்கொல்லப் பிரவர்த்திக்கிறானோ, அவனை ராஜா கொல்லவேண்டும்; தயையுள்ள ராஜனும், எல்லாம் பக்ஷிக்கிற பிராமணனும், சுதந்தரையாயிருக்கிற பெண்சாதியும், துஷ்டசிநேகிதனும், விபரீத சேவகனும் அஜாக்ரதையுள்ள மந்திரியும், நன்றியறியாதவனும் இருக்கலாகாது. மேலும், மெய், பொய், கடுமை, மென்மை, கொலை, தயை, உதாரத்துவம், உலோபத்துவம், பலவழியாகத் திரவியம் சம்பாதித்தால், வெகு பெயருடைய சிநேகம் ஆகிய் பல குணங்கள் ராஜாவுக்கு இருக்கவேண்டுமென்று ராஜநீதி முறையிடுகிறது; அப்படியே தாங்கள் இது செய்தீர்கள்",

என்று சொல்லித் தமனகன் சிங்கத்தைச் சந்தோஷிப்பித்தது. பிறகு சிங்கம் அந்தக்காட்டில் முன்போலத் தன் ராஜ்யத்தை, அனுபவித்துக்கொண்டு, சுகமாயிருந்தது.

## IV. தீவினையச்சம்

4. "தீயவை செய்தார் கெடுதனிழறன்னை
வீயா தடியுறைந் தற்று"

மீன்களையே மிகுதியுந்தின்று வளர்ந்த ஒருகிழக்கொக்கானது குளக்கரையில் வந்து வியசனமாய் நின்றுகொண்டிருந்தது. அப்போது அதிலிருந்த மீன்கள் கொக்கைப் பார்த்து, "நீஉன் ஆஹாரத்தை விட்டுச் சும்மா இருப்பானேன்? சொல்" என, கொக்கு, "நான் மீன் தின்பது மெய்தான்; ஆயினும், இன்றைக்கு இங்கே செம்படவன் வந்து எல்லா மீன்களையும் பிடிக்க இருக்கிறான்; அதனால் என்னுடைய இரைகளெல்லாம் நிர்மூலமாய்ப் போகுமே என்று ஏங்கிச்சும்மா இருக்கிறேன்" என்றது. இதைக்கேட்டு மீன்களெல்லாம் கூட்டங்கூடி, "எவன்நமக்கு அபாயம்சொன்னானோ, அவனே உபாயமுஞ் சொல்லுவான்" என்று ஆலோசித்துப் பிறகு கொக்கைப் பார்த்து, "நீயே எங்களை இப்போது ரக்ஷி" என்றன.

கொக்கு, "நான் செம்படவனோடு சண்டை பண்ணச் சமர்த்தனல்லேன்; மேலும், நான் கிழவன். உங்களை வேறோரிடத்திற்குக் கொண்டுபோவேன். அதனால், எனக்கும் இந்தத் தள்ளாமையான காலத்தில் பரோபகாரி யென்கிற பெயரும் வரும்; நீங்களும் வெகுகாலம் பிழைத்திருப்பீர்கள்" என்றது. அப்போது, அந்தப் பேதைமையுள்ள மீன்களெல்லாம் பிராணனைக் காப்பாற்றும் பொருட்டு,

அதன் பேச்சை நம்பி, "நல்லது, அப்படியே கொண்டு போகவேண்டும்" எனக் கெஞ்சின. பிறகு, அந்த வஞ்சனை யுள்ள கொக்கு, நடைக்கு ஒவ்வொன்றாகக் குளத்திலிருந்த மீன்களையெல்லாம் மூக்கினால் கொத்திக்கொண்டுபோய், சில மீன்களைத் தின்று, மற்ற மச்சங்களை ஒரு பெரிய பாறையின்மேல் உலரவைத்தது.

பிறகு, அந்தக் குளத்திலிருந்த ஒரு நண்டு இக்கொக்கைப் பார்த்து, "ஓ ஜீவகாருண்யனே! என்னையும் அவ்விடத்திற்குக் கொண்டுபோகவேண்டும்" என வேண்டிக்கொள்ள, கொக்கு, "வருங்காலத்தில் எதுவும் வலியவரும்" என்று, உள்ளுக்குள்ளே சந்தோஷித்து, அப்படியே நண்டையுங் கொத்திக்கொண்டு போகும்போது, நண்டு வழியில் மீன்கள் செத்துக்கிடப்பதையும், மீன் முட்கள் சிந்திக்கிடப்பதையும், மீன்கள் பாறையின்மேல் உலர்வதையும் பார்த்து, "ஐயோ! பல மீன்களையுங் கொன்று, இந்தக் கொக்கு நம்மையுங் கொல்ல வந்தது! நம்மை இது கொல்வதற்கு முன்னமே நாம் இதனைக் கொல்வோம்" என்று, ஒருபாயம் நினைத்து, கொக்கைப் பார்த்து, "நீ என்னைவருத்தப்பட்டு எடுத்துக்கொண்டு வந்தாய்; அங்கே என்னுடைய பரிவாரங்கள் இருக்கின்றன; ஆகையால், அங்கே என்னை நீ மறுபடியுங் கொண்டுபோனால், அவைகளையுங் காண்பிப்பேன்" என்றது. அதைக் கட்டுக்கு கொக்கு பேராசைப்பட்டு, திரும்பி அந்தக் குளத்துக்கு நேரே வருகையில், நண்டு கொடுக்கினால் அந்தக்கொக்கின் கழுத்தை இரண்டு துண்டாக, நறுக்கி குளத்தில் வீழ்ந்து சுகமாக வாழ்ந்தது.

## V. கூடா ஒழுக்கம்.

### 5. "படிற்றொழுக்கம் எற்றேற்றேன் றேதம் பலவும் தரும்."

சம்பகாவதி நகரத்திற் கிழவனாயிருந்த தத்தனென்னும் ஒருசாவகாரியின் பெண்சாதி அந்நிய புருஷர்களிடத்தில் ஆசைகொண் டிருக்கையில், அவ்வவாவைக் கண்ட ஒருவிடன் அவளைக்கண்டு, "பெண்ணே! என் பெண்சாதி இறந்த படியினால்,மிகவுந் துக்கித்துக்கொண் டிருக்கிறேன்: நீ என் துக்கத்தைப் பரிகரித்தால், உனக்குப் புண்ணியமுண்டு, உன்னைப் பார்த்து மிகவும் ஆனந்த மாயினேன்" என்றான்.

அதைக் கேட்டு அவள், "உன் மனத்தில் இங்ஙனமிருந்தால், என் கிழக் கணவன் பணத்தை யெடுத்துக் கொண்டு நீயும் நானும் பரதேசத்திற் போய் வாழ்ந்திருப்போம்" என்றாள். அவன், "மிகவும் நல்ல காரியஞ் சொன்னாய்; நீ கணப் போதானாலும் தடை யில்லாமல், இக்காரித்தில் முயற்சி செய்யலாம்" என்றான். அவள் அப்படியே மறுநாள் வெளிச்சேறும் வேளையில் வெகு திரவியங்களை யெடுத்துக் கொண்டு, ஸங்கேதப்படி இருவருந் தேசாந்தரம் போகையைக் குறித்து இருகாத வழி போனார்கள். அங்கே ஒரு போாற்றைப் பார்த்தவளவில், அவன், இவளை யாராயினுந் தேடிக்கொண்டு "பின்னே ஓடி வந்தால், பணத்தையும் இவளையுங் கொண்டுபோகிறதுமன்றி, நம்முடைய ஜீவனையும் வாங்குவார்கள்; ஆதலால், இவளை விட்டுவிட்டுப் பொருளை மாத்திரம் எமாற்றிக் கொண்டு போகவேண்டும்" என்று மனத்திலேயே ஆராய்ந்து, நிச்சயித்து, பின்பு அவளை நோக்கி, "இந்நதி மிகவுங் கடுமையா

னது; தண்ணீரும் நிரம்ப வருகின்றது; ஆதலால், முன்னே எல்லாவற்றையும் அக்கரையில் வைத்து விட்டுப் பின்பு உன்னை நோவாமற் கொண்டு போய், அக்கரை சேர்க்கிறேன்" என்றான்.

அவள்,"உன் விருப்பத்தின்படியே செய்"என,அவன் அவளிடத்திருந்த பணமுழுவதும் வாங்கிக் கொண்டு, "என்பிரிய நாயகியே! உன் புடைவையையும் அவிழ்த்துக் கொடுத்தாயானல், உன்னை மறுபடி கொண்டு போதல் வருத்தமாயிராது" என்றான். அவள் அப்படியே அவிழ்த்துக் கொடுக்க, அதையுங் கைக்கொண்டு, "இவள் வெட்கத்தினல் அங்கிங்கோடி, யாரோடுஞ் சொல்லமாட்டாள்" என்று எண்ணிக் கொண்டு, அபகரித்த பொருளோடுகூடப் போய் விட்டான்.

பிறகு அவள் அதைப் பார்த்துத் தன் மனத்தில் வியாகுலித்து, "நாம் செய்த வேலைக்குப் பலன் உடனே தானே கிடைத்தது. இதை அக் கிழட்டுப்பிணம் அறிந்தால், என்ன செய்யுமோ?" என்று எண்ணிக் கொண்டு, நாணத்தினலே தண்ணீரிலிறங்கி உட்கார்ந்துகொண்டிருந்தாள். அப்போது ஓர் இறைச்சித் துணிக்கையை வாயிற் கௌவிக்கொண்டு ஓடிவந்த ஒருநரி தண்ணீரினின்றுந் துள்ளிக் கரையில் விழுந்த ஒரு மீனைப்பிடிக்க நினைத்து, வாயிறைச்சியைப் பூமியிற் போட்டுக் கௌவப் போகையில், அம் மீன் தண்ணீரிற் குதித்து விட்டது. நரி திரும்பி, அத் தசையண்டைவர, அதற்குள்ளே, அதை ஒரு பருந்து அறைந்து கொண்டுபோக,இதைப் பார்த்திருந்த அம்மாது சிரித்து, "மாமிசமும் மச்சமும் போன பிறகு, வானத்தைப் பார்த்து ஆவதென்ன?" என்றாள்.

அதைக் கேட்டுச் சம்புகம் குரோதத் தோடே, "எனக்கு நேரிட்டது போகட்டும்; நீ உன் பதியையும் ஜாரனையும் இழந்து, இப்போது நிர்வாணத்தோடு என்ன எண்ண மிடுகிறாய்?" என்றது. இப்படி இருவர்க்கும் வாக்குவாதம் நடந்துகொண்டிருக்கையில், இஃது அவள் கணவனுக்குத் தெரிந்து, அவன் அவளை மிகவுந் தண்டித்து ஓட்டி விட்டான்.

## VI. கள்ளாமை

6. "களவின்கண் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமம் தரும்"

துஷ்டபுத்தி ஸுபுத்தி யென்ற இரண்டு செட்டிப் பிள்ளைகள் பணஞ் சம்பாதிக்கிறதற்காகத் தேசாந்தரம் போனார்கள். அவ்விடத்தில், ஸுபுத்திக்குப் பூமியில் ஒரு பணப்புதையல் அகப்பட்டது. அதைச் சிநேகத்தினாலே ஸுபுத்தி துஷ்ட புத்தியுடனே சொல்ல, துஷ்டபுத்தி "இந்தத் திரவியத்தை இங்கேயே புதைத்து வைத்து விட்டுக் கொஞ்சம் பணம் எடுத்துக் கொண்டு போவோம்" என்றான். ஸுபுத்தி சிநேகத்தினால் அதற்குச் சம்மதித்து, அதிற் கொஞ்சம் பணம் எடுத்துக் கொண்டு, மற்றைப் பணத்தை ஒரு மரத்தடியிற் பள்ளந் தோண்டி, அதிலே புதைத்து வைத்தான்.

பின்பு வீட்டுக்குப்போய் இருவரும் பழையபடி சிநேகமா யிருக்கையில், ஒரு நாள் துஷ்டபுத்தி, தனியே போய், அந்தப் பொருளை யெல்லாம் எடுத்துக்கொண்டு வீட்டுக்கு வந்து விட்டான். பிறகு சிலநாள் கழித்துத் துஷ்டபுத்தி ஸுபுத்தியைப்பார்த்து, "அந்த நம்

முடைய திரவியத்தைக் கொண்டு வருவோம்'' என்றான். இருவரும்போய், அந்த இடத்திற் பார்க்குமளவில், ஆங்கு ஒன்றும் இல்லாமையால், துஷ்டபுத்தி மிகவும் வருத்தத்தோடு ஸுபுத்தியைப் பார்த்து, "இங்கிருந்த பணத்தை நீயே கொண்டு போனாய்; மேலும், கபடமாய் வருத்தப் படுகிறாய்'' என்று சொல்லிக் கலகப்பட்டு, அதை ராஜாவுக்கு அறிவித்தான்.



பிறகு, ராஜா நியாயாதிபதியை அழைப்பித்து "இதைப் பஞ்சாயத்தில் தீர்க்கவேண்டும்'' எனக்கட்டளை யிட்டான். அவன், "ஐந்து நாளைக்குள்ளே தீர்த்துப் போடுகிறேன்'' என்று ராஜாவின் முன்னே கெடு வைத்துக் கொண்டுவந்து, பஞ்சாயத்துக்கு ஆரம்பித்தான். அப் போது, துஷ்டபுத்தி, "எனக்குச் சாக்ஷி யிருக்கிறது; அந் தச் சாக்ஷியை இப்போதே கேட்கலாம்'' என்றான். பஞ்

சாயத்தார், "உன் சாக்ஷியை நாளைக் கொண்டுவா" என்றார்கள்.



பின்பு துஷ்டபுத்தி வீட்டுக்குப்போய்த் தன் தகப்பனுடனே, "அப்பா! உம்முடைய ஒரு பேச்சால் எனக்குப் பதினாயிரம் வராகன் வரைக்கும் கிடைக்கும்" என்றான். கிழவன் "எப்படிக்கிடைக்கும்? சொல்" என, துஷ்டபுத்தி, "நீர் மரப்பொந்தில் இராத்திரிக்குப் போய் உட்கார்ந்திருக்க வேண்டும்; அங்கே நியாயாதிபதி முதலானோர் வந்து, 'இங்கிருந்த பணத்தை யார் கொண்டுபோனார்கள்?' என்னும்போது, நீர், 'ஸுபுத்தி கொண்டு போனான்' என்றால், என் காரியமாகும்" என்றான். இதைக் கேட்டுப் பிதா, "பொல்லாங்கு நேரிடுகிற காரி

யத்தைப் பண்ணி, சுகமடைய வேண்டு மென்று இச்சிக் கிறது பிசகு" என, துஷ்டபுத்தி பிதாசொன்னதைக்கேளா மல், அவனைவலியில் இழுத்துக் கொண்டுவந்து, மரப்பொந் தில் உட்காருவித்து, விடியற்காலத்தில் நியாயாதிபதி முத லானவரையும் ஸுபுத்தி முதலானோரையும் அவ்விடத்து க்கு அழைத்துக்கொண்டுபோய், "சாக்ஷி, இந்த மரத்தைக் கேளுங்கள்" என்றான்.

அப்போது, அந்த மரத்திலிருந்து, "இங்கிருந்த பணம் முழுதும் ஸுபுத்தியே கொண்டு போனான்" என்று ஒரு சத்தம் புறப்பட்டது. ஸுபுத்தி, "இஃது என்னவோ மோசமா யிருக்கிறது! இங்கே ஒரு பிராணியுமில்லாமல், தொனி எங்கேயிருந்து புறப்பட்டது! இது தெய்வீகமா யிருந்தால், மெய்யன்றோ சொல்லவேண்டும்?" என்று இப் படித் தனக்குள் எண்ண மிட்டுக்கொண்டு, அந்த மரத்தின் மேலேறிச் சோதிக்கையில், அதில் ஒரு பொந்து காணப் பட்டது! உடனே, "இங்கே கிருத்திரிமம் இருக்கும்" என்று எண்ணி, அங்கேநெருப்பு மூட்டிப் பற்றுவித்தான்.

உள்ளே யிருந்த கிழவன், பாதிவேகிறமட்டும் பல்லைக் கடித்துக்கொண்டிருந்து, பொறுக்கப் போகாமற் போன தும், அலறிக்கொண்டு, வெளியே வந்துவிழுந்தான். அப் போது அங்கிருந்தோர், "இஃதென்ன? இஃதென்ன?" எனக் கேட்க, கிழவன், "என்பிள்ளை துஷ்டபுத்தி, கபடத்தி னால் என்னைப் பலாத்காரமாகக் கொண்டுவந்து, இங்கே வைத்தான்" என்று சொல்லி இறந்துபோனான். நியாயாதி பதி இதைப்பார்த்து, ராஜாவுக்கு விண்ணப்பம் பண்ண, ராஜா துஷ்டபுத்தி வாயினாலேயே எல்லாம் அறிந்து கொண்டு, அவனைக் கழுவிலேற்றினான்.

## VII. மெய்யுணர்தல்.

7. "ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர்வு இல்லாத வர்க்கு"

ஒரு தேசத்தில் மித்திரசர்மா என்னும் பிராமணன், மாசிமாதத்தில் யாகஞ் செய்யவேண்டிப் பசுஸம்பாதிப்ப தற்காக வேருேர் ஊர்க்குப்போய், ஒருவனைப் பசுக்கேட்டான். அவன், இவன் நற்காரியத்தைக் குறித்துக் கேட்கிருன் என்று, அதற்கு உடம்பட்டு, நேர்த்தியான ஒரு பெரிய ஆடுகொடுத்தான். அதை அவன் வாங்கிக்கொண்டு வருகையில், அவ்வாடு இங்கும் அங்கும் ஓடத்தொடங்க அதைத் தோளின்மேற் போட்டுக்கொண்டு நடந்தான்.

அதைச் சில வஞ்சனைக்காரர்கள் தூரத்திலிருந்து பார்த்து, "இப்பார்ப்பானை வஞ்சித்து, அந்தப்பசுவை வாங்கிக் கொண்டோமானுல், நாமெல்லாரும் பசிதீர்த்துக் கொள்ளலாம்" என்று ஆலோசித்து, அவர்களில் ஒரு தூர்த்தன் வந்து,"ஓ! நித்தியாக்கினி வளர்க்கிற பிராமணு! நீ சீலனுயிருந்தும்,இப்பழிப்பான காரியத்தை ஏன் பண்ணுகிருய்? மிகவும் ஈனமுள்ள நாயைத் தோண்மேல் எப்படிக் கொண்டு வருகிருய்? நாய், கோழி, சண்டாளன், கழுதை ஆகிய இவைகளைத் தொடலாகாதென்று சாஸ்திரம் இருக்கிறதே"என்று சொன்னுன்.கேட்டுப்பிராமணன் கோபித்து "நீ யாகபசுவை நாயென்று எப்படிச் சொல்லுகிருய்? நீ கண்கெட்டையா? என்? ஆ!" என, தூர்த்தன் "பிராமணு! கோபியாதே; சுகமாய்ப்போ" என்ருன்.

பிறகு பிராமணன் சிறிதுதூரம் நடந்துபோக, மறுபடி இரண்டாந் தூர்த்தன் வந்து, "ஓ அந்தணு! இக்கன்

றின்மேல் உனக்கு என்ன பக்ஷமிருந்தாலும், செத்தபிறகு அதைத் தோளின்மேல் எடுத்துக்கொண்டு போதல் சரியன்று. செத்த மிருகங்களைத் தொட்டாற் சாந்திராயணத்தையும் பஞ்சகவ்யத்தையு மல்லாமல் அந்தத் தீட்டுப்போகாது. இப்படிக்கொத்த நிஷித்தத்தைத் தோள்மேல் ஏன் சுமந்துபோகவேண்டும்?'' என்றான். அப்போதும் அந்தப் பிராமணன் கோபித்து, அப்படியே சொல்லிவிட்டுப்போகத் தொடங்கினான்.

உடனே மூன்றாங்கபடி எதிரிட்டு, "ஓ, ஐயனே! கழுதையைத் தீண்டுகிறவனுக்கு ஸசேல ஸ்நாநம்சொல்லியிருக்க, நீ அதை எப்படிக் கொண்டுபோகத் துணிந்தாய்?'' என, அந்தணன், "இந்த ஆட்டைக்குறித்து மனிதர்கள் பலபல விதமாகத் தர்க்கிக்கிறபடியால், இஃது ஏதோ ஓர் இராக்கதனா யிருக்கும்'' என்று எண்ணி, அதைப் பூமியில் விட்டு விட்டுத் தன் வீட்டுக்குப் போனான். பின்பு அவ் வஞ்சகர்கள் அதைக்கொன்று தின்றார்கள்.

### 8. "காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன் நாமம் கெடக்கெடும் நோய்''

ஓர் அடவியில் இருந்த காளகேசரி என்னுஞ் சிங்கத்துக்குத் தேகம் ஏதோ குணமில்லா திருந்தமையால், தூசரனென்னும் நரியைப்பார்த்து, "பிரதானியே! இன்றைக்கு எனக்கு எங்கும்போகக்கூடாது; நீயே போய், யாதாயினும் இரைகொண்டுவா''என்றது. நரி நாலண்டையும் ஓடித் திரிகையில், ஒருகழுதையைப்பார்த்து, "மாமா! கும்பிடுகிறேன்; நீ இப்போது மிகவும் இளைத்துப் போயினாய்'' என்றது. அப்போழ்து கழுதை, "மருமானே! என்ன சொல்வேன்! எனக்குத் தலைவன் வண்ணான்; அவன்

அத்தியந்தங் கண்டகன்; என்மேற் பெருஞ் சுமைகளைப் போட்டுக் கொல்லுகிறதேயன்றி வயிற்றுக்குப் புல்லுச் செத்தை போடுகிறதில்லை; புழுதியிலிருக்கும் அறுகங் கட்டையைத் தின்றுகொண்டிருக்கிறேன்; அஃது உடம்புக்கு எங்ஙனம் புஷ்டி கொடுக்கும்? என் பிழைப்பொரு பிழைப்பா?" என்றது.

நரி, "இப்படி யிருந்தால், நீ என்னோடு கூடவா; ஆற்றங்கரையிற் பச்சைப்புல் நிரம்ப இருக்குமிடம் காண்பிக்கிறேன்" என, அதைக்கேட்டுக் கழுதை, "அவ்விடம் நன்றாயிருக்கும்; அங்கே நான் ஒன்றியாக எப்படி யிருப்பேன்" என்றது. தூசரன், "மாமா! அங்கே புருஷனில்லாமல் விஸ்தாரமாய்த் திரிகிற பெட்டைக் கழுதைகள், 'எங்களுக்குத்தக்க புருஷன் அகப்பட்டாற் கொண்டுவரவேண்டும்,' என்று எனக்குச் சொல்லி யிருக்கின்றமையால், உனக்கு உரைத்தேன்" என்றது. அதைக்கேட்டு ஆசையினாற் கர்த்தபம் பின்னே போக, அதைக்கண்டு, சிங்கம் பாய, உடனே நீள்செவியன் ஓட்டம் பிடித்தது.

பின்னர் நரி கோபித்து, கண்டீரவத்தைப் பார்த்து, "இன்றைக்கு உன்வீரத்தை நான் பார்த்தேன்; உன்முன் எதிர்ப்பட்ட கழுதையும் ஓடிப்போயிற்று;இனி நீயானையை எவ்வாறடிப்பாய்?" என்றது. அதைக் கேட்டுக் காளகேசரி தலையிறக்கமாயிருக்க, மீட்டும் நரி, "மற்றுமொருதரம் நான் அவனை உன்னண்டை கொண்டுவருகின்றேன்; அப்போதாயினும், தவறாமல் அவனை அடிக்கவேண்டும்" என்று சொல்லி, நீள்செவிய னருகே போய், "நீ யேன் ஓடிப் போகின்றாய்?" என்றது.

கழுதை, "மருமானே! என்னை யிந்நேரம் எமன்வாயிற் கொடுத்திருப்பாய்; அதிர்ஷ்டத்தினாற் பிழைத்தேன்; வச்சி

ரம்போலும் நகத்தையுடைய அப்பிராணி யார்?" என்றது. நரி நகைத்து, "அம்மான்! அந்தப் பெண்கழுதை உன்னைப் பார்த்து, மிதமற்ற களிப்போடு உன்னண்டை வருகையில், நீயோடிப் பயந்தோடினாய்; அவள், 'இப்போது நீர் செவியன் என்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளாவிட்டால், நான் உயிர்வைத்திரேன்' என்று நிச்சயித்திருக்கின்றபடியால், நீ விரைவாய் வரவேண்டும்; வாராவிடிற் பெண்கொலை நேரிட்டுக் காமதேவனாலுஞ் சபிக்கப் படுவாய்; அவன் முத்திரை சர்வார்த்த சாதனமான ஸ்திரீ வடிவமாயிருக்கின்றது. அதை அவமானம் பண்ணுகிறவர்களைச் சடைச் சாம்பலாண்டி யாக்கிக் காமதேவன் காட்டிற்கு அனுப்புவான்" என்று உரைக்கக் கேட்டு குண்டுக் கழுதை அதன் பின்னே போயிற்று.

சிங்கந் தட்சணமே அதை அடித்து, நண்டைச் சுட்டு நரியைக் காவல் வைத்தாற்போல, அதற்கு நரியைக் காவல் வைத்து, நீராடப்போக, அதற்குள்ளே நரி அதன் ஈரலையுங் காதையுந் தின்றது. பின் சிங்கம் வந்து பார்க்கையில் ஈரலுங் காதுமில்லாமையால், சம்புகத்தைப் பார்த்து, "இதையார் தின்றது?" என, நரி, "இக் கழுதைக்கு ஈரலுங் காதுமில்லை; இருந்தால், அது மறுபடியும் உன்னண்டை வருமா?" என்று கூறிற்று. அஃது இதைக்கேட்டு உண்மையென்று நம்பி, நரிக்குள்ள மாமிசபாகங் கொடுத்து, மற்றதைத் தின்றது.

## VIII. அவாவறுத்தல்.

9. "வேண்டாமை யன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை"

அமராவதி நகரத்தில் வாழ்ந்து வந்த வேதியர் நால்வர் தரித்திரத்தால் துன்புற்று, "நாம் எத்தனை நாள் இப்

படி வறுமையால் துன்புறுகிறது? இவ்வறுமை ஒழியும் இடம் நாடிச் செல்வோம். பொருளில்லார்க்கு வனத்தின் நடுவில் வஸித்தல்தான் இன்பம்'' என்று உறுதி செய்து கொண்டு, நால்வரும் மறுதேசம் போகையில், க்ஷிப்ராநதிக் கரையில் பைரவாநந்தி என்னும் ஒரு யோகி எல்லாம் வல்லோனாய் வீற்றிருக்கின்றானென்று கேள்வியுற்று, அவன் ஆச்சிரமத்திற்குச் சென்று, அவனை வெகுவாய்ப் பூஜித்தனர். அவன் அவர்களுடைய வழிபாட்டிற்கு உவந்து, "உமது வரவின் காரணம் எது?'' என்று கிருபையோடுங் கேட்டான்.

அவர்கள், "அடிகளே? எம்மை வருத்துகின்ற இத் தரித்திரம் தொலையும்படியாய், நிறைந்த பொருளை இச்சித்து, எமது நாடு துறந்து, உம்மைச் சரணமடைந்தோம். திரவியத்தைத் துணிவின் செய்கையாலன்றிச் சம்பாதிக்க முடியாது. நாங்கள் சாந்துணையும் அதைக் குறித்து முயற்சி செய்யத் தீர்மானித்துவிட்டோம். இனித் தேவரீர் எமக்கு ஒரு வழி காட்ட வேண்டும். மறுபிறப்பிலே நும்பால் எம் முயிரை விடச் சித்தரா யிருக்கின்றோம்'' என்றனர். யோகி இவர்கள் பரபரப்பையும், கடைப் பிடியையும் உணர்ந்து, நான்கு மந்திரத்தைச் சிந்தித்து, நான்கு திரிச்சீலைகளை அவர்கள் தலையில் வைத்து, அவர்களை நோக்கி, "நீங்கள் இமயகிரியை நோக்கி நேரே செல்லுங்கள்; போம்போது, எவன் தலையிலுள்ள திரிச்சீலை எங்கு விழுமோ, அங்கு அவனுக்குப் பொருள்கிடைக்கும்'' என்று சொல்லி அனுப்பினன்.

அந் நால்வரும் அவன் ஆணைப்படி செல்லுகையில், கொஞ்ச தூரத்திற் கப்பால் ஒருவன் வர்த்தி வீழ்ந்தது. அவன் அங்குச் சோதித்துப் பார்க்க, தாமிரக்கனியா யிரு

க்கக்கண்டு, மற்றவரை நோக்கி, "நண்பர்களே! நீங்கள் ஏன் மேலும் போகவேண்டும்? இத்தாமிரத்தில் ஆசைகொண்டமட்டும் வாரிப் போங்கள்" என்றான். அம்மூவரும் போபோ, பேதாய்! இதனால் என்னபயன்? இதில் எவ்வளவு பெற்றாலும், நம் தரித்திரம் நீங்குமோ?" என்று சொல்லி, மேலே போயினர். செம்புகண்டவன் தன்னாற் கூடியமட்டும் செம்பு வாரிக்கொண்டு திரும்பினான்.

மேலே சென்ற மூவரும் ஒரு கூப்பாடு தூரம்போனதும், அவர்களுள் ஒருவன் தலைத்திரி வீழ, அவன் அங்கே வெட்டிப் பார்க்கையில், வெள்ளிப் பாளங்களைக் கண்டு, மற்றைய இருவரையும் நோக்கி, "நமக்கு இது போதும்; நாம் வேண்டியவளவு இதில் வாரிக்கொண்டு மீள்வோம்" என்றனன். அவ்விருவரும், "முற்படப் பொற்குவை இருக்கும். நாம் போகின்றோம்" என்று போய் விட, அவன் வெள்ளி வாரிக்கொண்டு திரும்பினான்.

இருவரும் சிறிது வழி கடந்ததும், ஒருவன் தலைத்திரி விழவே, அவன் ஆங்கு ஆராயும் காலத்தில், பொன் திரள் இருக்கக்கண்டு, மற்றவனை நோக்கி, "நண்பா! நமக்கு இது போதும். வேண்டியவளவு இதில் வாரிச் செல்வோம்" என்றான். அதற்கு அப்பேராசைப் பேதை, "அடா, அறிவிலி! முன்னே ரத்தினங்களிருக்கும்! நான் போகிறேன்" என்றனன். மற்றவன், "சரி; நான் இப்பொன்னை வாரிக்கொண்டு, உனக்காகக் காத்திருக்கின்றேன். நீ சீக்கிரத்தில் ரத்தினச் சுமையோடு வந்து சேரு. இருவருமாகப் போவோம்" என்றான். அதற்கு அவன் சரியென்று, மேலே செல்லுகையில், வெயிலின் வெப்பத்தால் மிக வருந்தி, பசிதாகம் மேலிட, யோகி குறிப்பிட்ட வழி தப்பி, வேற்று நெறியில் உழன்று அலைந்தான்.

அப்பொழுது, ஓரிடத்தில் ஒரு மனிதன் தலையில் ஒரு சக்காம் சுழலவும், அவன் உடல் எங்கும் இரத்தத்தால் மூழ்கி யிருக்கவும் கண்டு, அவனை நோக்கி, "நீயாவன்? உன் தலைமேல் ஏன் இந்தச் சக்காம் சுழல்கின்றது?" என்றான். இப்படிக்கேட்டு வாய்மூடுமுன், அவன் தலையிலுள்ள அச்சக்காம் இவன் தலைக்குவந்து சேர்ந்தது. அதனால் வேதியன் துணுக்குற்று, "இஃதென்னை? கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டாற் போலாயிற்றே!" என்று கலங்கி, பழைய சக்கிரியை நோக்கி, "இவ்வாழி என் தலைமீது வரக்காரணம் யாது?" என்று வினவினான்.

பூர்வ சக்கிரி, "ஓ! வேதியனே! எனக்கு இதுவரையில் அனுபவ மிருந்தது, முன்பு குபேரன் என்னை நோக்கி, 'எவன் ஸித்தித் திரியோடு இங்கு வந்து உன்னைக் கேட்பானோ, அவனுக்கு இச்சக்காம் செல்ல, நீ வேதனை ஒழிவாய்' என்று வாமருளி யிருக்கின்றான். அப்படியே நீ வந்து என்னைக் கேட்டாய்" என்றனன். புதிய சக்கிரி, "ஐயோ! பிள்ளையார் பிடிக்கப்போய்க் குரங்காய் முடிந்ததே" என்று தனக்குள் துக்கப்பட்டு, பெருமூச் செறிந்து, பழைய நேமியனை நோக்கி, "நீ இங்கு வந்து எத்தனை நாளாயின?" என்றான். அவன், "எனக்குக் கால வரையறை தெரியாது. இராமன் அரசுசெய்த காலத்தில் நான் தரித்திரத்தால் மிக நொந்து, இங்குவந்து இவ்வாழியினால் பிடிபட்டேன்" என்றான்.

அதைக்கேட்ட வேதியன், "ஆ!, ஆ! ஈங்குவந்து ஜலமாயினும் கொடுப்பவர் யாவர்?" என, பண்டை நேமியன், "பசிதாகம் இங்கு வருத்துவதில்லை. முழுதும் இச் சக்காம் தாங்கும் துன்பம் தான் அனுபவிக்க வேண்டும். இது குபேரனது செல்வத்தைக் கவர வருகிறவர்களை அச்சுறுத்

துவதற்கு வைத்திருக்கின்றது. இதன் பயத்தால்யாரும் இங்கு வருவதில்லை" என்று, ஸகல விருத்தாந்தங்களையும் சொல்லி, "எனக்கு இப்பொழுது சகிக்கமுடியாத துன்பம் உண்டா யிருக்கிறது; நான்போவேன்" என்று, அவன் போய்விட்டான்.

அதன் பிறகு, முன்னே பொற்குவையை வாரிக் கொண்டு, இவனுக்காகக் காத்திருந்த மூன்றுமவன் நெடு நேரம் வரையிலும் தன் தோழன் வாராமையைக் கண்டு, தேடி வந்து பார்க்க, அவன் தலையிற்சக்காம் சுழலக்கண்டு, பிரமித்து, "நண்பனே! இஃது என்னே! என்னே!!" என்று கேட்டான். அவன், "அப்பா! இது பேராசையின் பயன்: பிள்ளை வரத்துக்குப் போனவிடத்தில் புருஷனைப் பறிகொடுத்தாற் போலாயிற்று" என்று ஏங்கி, மிகநொந்தான்.

## 10. "ஒருவனை, வஞ்சிப்ப தோரும் அவா"

ஒரு கிழப்புலி, பலவீனத்தால் ஆகாரஞ் சம்பாதிக்கக் கூடாமல், ஓர் ஏரிகரையில் நீராடிக்கையில் தருப்பைவைத் துக்கொண்டு உட்கார்ந் திருக்கையில், ஒரு பிராமணன் அந்த வழியில்வர, அந்தப்புலி அவனைப் பார்த்து, "ஓ பிராமணா! இந்தப் பொற்காப்புத் தருகிறேன், வா" என்றது. இதைக் கேட்டு, அந்தப்பிராமணன், "இந்தக்காப்பு நமக்கு வலியக் கிடைக்கிறது. மரணத்துக்கு இடமாகிய புலியின் சமீபம் போகலாகாது; ஆகையால், இந்தக் காப்பில் ஆசை வைக்கலாகாது என்போமானல், மரணத்துக்கு காலண்டையும் வழியாகையால், இதைக் குறித்துப் பிரயத்தனம் அவசியம் பண்ணவேண்டும்" என்று, தனக்குள்ளே ஆலோசித்து, நிச்சயித்துக்கொண்டு, புலியைநோக்கி, "ஐயா புலியாரே! காப்பு எங்கே யிருக்கிறது?" என்றான்.

புலி, கையில் வைத்துக்கொண்டு, "இதோ பாரும், பிராமணோத்தமா!" எனக் காண்பித்தது. பிராமணன், "உன்னிடத்தில் எனக்கு எப்படி நம்பிக்கை?" என, புலி, "நான் வைகறையில் மூழ்கி, நித்யதானம் பண்ணிக்கொண்டிருக்கிறேன். நகமும் பல்லும்போன கிழவனா யிருக்கிறேன். இப்போதும் என்னிடத்தில் நம்பிக்கை யில்லையா? வேட்டல், ஓதல், கொடுத்தல், தவம், சத்தியம், உறுதி, பொறுமை, ஆசையின்மை என்னும் இவ்வெட்டுத் தருமங்களையும் நான் அறிந்திருக்கிறதனால், இந்த அபூர்வ வஸ்துவை யார்க்காகிலும் கொடுக்க இச்சிக்கிறேன்; இதனால், என்னிடத்தில் நற்குண மிருக்கிறதென்றும், எள்ளளவாகிலுந் துர்க்குண மில்லையென்றும் அறியவில்லையா?" என்றது.

அப்போது, பிராமணன், "இது மெய்தான்; ஆனாலும் புலி மனிதனை அடித்துத் தின்னுகிறதென்று பெரிய லோகாபவாத மிருக்கிறது" என்றான். புலி, "நான் தருமசாஸ்திரம் அறிந்திருக்கிறேன்; தம் பிராணன் தமக்கு எப்படித் தித்திப்போ அப்படி எல்லாருக்கும் இருக்குமென்று அறிந்து, சாதுக்கள் பிராணிகளிடத்தில் தயையா யிருக்கிறார்கள்; தம்மைப்போல ஸுகதுக்கங்களைப் பிறரிடத்தில் நினைக்கிறார்கள். நீ மிகவுந் தரித்திரனாகையால், உனக்குக் கொடுக்க யத்தனிக்கிறேன். சாஸ்திரமும் அப்படியே யிருக்கிறது: எப்போதும் ஏழைக்கே கொடுக்கவேண்டும்; செல்வமுள்ளவனுக்குக் கொடுக்க லாகாது; மருந்து நோயாளிக்கு எப்படிக் குணங் கொடுக்குமோ, அப்படி நோயில்லாதவனுக்கு ஆகுமா? நீ இந்த ஏரியிலே முழுகி வந்து, காப்பை வாங்கிக்கொண்டு, வீட்டுக்குப் போ" என்றது.

பிராமணன் கபடமற்றவன் ஆகையால், ஐயோ! அவுன் புலியின் பேச்சை நம்பி, ஸ்நானம் பண்ணுகிறதற்கு ஏரியிலே இறங்கினவுடனே உளையிற் புதைந்து, காலைப் பிடுங்கிக்கொண்டுவரக் கூடாமல் திகைத்தான். புலி அதைப் பார்த்து, பிராமணா! பயப்படாதே; நான் உன்னைச் சேற்றி னின்றும் எடுக்கிறேன்; சற்றிரு'' என்று சொல்லிக்கொண்டு, மெல்லெனப்போய், அவனைப் பிடித்துக்கொண்டது. அப் போது பிராமணன் எண்ணமிடுகிறான்: ''துஷ்டர்கள் வேதாத்தியயநம் பண்ணியிருந்தாலும், தரும சாஸ்திரம் படித்திருந்தாலும் அவர்கள் வார்த்தையில் நம்பிக்கைவைக்க லாகாது. எவன் சுபாவம் எப்படியோ, அஃது எப்போதும் போகாது; இப்படி யிருக்கையில், எனக்கு இயல்பாயிருக் கிற நிஷ்கபடத்தினால் நான், இந்தத் துஷ்டனிடத்தில் விசு வாசம் வைத்து மோசம் போனேன்'' என்று இப்படிப் பச்சாத்தாபப் பட்டுக்கொண் டிருக்கையில், அந்தப் புலி அவனைக் கொன்று தின்றது.

## IX. ஊழ்

### 11. ''தீயவும் நல்லவாம்''

மதுபுரக் காவலனாகிய மதுசூதனன் என்பவனுக்கு மூன்று கண்ணுள்ள ஒரு பெண் பிறக்க, அவன் சோதிட வல்லோரை அழைப்பித்து, ''இதற்கு என்ன செய்யலாம்?'' என்றான். அவர்கள் பல நூல்களையும் நன்கு ஆராய்ந்து, கடைப்பிடித்து, ''மகாராஜனே! இம் முக்கண் மகளைப் பார்க்கவொண்ணாது. ஏனெனில், விரூபமாகவு பிறந்துளதா யின் அதைக் காணக்கூடா தென்பது சாஸ்திரம். அதுவே பெரியோர்களுடைய ஒழுக்கமும் ஆகும்'' என்றார்கள்.

அரசன் அதை உட்கொண்டு, அக்குழந்தையைத் தான் பாராமலே வேறோர் இடத்தில் வைத்து வளர்ப்பித்து,

வருங்கால், அப்பெண் வளர்ந்து, புஷ்பவதியாயினுள். அர சன் தேசந்தோறும் மணவோலை போக்கி, "இப்பெண்ணை விவாஹம் செய்துகொள்வானுக்கு ஏராளமான பொருள் தருவேன்" என்று பிரசுரம் செய்தான். இச்செய்தி கேட்ட இரந்துண்ணும் மண்டையாகிய கூனன் குருடன் என்ற இருவர் விவாஹ விருப்பால் மன்னனிடத்து வந்ததும், அவர்களுள் குருடன் தனக்கு அப்பெண்ணைக் கொடுக்கும் படி கேட்டான். அரசன் அப்படியே கொடுத்து, "ஓ! கண் ணறை! ஒரு கணமும் இந்த நீ இருக்கக்கூடாது" என்று மிக்க திரவியத்துடன் அனுப்பினுன்.

அவனும் கூனனும் முக்கட் பெண்ணுமாகப் புறப் பட்டு, வேறொரு தேசம் சென்று ஓரிடத்தில் இருக்கையில் அவள் கூனனுக்கு வசமாகி, அவனை நோக்கி,"இக்குருட்டுச் சவத்தை நஞ்சிட்டுக் கொன்றுவிட்டால், நாம் சுகமாக இன்பம் நுகராலாம்" என, அவன் ஒரு கிருஷ்ண சர்பத் தைத் தந்தான். அவள் அதை அடுப்பின்மேல் ஏற்றி வேக வைத்து, குருடனை நோக்கி, "என் நாயகரே! இந்த மாமி சம் உயக்கென்று கொண்டுவந்தேன். நீர் சுள்ளி எரித்துக் கொண்டிரும்; எனக்கு வேறு காரிய மிருக்கிறது" என் ருள். அவன் சரியென்று இளந்தழலாய் எரித்துக்கொண் டிருக்க, அக்கிருஷ்ணசர்ப்ப ஆவி கண்ணில் தாக்கி, அவ் விடத்திலுள்ள கண்ணுரோகம் தீர்ந்து,முன்போல அவனுக் குக் கண் தெரியலாயிற்று.

அவனுடைய குருட்டுதவியால் நகைத்து விளையாடிக் கொண்டிருந்த கூனனையும் முக்கண் பாதகியையுங் கண்ட அவன் உகாந்தகால ருத்திரனைப் போலச் சீறி எழுந்து, கூனனைப் பற்றி இழுத்து, சிற்றத்தால் முக்கண்ணியின்

முகத்திலே மோத, அவளது மூன்றும் விழி மறைந்து, கூன னது உடற்கூனும் நிமிர்ந்தது.

இவ்வதிசயத்தைக் கண்ட மூவரும், "ஆ! ஆ! காலத் தால் தீயவை யெல்லாம் நல்லவை ஆகின்றன. நல்லவை யெல்லாம் தீயவை ஆகின்றன" என்று சொல்லி, பிறகு ஒற்றுமையாய் வாழ்ந்திருந்தனர்.

## X. கல்லாமை

13. "கல்லா தவரும் நனிநல்லர் கற்றார்முற்
சொல்லா திருக்கப் பெறின்"

ஒரு குப்பத்தில் யுதிஷ்டிரனென்னுங் குயவன் பானை களை யெடுக்கையில், ஓட்டாங்குச் சொன்று கபாலத்தில் தாக்கிக் கத்திவெட்டுப்போலக் காயம் பட்டது. பிறகு சில நாள் கழித்து அத்தேயத்திற் கருப்பு வந்தமையால், அவன் மறுதேயத்திற்குப் போய், இராஜனிடத்தில் சேவகத்தில் அமர, அவ்வரசன் அவ்வடுவைக்கண்டு, இவன் போர்க்களத் தில் முன்காயம் வாங்கின சூரனென் றெண்ணி, அவனை மிக வும் உபசரித்து. அவனிடத்தில் தயையாயிருந்தான். அது முதற்கொண்டு மற்றைச்சேவகர்கள் அவன்மேற் பொறாமை யாயிருக்கத் தலைப்பட்டு, இராஜன் தயையிருக்கையால் ஒன்றுமே பேசாமலிருந்தார்கள்.

அப்படி யிருக்கையில், ஒரு நாள் இராஜன் ஏகாந்த மாக யுதிஷ்டிரனைப் பார்த்து, "உனக்கு இக் கத்திவெட்டு யாருடைய சண்டையிற் பட்டது?" என, குசச்சேவகன், "இராஜனே! நான் சூளைபோட்டுக்கொண் டிருக்கையில் விழுந்து, ஓடுபட்டு இக்காயம் பட்டது" என்றான். இதைக் கேட்ட மாத்திரத்தில் இராஜன் நாணிக் குலாலனைப் பார்

த்து, "நான்மோசம் போனேன்; இஃது இரண்டாம் பெயர்க்குத் தெரிவதற்குள்ளே நீ ஓடிப்போ; இதைச் சூரர்கள் கண்டால், நீ உன்னுயிர் காணமாட்டாய்" என, குயவன், "ஸ்வாமி! என் கை கைகால்களைக் கட்டி, ரணரங்கத்திற் போட்டு, என் ஹஸ்தலாகவத்தைப் பார்த்தருளும்; 'வாய் புளித்ததோ மாங்காய் புளித்ததோ' வென்று சொல்லலாமோ?" என்றான்.

இராஜன், "நீ பிறந்த குலம் போர்க்களத்தில் வருவதன்று; அங்ஙனமாக, நீ நரிக்குட்டி போல என் சும்மாத் துள்ளுகிறாய்? குரைக்கிற நாய் வேட்டை பிடிக்குமோ? குசவனென்று வெளிப்படுவதன் முன்னே விரைவாய் இதை விட்டுப்போ" என, அவன் அந்த இராஜாவின் உத்தரவுப்படி ஓடிப்போனான்.

## XI. அறிவுடைமை

### 14. "அறிவுடையார் ஆவது அறிவார்"

ஒரு மலையின்மேற் சதுர னென்னும் ஒரு நரி பசியுடனே அங்கங்கே திரியுங்கால், ஒரு செத்த யானையைக் கண்டு, இதன் தோலைக் கிழித்து இரச்சி தின்னும் வல்லமை அதற் கின்மையால், அஃது அங்கு உட்கார்ந்திருக்கையில், அங்கே வந்த ஒரு சிங்கத்தைக்கண்டு தண்டனிட, அது, "நீ யார்?" என்றது. நரி, நான் "தங்களடியேன்; தாங்களடித்த யானையைக் காத்து உட்கார்ந்திருக்கிறேன்" என்றது. சிங்கம், "இதுநான் கொன்ற தன்று; வேறொருவன் கொன்றெறிந்தானோ? அன்றித் தானாய் மடிந்ததோ? எப்படியிருந்தாலும், நான் புசியேன்; இஃது உனக்கு வேண்டுமானால் அதை எடுத்துக்கொள்" என்றது. நரி, "சுவாமி!

இது யோக்கியந்தான்; பெரியோர்கள் தம் ஆண்மையாலே சம்பாதிக்கிறார்கள்'' எனச் சிங்கம் அதைக்கேட்டு, வேறொரு வனத்திற்குப் போயிற்று.

பின்பு அங்கே வந்த ஒரு புலியைப் பார்த்து, "அம்மான்! நீ இக்காலன் முகத்தில் ஏன் எதிர்ப்பட்டாய்? இவ்யானையைக் கொன்ற மிருகேந்திரன், 'இங்கே யாதொரு புலிவந்தால், அதற்குத் தெரியாமல் எனக்கு வந்து சொல்வாயானால்,நான் அதைக் கொன்றெறிவேன்;நான் முன்னே ஒரு யானையை யடித்து மூழ்கப்போன விடத்தில் ஒரு புலி அதை எச்சிற் பண்ணிற்று ; அது முதலாகப் புலியைத் தேடிப் பார்த்தும் அகப்படவில்லை' என்று என்னுடன் சொல்லி யிருக்கின்றான்'' என, புலி அச்சிங்கத்தின் உத்தரவைக் கேட்டு மிகவும் பயந்து, "மருமானே! எனக்குப் பிராணதானங் கொடு'' எனச் சொல்லிக்கொண்டே ஓடிப் போயிற்று.

மறுபடி ஒருவாநரம் வரக்கண்டு, "முன்னே வந்த ஒரு துஷ்டனைக் கும்பிட்டுப் போக்கினோம்; இரண்டாமவனைப் பேதித்தோம்; இப்போது இதன் கையால் இதைக் கிழிப்பிக்கவேண்டும்''என்று இப்படித் தன்னுள்ளே நிச்சயித்துப் பின்பு, "வாநரா! நீ நெடுநாளைக்குப் பின்பு வந்தாய்; மற்றும், பசித்திருக்கிறாய்; ஆதலால், எனக்குச் சிங்கங் கொடுத்த இவ்வியானை யிறைச்சியை நீ கொஞ்சந் தின்று சிங்கம் வருவதற்கு முன்னே சீக்கிரமா யோடிப்போ'' என, குரங்கு அதைக்கேட்டு, யானையைக் கிழித்தது.

அதைப் பார்த்து, நரி, "வாநரா! சிங்கம் ஸமீபத்தில் வந்தது; இனி நீ விரைவில் ஓடிப்போ'' என, அதைக் கேட்டுக் குரங்கு பறந்தது. பின்பு அது பிளந்த விடத்

திலிருந்த மாமிசத்தை நரி தின்னுகையில், அங்கே வந்த வேறொரு நரியைக் கண்டு, சண்டையிட்டுத் துரத்தி, தான் வேண்டுமட்டும் இறைச்சிகளைத் தின்றது.

## 15. "எதிரதாக் காக்கும் அறிவினார்க் கில்லை அதிர வருவதோர் நோய்"

துளசாபுரம் என்னும் மூதூரில் நால்வர் ஒரு கல்விச் சாலையில் மாணாக்கராய்க் கல்வி பயின்று வருகையில், அவர்களுள் மூவர்க்கு மந்திரவித்தை சித்தியாகவே, அப்போது அவர்களில் ஒருவன், "நாம் வித்தை யுணர்ந்திருப்பதற்கு பயன் அரசனை அடுத்துப் பொருளீட்டுதலன்றோ?" என, மற்றொருவன், "ஆம், ஆம்; நம்முள் இவன் ஒருவன் கல்வி யறிவில்லாதவனாயினனே; இவனுக்கும் நாம் ஈட்டும் பொருளில் எப்படிக் கூறு கொடுப்பது ?" என்றான். அதைக் கேட்டு வேறொருவன், "இவன் கல்லானாயினும் இளமை கெட்டு நம்மோடு விளையாட்டுத் தோழனாக இருந்துவந்திருக்கின்றான். அன்றியும் இவன் நம்மினும் உலக நடையில் தேர்ந்தவன். அரசனிடத்தில் உலகநடை அறிந்தவனிலும் கல்விமாத்திரம் பயின்றோன் புகழெய்தான். ஆதலால் இவனுக்கு நாலில் ஒரு கூறு கொடுக்க வேண்டும்" என்றான். அதை யெல்லாரும் ஒப்பி, அவனுடன் வேற்றுத்தேயம் நோக்கிப் புறப்பட்டனர்.

போகும்போது, அங்கு ஓர் அடவியில் செத்துக் கிடந்த ஒரு சிங்கத்தைக் கண்டு, ஒருவன், "நண்பர்காள்! நாம் செத்தவற்றைப் பிழைப்பிக்கக் கற்ற வித்தையை இவ்விறந்த மிருகத்தின்பாற் பரீக்ஷை செய்து தெளிவோம்" என்றான். அதைக் கேட்ட உலக நடை வல்லோன், "ஆ! இஃதென்ன பேதைமை! இதைப் பிழைப்பித்தால், இது நம்

மைத் தின்னுது விடுமா? இதன்பாற் பரீக்ஷை செய்யக்கூடாது'' என்று பலவும் சொல்லித் தடுத்தான்.

அம் மூவரும் அந் நன்மொழியைக் கேளாது, செருக்கினுல் அச்சிங்கத்தைப் பிழைப்பிக்கத் தொடங்க, மற்றவன், "நாம் இவ்விடத்தில் நிற்கக் கூடாது. புத்திமானுக்கு மூர்க்கர் சகவாசம் ஆபத்துக் கிடமாகும்" என்றுரைத்து,



நெடுந் தூரத்துக் கப்பாலுள்ள ஒருயர்ந்த மரத்திலேறி இருந்தனன். அவன் கூட்டாளி மூவரும் அவன் வார்த்தையை எறிந்து, சிங்கத்துக்கு உயிர்தந்த மாத்திரத்தில் அஃது அவர் ஆவி மூன்றையும் வாங்கிற்று. முன்னுலோசனை யற்ற மூவரும் இப்படி முடிந்தனர்.

## XII. குற்றங்கடிதல்

### 16. 'வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர் வைத்தூறு போலக் கெடும்''

ஒரு பெரிய குளத்தில், வருமுன் காப்பவ னென்றும் வருங்காற் காப்பவ னென்றும் வந்தபின் காப்பவ னென்றும் மூன்று மீன்கள் அநேக காலமாய் வாழ்ந்துகொண்டிருக்கும் நாளில், ஒருநாள் வலைஞர்கள் வந்து, "இதில் தண்ணீர் கொஞ்சமா யிருக்கிற தாகையால், நாளை வந்து இதிலிருக்கிற மீன்களை யெல்லாம் பிடிப்போம்". என்று பேசிக்கொண்டார்கள். அதை வருமுன் காப்பவன் கேட்டுத் தன் சிநேகிதரிடத்திற்போய், "நாம் இவ்விடம் விட்டுச் சீக்கிரமாகப் புறப்பட வேண்டும்; இனி இங்கே ஒரு நிமிஷ நேரமும் இருக்கலாகாது" என, இதைக் கேட்டு வருங்காற்காப்பவன், "நமக்கு விபத்து வரும்போது பார்த்துக்கொள்வோம். காரியம் நேரிடும்போது, அதற்குத் தக்கதாகப் புத்தி யுண்டாகும்" என்றது.

பிறகு வந்தபின் காப்பவன், "தன்னிடத்தை விட்டு விடுகிறது மூர்க்கத்தனம்; எது வரத்தகாததோ அது வராவே வரும்; யாதொன்று வரத்தக்கதோ அதை நாம் வருந்தி யழைத்தாலும் வாராது; ஆதலால், நான் வரமாட்டேன்" என்று சொல்லி, அந்தக் குளத்திலேயே இருந்தது. பிறகு வருமுன் காப்பவன் வேறிடத்திற்குப் போய்விட்டது.

மறுநாள் உதயத்திற் செம்படவர் வந்து வலை யெறிந்து மீன்களைப் பிடித்தார்கள். அதில் வருங்காற் காப்பவன் அகப்பட்டு, செத்தாற்போலப் பாசாங்கு பண்ணிக்கொண்டிருக்கவே, அதைப் பார்த்து, இது செத்ததென்று எண்ணிக்கொண்டு, செம்படவன் அதைக் கரைமேற் யோட்டு

வைத்தான். இதற்குள்ளே அஃது அவன் கண்ணுக்குத் தப்பித் தண்ணீரிற் புகுந்து ஒளித்துக்கொண்டது. பிறகு வந்தபின் காப்பவன் வலைக்குள் அகப்பட்டு, "இப்போது என்ன செய்யலாம்?" என்று அங்கு மிங்கும் ஓட, அதைச் செம்படவன் கண்டு, தடியா லடித்துக் கொன்றான். மற்ற விரண்டும் சுகமுற்றன.

### 17. "நயவற்க நன்றி பயவா வினை"

மகத தேசத்தில் சுதத்த னென்ற ஒருவன் கோயில் திருப்பணிக்காக மரங்கள் கொண்டுவந்து அறுக்கவிட்டிருந் தான். அம்மரங்களில் வாட்காரன் பிளக்கும்படி முளைகள் அடித்துவிட்டுப் போக, ஒரு மரத்தின்மேல் அந்தக்கோயில் நந்தவனத்துக் குரங்குகளில் ஒன்று வந்து உட்கார்ந்தது. அஃது அம் மரப்பிளப்பில் அடித்த முளையை அசைத்துப் பிடுங்கிச் சேஷ்டைசெய்ய, பிளப்பு நெருங்கி, உடல் நசுங்கி, இறந்தது.

## XIII. பெரியாரைத் துணைக்கோடல்

### 18. "தம்மிற் பெரியார் தமரா ஒழுகுதல் வன்மையுள் எல்லாம் தலை"

நாசிக தேசத்தனாகிய தத்தனென்னும் ஒரு பிராம ணச் சிறுவன் தன் அன்னையை நோக்கி, "அம்மா! நான் என் குருவின் காரியமாக அயலூர்க்குப் போகவேண்டி யிருக்கிறது. விடை தா" என்றான். அவள், குழந்தாய்! ஒருவனாய்ப் போகாதே. 'துணையோடல்லது நெடுவழி யேகேல்' என்பதை நினைத்துப்பார்" என்றாள். அவன், "நான் போகும் ஊர்க்கு வழியில் பயமில்லை. நீ அஞ்சாதே" என்றான். அவள், "என் கண்மணி! எப்படி யிருந்தாலும்,

நீ தனியாய்ப் போகக்கூடாது'' என்று, ஒரு கலசத்தில் நண்டு ஒன்றைப் பிடித்துப்போட்டுக் கொடுத்து, "இதை யாவது துணையாகக் கொண்டுபோ'' என்றாள். அவன் அவ்வாறே தாய்மொழி மேற்கொண்டு போகும்போது, வழியில் வெயிலாற் களைத்து, ஒரு மரத்து நிழலில் படுத்து நித்திரை செய்தான்.

அப்போது எங்கே இருந்தோ வந்து அவனைக் கடிக்க அணுகிய ஒரு சர்ப்பம் அம்மண் கலயத்தில் என்ன விருக்கிறது என்று பார்க்க, அதனுள் தலையிடவே, நண்டு, "இஃது ஓர் அரவன்றோ!'' என்று அஃதைக் கொடுக்கால் இடுக்கிக் கொன்றது. பிறகு அந்தணன் விழித்து, நடந்ததைக் கண்டு, "ஆ! ஆ! 'மூத்தோர் சொல்லும் வார்த்தை அமிர்தம்' என்பதன் உண்மையை இப்போதுதான் கண்டேன். இனி ஒருநாளும் தாய் சொற்றுறவேன்'' என்று உறுதி செய்துகொண்டு, வழி நடந்து, காரியத்தை முடித்துக்கொண்டு, அந்நண்டுடன் வீடு சென்று, அன்னைக்குச் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து, போற்றி, நிகழ்ந்த செய்திகளைச் சொல்லி, இன்புற்றிருந்தான்.

## 19. "தக்கார் இனத்தனாய்த் தானொழுக வல்லானைச் செற்றார் செயக்கிடந்த தில்''

கோதாவரிக் கரையிலுள்ள ஒரு காட்டில் ஒரு நாள் விடியற்காலத்தில் மிகவும் பயங்கரனான ஒரு வேடன் வந்து, தன்கையிலே கொணர்ந்த ஒருவலையை விரித்துப் பலவகைப் பட்ட தானியத்தைத் தெளித்து, அங்கே ஒரு செடிமறைவில் பதுங்கிக்கொண் டிருந்தான்.

அப்போது தன் பரிவாரத்தோடு அந்த மரத்தில் வந்திறங்கின சித்திரக்கிரீவ னென்னும் புறவரசு அங்கே

இறைத்திருக்குந் தானியத்தைப் பார்த்து, தன் பரிவாரப் புறாக்களுடனே, "இந்த நிர்மாநுஷ்யமான காட்டில் தானியம் எப்படிவரும்? யாராகிலும் கொண்டுவந்து போட்டிருக்க வேண்டும்; இது நமக்குத் தெரிந்தாலல்லாமல் இதைப் பக்ஷிக்கலாகாது. எதையும் மிகவும் ஆலோசனை பண்ணி, செய்யத்தக்கது எதுவோ அதைச் செய்யவேண்டும். அப்படிச் செய்தால் யாதொரு தீங்கும் நேரிடாது" என்று சொன்ன வார்த்தையைக்கேட்டு ஒரு புறா கர்வத்தோடு, "இப்படி எல்லாம் ஆலோசித்தால் ஓரிரையும் நமக்கு அகப்படாது; மேலும், வெட்க முறுகின்றவன், பொறாமையுள்ளவன், ஸந்தோஷ மடையாதவன், குரோத முள்ளவன், தீராச் சந்தேகமுள்ளவன், பிறர் பொருளாற் சீவிக்கிறவன் என்னும் இவ்வாறுபேரும் துக்கத்தையே அநுபவிப்பார்கள்" என்றது.

இதைக்கேட்டுப் புறாக்களெல்லாம் தானியத்தைத் தின்னும் பொருட்டுப் போய் நிலத்திலிறங்கி, வலையி லகப்பட்டன. புறாவரசன் அதைப்பார்த்து, "எல்லாரும் என் சொல்லைக் கேளாமற் போனார்கள். இப்போது நான் ஒன்றியா யிருந்து பலனில்லை" என்று சொல்லி, அதுவும் வலையில் வந்து அகப்பட்டது.

பிறகு, வேடன் பக்ஷிகள் வலையிற் சிக்கிக் கொண்டதைப் பார்த்து, அதனிடத்திற்கு வாத் தொடங்கினான். அதைப் புறாக்கள் கண்டு, சித்திரக்கிரீவனைப் பார்த்து, "நாங்கள் நீசன் புத்தியைக்கேட்டு உன்னை அவமானம் பண்ணினோம். அதன்பலன் பிராப்தியாயிற்று" என, அப்போது சித்திரக்கிரீவன், "இப்போது இதைச் சொல்லிப் பயனென்ன? இதற்கு ஓர் உபாயம் இருக்கிறது. எல்லாரும்

வலையோடு கூட ஒருமிக்கப் பறந்து வேறிடத்திற்குப் போக வேண்டும். அப்படிச் செய்தாற்றான் பிராணனைக் காப் பாற்றலாம்'' என, இதைக் கேட்டவுடனே எல்லாப் பற வைகளும் வலையோடு கூடச் சடிதியிற் பறந்து போயின.

அதை வேடன் தூரத்திலிருந்து பார்த்து, ஆச்சரிய மடைந்து, "இவைகள் ஒரேமனமாய் வலையைக் கொண்டு போயின. ஆயினும், இவைகளில் ஒன்றுக்கொன்று விரோ தங்கொள்ளும். அப்போது என் கையில் அகப்படும்'' என நினைத்துக் கொண்டு, அவைகளின் பின்னே ஓடும்போது, புறாக்கள் கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து போய்விட் டன. பிறகு, அவன் வருத்தமுற்றுத் திரும்பி வந்து விட்டான்.

கபோதராஜன் தன் கூட்டத்தைப் பார்த்து, "கண்டகீ நதி தீரத்திலிருக்கும் சித்திர வனத்தில், என் சிநேகிதனான இரணியகனென்னும் ஓர் எலியரசன் இருக்கிறான், அவன் பல்லினாலே நம்முடைய வலையை அறுப்பான். ஆகையால், அங்கே நடங்கள்'' என, இதைக்கேட்டு, அவை அப்படி யே எலியரசன் வளையண்டை இறங்கின.

அப்போது, ஏதாவது ஆபத்து நேரிடு மென்பதைக் குறித்துத் தன் வளைக்கு நூறுவழி செய்துகொண்டு உள்ளே யிருந்த எலியரசன், புறாக்களிறங்கின சத்தத்தைக் கேட்டு பயந்து, அடங்கியிருக்கையில், சித்திரக் கிரீவன், 'சிநே கிதா! இரணியகனே! எங்களோடே ஏன் பேசவில்லை?'' என, அதைத் தன் சிநேகிதனுடைய தீங்குரலென்று அறி ந்து, எலி சந்தோஷத்தோடு கூடச் சீக்கிரமாக வளையினின் றும் வந்து, "நான் புண்ணியவானாகையாற் சித்திரக்கிரீவ னென்னும் மித்திரன் என் வீட்டுக்கு வந்தான். இவ்வுல

கத்தில் மனமொத்த மித்திரனேடு சம்பாஷிக்கிறதிலும் வேறே ஆனந்தம் ஏது?" என்று உபசாரஞ் சொல்லி, பிறகு அதனுடைய அவஸ்தையைப் பார்த்து, மிகவுந் துக்கித்து, "மித்திரா! நீ எல்லாரைக்காட்டிலும் ஸமர்த்தனுமே; உனக்கு இப்படிப்பட்ட காரியம் எப்படி நேரிட்டது?" என்றது.

புறு, "எந்தக்காலத்தில் எது நடக்குமோ அது நடக்கும்; விதிவலிது; அதன்முன் யாருடைய உபாயம் நடக்கும்? கடல் பெருகி மேலிட்டால், அதற்குக் கரையேது?" என, இரணியகன், "இந்தப் பேச்சு மெய்யே; நூறுநாழிகை தூரத்திலிருந்து வஸ்துக்களைத் தெரிந்துகொண்டு போகிற நீ, இன்றைக்கு வேடன் வலையில் பாராமற் சிக்கிக்கொண்டையே, பார். சந்திர சூரியர்களுக்கு ராகு கேதுக்களாற் பீடைவருதலும், யானையும் பறவையும் பாம்புங் கட்டுப்படுதலும் புத்திசாலிகளுக்கு வறுமை வருதலும், தெய்வத்தின் மகிமையே யல்லாமல் வேறல்ல?' என்று சொல்லி, சித்திரக்கிரீவன், கட்டுண்டிருக்கிற வலைக்கயிற்றை அறுக்கத் தொடங்கிற்று.

அப்போது சித்திரக்கிரீவன், "மித்திரா! முன்னே என் பரிவாரத்தினுடைய கயிற்றை அறு; பிறகு என் பாசத்தைத் துணி" எனக் கேட்டு, எலி, "என் பல் மிகவும் மிருதுவானது; அதற்குப் பலமுங் கொஞ்சம்; இத்தனை பெயருடைய பந்தனைகள் எப்படி அறுபடும்? உன் தளையை அறுத்துப் பின்பு என் சாமர்த்தியத்துக்குத் தக்கதாக அவர்களுடைய தளையையும் அறுப்பேன்" என்றது. அதற்குச் சித்திரக்கிரீவன், "நல்லது; முன்னே இவர்களுடைய பாசத்தை அறு" என, இரணியகன், "தன்னைக் காப்பாற்றிக் கொண்டு தன் பரிவாரங்களைக் காப்பாற்றவேண்டும்; அறம் பொரு ளின்பம் வீடாகிய இவைகளுக்குப் பிராணன் முக்

கிய சாதனமாகையால், அதைக் காப்பாற்றினல், பிறவற்றையும் காப்பாற்றினுற் போலாகிறது" என்றது. சித்திரக்கிரீவன், "இந்த நீதி சரிதான். ஆயினும், இப்படிப்பட்ட வேதனையை நீக்கிப் பாலனம் பண்ணுகிறதற் கல்லவோ என்னை இவர்கள் ராஜாவாக நினைக்கிருர்கள். ஆகையால், என் பிராணனிடத்தில் இச்சையை விட்டு, இவர்களைப் பிழைப்பி" என, அதைக் கேட்டு எலி, "நீ பரம சாது; அடுத்தவர்களை ஆதரிக்கின்றவனு யிருக்கிருய். யஜமானனிடத்தில் விசுவாசமாயிருக்கிற சேவகனும், சேவகனிடத்திற் பிரீதியா யிருக்கிற யஜமானனும் சுகமடைவார்கள்" என்று சொல்லி, எல்லாவற்றின் பாசங்களையும் அறுத்துச் சித்திரக்கிரீவனுடைய கட்டையும் சேதித்தது.

பிறகு ஒன்றுக்கொன்று தழுவிக்கொண்டு பிரிய வார்த்தைகள் சொல்லிய பிறகு, சித்திரகிரீவன் பரிவாரத்தோடு கூடத் தன்னிடத்திற்குப் போயிற்று.

## XIV. சிற்றினம் சேராமை

### 20. "தீயினத்தின் அல்லற் படுப்பதூஉம் இல்"

தான் பொரிக்கிற குஞ்சுகளை யெல்லாம் ஒரு பாம்பு தின்னப் பறிகொடுத்துக்கொண்டு வருகிற ஒரு மூடக் கொக்கு, அப்போது பொரித்த தன் குஞ்சுகளைக் காப்பாற்றுகிறதைக் குறித்து என்ன செய்யலாம் என்று பெண்கொக்கோடுகூட ஓர் ஏரிகரையி லுட்கார்ந்து ஆலோசித்துக் கொண் டிருக்கையில், அக்கொக்கின் சிநேகிதனுகிய குளிரனென்னும் பெயரையுடைய நண்டானது, கொக்குக்களைப் பார்த்து, "இன்றைக்கு ஏன் நீங்கள் வியாகூலமாயிருக்கிறீர்கள்?" என, அவைகள் தங்கள் விருத்தாந்தமெல்லாம் சொல்லின.

குளிரன் அதைச்கேட்டு, ஆண்கொக்கைப் பார்த்து, "நல்லது, உனக்குப் பாம்பைக் கொல்லுகிற உபாயமொன்று சொல்லுகிறேன்: கீரிப்பிள்ளையின் வளை முதற்கொண்டு பாம்பிருக்கும் இடம் மட்டும் மீன்களை இறைத்து வைத்தால் காரியசித்தியாகும்" என்றது. பிறகு கொக்கு அப்படியேசெய்ய, கீரிப்பிள்ளை தன் வளையினின்றும் புறப்பட்டு, மீன்களைத் தின்றுகொண்டே போய்ப் பாம்பையுங் கடித்தெறிந்துவிட்டுக் கொக்கின் குஞ்சுகளையும் சாப்பிட்டது.

## XV. தெரித்து செயல்வகை.

21. "தேரிந்த இனத்தோடும் தேர்ந்தெண்ணிச்
செய்வார்க்கு, அரும்பொருள் யாதோன்று மில்"

ஒரு பெரிய மரத்திற் கூடு கட்டிக்கொண்டு ஆணும் பெண்ணுமாகிய இரண்டு காக்கைகள் நெடுநாளாய் வாழ்ந்திருக்கும்போது, அந்த மரப்பொந்தில் ஒரு நாகம் வந்து சேர்ந்து, அந்தக் காக்கை யிடுகிற முட்டைகளை யெல்லாங் குடிக்க, இதனைக் கண்டு, இதற்கு என்ன செய்யலாமென்று காகம் மிகவும் வியசனப்பட்டுத் தனக்குச் சிநேகமாகிய நரியி னிடத்திற் போய், நடந்த சங்கதிகளைச் சொல்லி, "இப்போதாகிலும் முட்டைகளைக் காப்பாற்றுதற்கு என்ன செய்யலாம்?" என்றன.

அதற்கு அந்த நரி, "இப்பட்டணத்து ராஜகுமாரி குளிக்கிற மஞ்சன சாலைக்குப் போ; அவள் ஸ்நானம் பண்ணும்போது ஆபரணங்கள் கழற்றி வைத்திருக்கும்: அந்த ஆபரணங்களி லொன்றையெடுத்துச்சனங்கள் பார்க்கும்படி கொண்டுவந்து, அந்த மரப் பொந்திற்போடு" என்றுசொல்ல, காக்கையும் அப்படியே செய்தது. அந்த ராஜனுடைய வேலைக்காரர் போய். அந்த மரத்தின் பொந்தைப் பிளக்க,

நாகம் சீறிவந்தது. வரவே, அதை அவர்கள் இரண்டு துண்டாக நறுக்கி எறிந்தார்கள். ஆதலால் காகத்தின் காரியம் நிறைவேறிற்று.

## 22. ''எண்ணித் துணிக கருமம்''

ஒரு வனத்தில் வசித்திருந்த கிரகிரனென்னுஞ் சிங்கம், ஒருநாள் இரைக்கு நெடுநேரந் திரிந்தும் யாதொரு பக்ஷணமும் கிடையாமையினாற் போதுபோனவுடனே ஒரு பெருங் குகையைப் பார்த்து, "இதில் அடைதற்கு யாதேனும் ஒரு பிராணிவரும்; அதைத் தின்று பசியாறலாம்'' என்று, தனக்குள் தீர்மானித்து, அதில் ஒளித்துக்கொண்டிருக்க, அக்குகையில் வசிக்கிற அவிபுச்சனென்னும் நரி வந்து, அங்கே சிங்கத்தின் காற்சுவடுகளைக் கண்டு, சந்தேகித்து, "சிங்கம் இதில் இருக்கிறதையும் இல்லாததையுஞ் சோதித்தே உட்புகவேண்டும்'' என்று எண்ணி, தூரத்தில் நின்றுகொண்டு, "ஓ குகையே! குகையே!'' என்று இருமுறையழைத்து, "குகாய்! நீ என்னோடு பேசாமலிருக்கிறாய்; உனக்கும் எனக்கும் பிரதிதினம் ஸம்பாஷணை நடந்துகொண்டிருந்ததே; இன்றைக்கு என்ன? ஏன் நீ பேசவில்லை? விரைவாச் சொல்; அன்றேல் நான் மற்றோரிடத்திற்குப் போய்விடுவேன்'' என்று, மீண்டுங் கூப்பிட்டது.

அப்போது சிங்கம் நினைக்கிறது: "இக்குகை அதனோடு நாடோறும் பேசிக்கொண்டிருக்கும் போலும்; இன்றைக்கு நமது பயத்தினால் பேசவில்லை; இதற்குப் பதிலாக நாம் உத்தரங்கொடுப்போம்'' என்று ஆலோசித்து, பிரதித்தொனியினால் அருகேயிருந்த பிராணிகளெல்லாம் திடுக்கிடும்படி அந்நரியைக் கூவ, நரி, "அப்பா! நான் பிழைத்தேன்!'' என்று சொல்லி, வேறோரிடத்திற்கு ஓடிப்போய்விட்டது.

## XVI. வலியறிதல்

### 23. "வினைவலியும் தன்வலியும் மாற்றான்வலியும் துணைவலியும் தூக்கிச் செயல்"

சமுத்திரக் கரையில் இரண்டு சிட்டுக்கள் ஆணும் பெண்ணுமாய் ஒரு செடியின்கீழ்க் கூடுகட்டிக்கொண்டிருக்கும்போது, பெட்டை ஆண் பறவையைப் பார்த்து, "எங்கே முட்டையிடலாம்?" என்றுகேட்க, ஆண், "இதுவே நல்ல இடம்" என்று சொல்லிற்று. பெண்; "இக்கடற்கரையில் ஒருவேளை அபாயம் நேரிடும்" என, ஆண்சிட்டு, "சமுத்திரத்திற்கு என்னுடனே பகைத்துக்கொள்ளச் சாமர்த்தியம் இல்லை" என்றது. பெண் "உனக்கும் சமுத்திரத்திற்கும் வெகு தாரதம்மியம் இருக்கின்றதே; எவன் தன் வலியும் பிறன் வலியும் பார்க்கிறதில்லையோ, அவன் விபத்தை யடைவான்; எவன் பார்க்கிறானோ, அவன் சுகமடைவான்; மேலும், தனக்கு இதம் பண்ணுகிற மித்திரன் பேச்சைக் கேளாதவன், மரணமடைவன்" என்று சொல்லிப் பிறகு புருஷன் சொற்படி அங்கேதானே முட்டையிட்டது.

அப்போது சமுத்திரம் அதன் வல்லமையை அறியாது, முட்டைகளை அடித்துக்கொண்டு போக, சிட்டு வெகு துக்கமாய்ச் சேவலுடன், "சுவாமீ! தங்களுக்குப் பெரிய சங்கடம் வந்தது. முட்டைகளைச்சமுத்திரம் கொண்டுபோயிற்று; இப்போது என்ன செய்யலாம்?" என்றது. சேவல், "நீ பயப்படாதே; நான் முட்டைகளைக் கொண்டுவருவேன்; என் திராணியைப் பார்" என்று, எல்லாப் பறவைகளையும் கூட்டிக்கொண்டு, கருடனைச் சரணமடைந்தது.

கருடன் அதை விஷ்ணுவுக்கு அறிவித்து, "அப்பறவை மிகவும் வருத்தப்படுகின்றது; ஆகையால் அதன் முட்டைகளைக் கொடுப்பிக்க வேண்டும்" என, விஷ்ணு சமுத்திரத்தைப் பார்த்து, "அதன் முட்டைகளைச் சீக்கிரமாய்க் கொடு" என்று கட்டளை யிட்டவுடனே, சமுத்திரம் முட்டைகளைக் கொண்டுவந்து கொடுத்தது. ஆகையால், சத்துருக்களுடைய பராக்கிரமம் அறியாமல் பகைத்துக்கொள்ளலாகாது.

## XVII. காலமறிதல்

24. "ஊக்க முடையான் ஒடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேரும் தகைத்து"

ஒரு தேயத்தில் மந்தவிஷனென்னும் பாம்பு இரை கிடையாமல் மிகவும் பசித்து, ஓர் ஏரிகரை யண்டை வரும்போது, அதிலே தவளைகள் நிரம்பி யிருப்பதைக் கண்டு, "இங்கே ஏதேனும் ஒரு கபடம் பண்ணினாலல்லாமல், நமக்கு இரை அகப்படாது" என நிச்சயித்துக் கண்ணை விழித்துக்கொண்டு உட்கார்ந்திருக்க, அப்போது ஒரு தவளை, "பாம்பே! நீ இரைதேடும் முயற்சியை விட்டுச் சும்மா ஏன் உட்கார்ந்திருக்கிறாய்?" என்றது.

அதைக் கேட்டுச் சர்ப்பம், "அபாக்கியனாகிற எனக்கு ஆஹாரம் எங்கிருந்து கிடைக்கும்? இன்றைக்குப் பிரதோஷ காலத்தில் இரைக்காகத் திரிந்துகொண் டிருக்கையில், ஒரு தவளையைப் பார்த்து, அதைப் பிடிக்கப் போகையில், அஃது அங்கிருந்த மிகவுஞ் சற்பாத்திரனாகிய ஒரு பிராமணனண்டை ஓடிப்போயிற்று; அது தெரியாமல், நான் இங்கும் அங்கும் பார்த்துக்கொண்டிருக்கையில், அங்கே நீராடிக் கொண்டிருந்த ஒரு பிராமணப் பிள்ளையின் காலை இதுதான்

தவளையென்று நினைத்துக் கடித்தேன். உடனே, அவன் அக்கணமே இறந்தான். அப்பிள்ளையின் பிதா மிகவுந் துக்கத்தால் என்னைப் பார்த்து, 'துஷ்டப் பாம்பே! யாதொரு குற்றமுஞ் செய்யாத என் பிள்ளையைக் கடித்தபடியினால், நீ மண்டுகங்களுக்கு வாகனமாகக் கடவாய்; மற்றும் அவைகளுடைய சேர்க்கையாற் சீவனமும் பண்ணக் கடவாய்' என்று சபித்தான். அதனால், நான் உங்கட்கு ஊழியஞ் செய்ய வந்தேன்'' என்றது.

இங்ஙனம் அப்பாம்பின் பேச்சைக் கேட்டு, அஃதெல்லாத் தவளைக்குஞ் சொல்ல, தவளையெல்லாம் தங்கள் அரசனுடனேகூட வெளியே வந்து, மிகவுங் களிப்புடனே மந்த விஷ ஸர்ப்பத்தின்மேல் உட்கார்ந்தன. அஃது அவற்றிற்குப் பலவித கதிகளைக் காண்பிக்க, தவளைகள், "யானை குதிரை தேர்களிலும் இவ்வாஹநம் நன்று யிருக்கிறது!'' என்று மெச்சிச் சந்தோஷித்தன. பின்பு அப் பாம்பு இரண்டு மூன்று நாள் வரைக்கும் அவ்வாறே நடந்து, பிறகு மந்த கதியாய்ப் போகத் தொடங்கிற்று.

அப்போது, அவைகள், "இன்றைக்கு மெல்லென ஏன் நடக்கிறாய்?'' என, அப்போது புஜங்கம், "நான் பசித்திருக்கிறதனால், நடக்கக்கூடவில்லை'' என்றது. மண்டுக ராஜன். "நீ சிறு தவளை பார்த்துத் தின்றுகொண்டிரு'' என, கேட்டுச் சர்ப்பம், "எனக்கு இவ்வண்ணமே அந்தண சாபம் இருக்கிறது; அப்படியே தாமுங் கட்டளையிட்டீர்'' என்று சொல்லி, நாடோறும் தவளைகளைத் தின்றுகொண்டிருக்கும்போது, அங்கே வேறோர் அரவு வந்து, இதன் நடத்தையைப் பார்த்து, "நம்முடைய பக்ஷணங்களை நீ ஏன் சுமக்கிறாய்? இது மிகவும் விருத்தம்; உனக்கு இது யோக்கியமன்று'' என்றது,

அதற்கு மந்தவிடன், "நான் அவ்வெல்லாம் அறி வேன்; சிலநாள் என் கருத்து நிறைவேறுங் காலத்தை எதிர் பார்த்துக்கொண் டிருக்கிறேன்." என்று சொல்லிப் புன்சிரிப்புடனே பழையபடி நடந்துகொண் டிருந்தது. இப்படி நடந்து, எல்லா மண்டூகங்களையுந் தின்று, கடைசி யில் அவற்றின் அரசனையும் பக்ஷித்தது.

## 25. "சேறுநரைக் காணிற் சுமக்க இறுவரை காணிற் கிழக்காம் தலை"

தண்டகாரணியத்திலே சஞ்சரிப்போனாகிய சண்ட கருமனென்னும் ஓர் இராக்கதத்தலைவன் ஆங்கு எதிர்ப் பட்ட ஓர் அந்தணனைப் பிடித்து,அவன் தோண்மேல் ஏறிக் கொண்டு, நடத்திச் செல்லுகையில், அவ்வேதியன் மிக்க பொறுமையுடன், "நமக்கு இது நற்காலமன்று; ஸமயம் வாய்த்த போது, நாம் தப்பித்துப் போய்விடலாம்" என்று மனத்திற்குள் முடிவு செய்துகொண்டு, இராக்கதன் இழு த்த வழிக்கெல்லாம் சென்று, பிறகு ஒருநாள் அவனை நோக்கி, மிகப் பணிவுடன், "ஐயா! இராக்கதகுல ச்ரேஷ் டரே! உமது காலடிகள் மிகமெல்லியவா யிருக்கின்றனவே! அதற்கு என்ன காரணம்?" என்று கேட்டான்.

அரக்கன் பிராமணனது பணிவுக்கு வசப்பட்டு, "அந் தண! நான் நீராடி ஈரம் புலருமளவும் நிலத்தில் அடி வை யேன்" என, அந்தணன், "அப்படியோ" என்று கேட்டுச் சும்மாவிருந்து, ஒருநாள் இராக்கதன் ஒரு குளத்தில் இற ங்கி நீராடும் தருணம் பார்த்து, "இதுதான் ஸமயம்; இவன் மூழ்கி வெளியில் வந்து சேர்ந்தால், இவன் வயிற்றழலில் நாம் மூழ்காதிரோம்; அதன்முன் நாம் ஓடித் தப்பிவிட வேண்டும். நல்ல வேளையாக இவன் காலுலருமுன் அடி

பெயமாட்டான் அல்லனோ?" என்று முடிவு செய்து கொண்டு, ஓட்டம் பிடித்தான்.

இராக்கதன் பார்த்து, "ஐயோ! நான் இவனை விரைந் தோடிப் பற்ற முடியவில்லையே! பார்ப்பான் ஏய்த்தானே! கைக் கெட்டினது வாய்க்கு எட்டாமல் இழப்புற்றேனே! கடிதோடிப் பின்சென்று பிடிப்போமென்றால், நோன்பு கெட்டுப் போகிறது" என்று மனமறுக்கமுற்று ஏங்கி, நெட்டுயிர்த்துச் சும்மா நின்றனன்.

## XVIII. இடனறிதல்

26. "தொடங்கற்க எவ்வினையும் எள்ளற்க முற்றும்
இடங்கண்ட பின்னல் லது"

அயோத்தியா நகரத்திருந்த சித்ராங்கனென்னும் ஒரு நாய், பஞ்சத்தினாற் சோறு கிட்டாமல், மறு தேயத்திற் சென்று, ஒரு கிருஹஸ்தன் வீட்டுக்குப் போய், அவ்வீட் டுக்காரி சோறுபோட்டு ஆதரிக்க, அன்றுமுதல் வெகுநாள் வரைக்கும் அங்கேயிருந்து, ஒருநாள் ஸஹஜமாய் வீட்டுக்கு வெளியே வந்தது.

வந்தவுடனே, அவ்வூர் மற்றை நாய்கள் இதன்மேலே விழுந்து, அனேக விடத்திற் கடித்து, அதன் உதிர மாமிசங் களை வெளிப்படுத்தினதனாற் சித்திராங்கன் மிகவும் துக்க மடைந்து, "என்ன பஞ்சம் வந்தாலுஞ் சுவதேசத்தைவிட்டு வரலாகாது" எனத் தனக்குள் தேறி, மீண்டும் அயோத்தி க்கு ஓடிவந்த மாத்திரத்தில், அதற்கு உறவாகிய நாய்கள், "சித்திராங்கா! அத்தேயம் எப்படியிருக்கிறது?" என, சித் திராங்கன், "அத்தேயம் செழிப்பா யிருக்கின்றது; மாதர் களும் தயாசாலிகளாகவே யிருக்கிறார்கள்; சுசாதி மித்திரத் துவமில்லை; ஆதலால் இவ்வவஸ்தை நேரிட்டது;" என்றது.

## XIX. தெரிந்து தெளிதல்

### 27. "தேரான் பிறனைத் தேளிந்தான் வழிமுறை தீரா இடும்பை தரும்"

முற்காலத்தில் ஒரு முதுமரப் பொந்தில் கபிஞ்சலன் என்னும் ஆந்தை வாஸம்பண்ணிக்கொண் டிருக்கையில், ஒருநாள் அதனிடத்திற்கு வேறொரு பக்ஷி வர, அதைக் கண்டவுடன் கபிஞ்சலன் அதனோடு கூடப் பறந்துபோய், இரண்டுநாள் வரையில் மீண்டுவாராமையால், மூன்றும் நாள் அதன் பொந்தில் ஒரு முயல் வந்து குடிபுகுந்தது. எங்கே யோசிலநாள்கபிஞ்சலன் மனத்தின்படியேநெற்களைத்தின்று கொண் டிருந்து, பிறகு தன்னிடத்துக்கு வந்து பார்க்கை யில், தன்வீட்டில் முயல் இருக்கக் கண்டு, அதைப் பார்த்து "அடா! சசமே! உனக்கு என்வீட்டில் இருக்கை நன்ற ன்று; பொட்டெனப் புறப்பட்டுபோ" என்றது.

இதைக்கேட்டு முயல், "அடா! பேதாய்! இஃது உன் வீடன்று; என்வீடே; வீணாகப் பொய்சொல்லிப் பயனில் லாமல் நட்பை ஏன் இழக்கிறாய்? வாவி, கிணறு, குளம், கோயில், சத்திரம் இவற்றின் சொத்துவம் அவற்றைவிட்டு நீங்கினபிறகு, அந்நீங்கினவனிடத்தில் இராது; மற்றும் ஒருவன் வீட்டைப் பிறனொருவன் பத்தாண்டளவும் யாவ ரும் அறிய அனுபவித்தால், அவ்வீடு அவனதே;இந்த விஷ யத்திற் சாக்ஷியும் எழுத்தும் பிரமாணமாகா; இந்த நியாயம் மனிதர்களிடத்தில் இருக்கிறது; பறவைகளில் எது வலி தோ அது கைக்கொள்ளும் என்று இப்படித் தரும நியா யம் இருக்கிறதனால், வீடு எனதே" என்றது.

ஆந்தை, "நீ தரும சாஸ்திரத்தைக் குறித்துப் பேசு கின்றமையால், நீயும் நானும் சாஸ்திரிகளிடத்திற் போய், இதைக் குறித்துக் கேட்டு, அவர்கள் யாரை யிருக்கலா

மென்கிருர்களோ, அவர் இருக்க உடம்படுவோம்'' என்று சொல்லி நிச்சயித்து, இரண்டும் விவாதம் பண்ணிக்கொண்டு போகையில், அங்கே கூர்ம்பல்ல னென்னும் பூனை இவர்களது பேச்சைக்கேட்டு, "இவர்கள் வழக்குத் தீர்ப்புக்குப் போகிருர்கள்; இவர்களை மோசம்பண்ணவேண்டும்'' என்று நிச்சயித்து, அந்த வழியில் ஆற்றங்கரையிற் கண்ணை மூடிக்கொண்டு, சூரியனைப் பார்க்கிறது போல அபிநயித்துக் கொண்டு, "ஆ! ஆ!! இந்த அஸாரமான ஸம்ஸாரத்தில் உண்டாகிற இன்பம் கணத்தி லழிந்து கனுப்போலப் பொய்யாகிறதனுல், தருமத்தைவிட வேறே கதியில்லை. அறத்தை விட்டு எவன் நாள்களைக் கழிக்கிருனே அவன் மாப்பாவையை ஒத்தவன்; அவனை மூச்சு விட்டுக்கொண்டிருக்கையிற்றனே பிணமென்று எண்ணவேண்டும்; எப்படித் தயிரிற் சாரம் நெய்யோ, எள்ளில் விசேஷம் எண்ணெயோ, அப்படியே பிழைத்திருக்கிறதிற் சாரந் தருமமாம்; இதைத் துறந்து மிகவுஞ் சோற்றைத் தின்றுகொண்டே காலங் கழிக்கின்றவர் நிலச்சுமையா யிருக்கிருர்கள் என்று துக்கப் படுகிறேன். ஓ! ஜனங்களே! தருமம் பலபல இடையூறுகளோடு கூடிக்கொண்டிருக்கிற தாகையாற் சுருக்கமாய்ச் சிறிது தருமஞ் சொல்லுகிறேன். பிறர்க்கு உதவி செய்வதற்கொத்த புண்ணியமும், பிறரை வருத்துவதை யொத்த பாவமு மில்லை. மேலும் தனக்குத் துன்பந்தருவது பிறனுக்குந் தரும் என்று இப்படித் தர்ம ரஹஸ்யங்களைக் கேட்டு, உள்ளத்தில் வைக்கவேண்டும்'' என்று, பிரசங்கஞ் செய்துகொண்டிருந்தது.

இப்படி அதன் வாக்கியத்தைக் கேட்டு, முயல், "கபிஞ்சலா! தருமஞ் சொல்லுகிறவன் ஆற்றங்கரையில் உட்கார்ந்திருக்கிருன்! அவனைக் கேட்பாம்'' என்றது. கபிஞ்சலன்,

"இவன் நமக்கு இயல்பான பகையாளி; ஆதலால், தூரத்தி லிருந்தே சொல்ல வேண்டும்" என்று நிருணயித்து, அவ னைப் பார்த்து, "ஓ! தபோநிதியே! நீ அறமுணர்ந்தவனுகை யால்? எங்களிருவருடைய வழக்கையுங் கேட்டுத் தரும நூற்படி நியாயஞ் சொல்லிப் பொய் சொல்லுகிறவனைக் கொல்ல வேண்டும்" என்றது.

இவ்வார்த்தையைக் கேட்டுப் பூனை காதின்மேற் கையை வைத்து, "இப்படிப்பட்ட பேச்சை மறுபடி சொல்லாதீர் கள்; நரகத்திற்குக் காரணமாகிய இதை விட்டு, நான் அறத்தை அநுசரித்துக்கொண் டிருக்கிறேன்; மேலும், கொலை செய்கிற புலி முதலானவற்றைக் கொல்லுகிறவர் களும் நரகத்திற்குப் போகிறுர்களென்று ஸாதுக்கள் சொல் லுகிறுர்கள்; மற்றவற்றின் கொலையினுல் நரகம் வருமென்ப தில் ஆச்சரியம் என்ன? யாக கருமத்திற் பசுவைக் கொல்லு கிறவர்கள் வேதத்திலுள்ள பொருளை அறியாதவர்கள்; அந்த விஷயத்தில் எழு வருடத்தின் நெல்லைக் கொண்டு வந்து ஓமம் பண்ணவேண்டுமென்று சொல்லி யிருக்கிறது; பசுக்களைக் கொன்றும் மரங்களை வெட்டியும் ஓமம் பண்ணி ஸ்வர்க்கங் கிடைக்கிறதானுல், நரகத்துக்கு என் போகிறுர் கள்? ஆதலால், இவை யெல்லாம் வஞ்சகர்களுடைய காரிய மென்று அறிந்திருக்கின்றமையால், உங்களைச் சுத்தமாய்த் தின்னேன்; உங்களுக்கு வழக்குமாத்திரந் தீர்ப்பேன்; நான் கிழவனுனபடியினுல், எனக்குத் தூரத்துச் சொற்கேளாது; நீங்கள் கிட்ட வந்து, ஒருவர்க் கொருவர்க்கிருக்கிற வழக்கு என்னவோ, அதைச் சொன்னுற் கேட்டு, இம்மைக்கும் மறுமைக்கும் நலந்தருவதாகிய நடுவுநிலைமையைச் சொல் லுவேன்; ஆசையாலாயினும் கோபத்தாலாயினும் அநியா யத் தீர்ப்புச் சொல்லுகிறவன் நரகத்திற் போவான்: ஆத

லால், நீங்கள் என் காதின் அருகே வந்து, உங்கள் வழக்கைத் தெரிவியுங்கள்" என்றது.



அவை இப்பசப்பு வார்த்தையினுல் அதனிடத்தில் நம்பிக்கை வைத்துக் கிட்ட வர, அஃது அவற்றைக் கைகளினுல் ஒருமிக்கச் சேர்த்துப் பிடித்து, வழக்கற இரண்டையுந் தின்றது.

## XX. செங்கோன்மை

28. "எண்பதத்தா ஞேரா முறைசெய்யா மன்னவன்
தண்பதத்தாற் ருனே கெடும்"

ஒரு நெருங்கிய காட்டில் மதோன்மத்த னென்னுஞ் சிங்கமானது அந்தக் காட்டிலிருக்கிற மிருகங்களைக் கொன்று தின்று, கொழுத்து வெறிகொண்டு திரிகிற நாளில், மிருகங்களெல்லாம் ஒன்ருகத் திரண்டு அதனிடத்துப் போய், ஓ "மிருகேந்திரரே! உம்முடைய காட்டிலிருக்கிற மிருகங்களை யெல்லாம் இப்படிக் கொன்ருல், மிருகங்கள் நிர்மூலமாய்ப் போம்: ஆதலால், நாங்கள் தினம் ஒவ்வொன்று உமக்கு இரைகொடுத்துக்கொண்டு வருகிறேம்; அதை நீர் பக்ஷித்துக்கொண் டிருக்கலாம்" என்று பிரார்த்திக்க, சிங்கம் மெய்தானென்று நம்பி, "அப்படியே செய்கிறேன்" என்று சத்தியஞ் செய்து கொடுத்தது.

பின்பு மிருகங்களை ஒவ்வொன்றாய்ச் சிங்கம் தின்று கொண்டு வரும் நாளில், ஒருநாள் ஒரு கிழ முயலினுடைய முறை வந்தது. அப்போது, விலங்குகளெல்லாங் கூடி, "இன்றைக்கு உன் முறை; போ,' என்று சொல்ல, முயலானது, "இன்றைக்கு நமக்கு மரணம் வந்தபடியால், இதற்கு ஓர் உபாயம் ஆலோசிக்க வேண்டும்; புத்திமானுக்கு எது தான் கைகூடாது? ஆகையால், இப்போது நாம் உபாயத் தாற் சிங்கத்தைக் கொல்லுவோம்" என்று ஆலோசித்து, மெள்ள மெள்ள நடந்து, சிங்கத்தின் பசிவேளை தப்பி வந்தது.

சிங்கம் அதைப் பார்த்து, "முயலே! யானையானாலும் என்னுடைய பசிவேளை தப்பி வருகிறதில்லை; நீ எவ்வளவு பிராணி? இப்படித் தாமசமாய் வரலாமா?" என்று மிகுந்த கோபத்தோடுங் கையைத் தரையிலே மோதிக் கேட்க, முயல், "ஐயனே! இஃது என்குற்றமன்று: உன்னுடைய பசிவேளைக்கே வந்தேன்? வந்த வழியில் ஒரு பொல்லாத சிங்கத்தைக் கண்டு பயந்து, ஒளித்திருந்து, அந்தச் சிங்கம் போன பின்பு வந்தேன்" என்று சொல்ல, சிங்கம், "என்னை யல்லாமல், இந்தக் காட்டில் வேறே சிங்கம் நீ பார்த்தய்யா? காட்டுவா" என்று அழைக்க, முயல் அழைத்துக் கொண்டு போய், சேறும் நீரும் மிகுந்த ஒரு பாழுங் கிணற்றைக் காட்டி, "இதிலே யிருக்கிறது" என்றது.

சிங்கம் முயலின் பேச்சை நம்பிக் கிணற்றை எட்டிப் பார்க்க அதில் தன் நிழல் தோன்றக் கண்டு, அந்தச் சிங்கம் அங்கே இருக்கிற தென்று நினைத்து, மிகுந்த கோபத் தோடு அதைக் கொல்ல வேண்டுமென்று அதிற் பாய்ந்த வுடனே, சேற்றில் அழுந்தி, இறந்தது.

## XXI. மடியின்மை

29. "இடிபுரிந்து எள்ளுஞ்சொற் கேட்பர் மடிபுரிந்து
மாண்ட உஞற்றி லவர்"

பண்டாபுரத்தில் கிருபண சர்மன் என்னும் ஒரு பிரமசாரி பிக்ஷையெடுத்து வயிறு நிரப்பி, மிகுந்த அரிசிகளை ஒரு பானையிற் பெய்து, அதை ஓருறியில் வைத்து, அதன் கீழ்ப் படுத்து, வீணே மனோராச்சியம் பண்ணிக்கொண்டிருப்பான்.

ஒருநாள் வழக்கப்படி மனோராச்சியம் செய்து கொண்டிருக்கையில், "ஆ! ஆ! நாட்டில் பஞ்சம் வந்தால், இவ்வரிசியை இருமடங்கு விலைக்கு விற்று, அப்பொருளைக் கொண்டு ஒருகாராடு வாங்குவேன்; அது குட்டிபோட்டுப் பல்கிய பின்னர், அவற்றை ஒரு நல்ல பசுவுக்கு மாற்றுவேன்; அது கன்றுகளோடு பெருகிய பின்னர், அவற்றை விற்று ஒரு நல்ல குதிரை வாங்குவேன்; அது குட்டிகள் ஈன்று விருத்தியானதும், அக்குட்டிகளை விற்றுச் செல்வமுடையேனாவேன்; பின்னர் ஒரு பார்ப்பனக் கன்னியை நாடி மணம் புரிவேன்; அவள் வயிற்றில் ஒரு புத்திரன் பிறப்பான்; அது தவழ்க்கையில், யான் என் அகத்துக்காரியை நோக்கி, 'அடி, பெண்ணே! குழந்தையை எடு; முழங்கால்கள் தேய்ந்துவிடும்' என்பேன்; அவள் வேலைக் கொடுமையால் எடாள். அப்பொழுது அவளுக்கு இப்படி ஓர் உதை கொடுப்பேன் என்று சொல்லிக்கொண்டு ஓர் உதை உதைக்க, அவ்வுதை அரிசிப்பானையிலே தாக்கி, அஃது உடைந்து, இருந்த அரிசி முழுவதும் கொட்டுண்டு இறைந்து பயன் பெறு தாயிற்று.

## XXII. ஆள்வினையுடைமை

### 30. "பொறியின்மை யார்க்கும் பழியன்று அறிவறிந்து ஆள்வினை யின்மை பழி"

மகத தேசத்தில் ஒரு மலர்ப்பொய்கையில் அறிவாயிரத் தன் நூறறிவன் என்னும் இரண்டு மீன்கட்கும் ஓரறிவன் என்னும் ஒருதவளைக்கும் நட்புளதா யிருக்குங் காலையில், ஒருநாள் ஆங்கு ஒரு வலைஞன்வந்து, "நாளை இக்குளத்தி லுள்ள மீன்களை யெல்லாம் பிடிக்கவேண்டும்" என்று சொல் லிப் போனான். அதைக் கேட்டிருந்த அந்தத் தவளை தன் உற்றாரான மீன்களுக்குச் சொல்ல, அறிவாயிரத்தன், "நான் நீர்நடை பலவும் கற்றுவல்லேன். என்னை அவ்வலை ஞனால் பிடிக்கக்கூடாது!" என்றது. நூறறிவன், "நாம் இடம் விட்டுப் பெயரப்படாது. யாது ஆகற்பாலதோ அஃது ஆகியே தீரும்" என்றது. அதைக்கேட்ட தவளை, "நான் இங்கு இருக்கமாட்டேன். இதோ போகிறேன். நீங்களும் வாருங்கோள்" என்றது. அதற்கு மீன்கள், "நீ ஓர் அறிவனா யிருக்கின்றாய். போவையானால் போ, யாம் வருவேமல்லேம்" என்று கூறிவிட, அத்தவளை தன் சுற்றத் தோடு வேற்றிடம் போயிற்று.

மறுநாள் செம்படவன் வந்து வலைவீச, அதிற் சிக்கிய பற்பல மீன்களோடு அறிவாயிரத்தனும் நூறறிவனும் அகப்பட்டுக் கொண்டன. அவை தப்பியோடத் துள்ளு கையில், செம்படவன் அவற்றைத் தடியா லடித்துக் கொன் றான். முன்னாலே காத்துக்கொள்ள முயற்சி செய்யாமல் சோம்பி இருந்ததனால், அவற்றுக்கு இக்கதி வந்தது.

## XXIII. இடுக்கணழியாமை

31. "இலக்கம் உடம்பிடும்பைக் கேன்று கலக்கத்தைக் கையாறுக் கோள்ளாதாம் மேல்"

கங்கைக்கரையில் நாவன் மாத்தின்மேற் சுமுகனென் னும் ஒரு வானாஞ் சிலகாலம் வாஸம் பண்ணிக்கொண்டிருக் கையில், அங்கே வந்த ஓர் இளைத்த முதலையைப் பார்த்து, "நீ என் கிருகத்துக்கு விருந்தாக வந்தமையால், உனக்கு நாவற்பழந் தருகிறேன்" என்று சில பழங் கொடுத்தது. அது தின்று அத்யந்தம் ஸந்தோஷத்துனே தன்னிடத் திற்குப்போய்,அன்று தொடங்கித் தினந்தினம் வந்து,நாளு வார்த்தைகள் பேசிக்கொண்டு, இரண்டும் அந்நியோந்யமா யிருந்தன.

அப்படியிருக்க,ஒருநாள் முதலை சில கனிகள் கொண்டு வந்து தன் இல்லாட்குக் கொடுக்க, அது தின்று, அக்கனி அமிர்தம்போல விருக்கக் கண்டு, தன் நாயகனைப் பார்த்து, "பிராண நாதா! இந்தத் தித்திப்பான கனிகள் எங்கிருந்து கொண்டுவந்தாய்?" என்றது. ஆண் முதலை, "சுமுகவாநா னென்னும் என் நண்பன் எனக்கு நாடோறுங் கொடுக்க, நான் அங்கேதானே அவற்றைப் புசித்துக்கொண்டு வந் தேன். இன்றைக்குத் தின்று, மிகுதியை உனக்குக்கொணர் ந்தேன்" என்றது கேட்டுப் பெண் முதலை, "இத் தீங்கனி தின்பவன் ஈரல் அமிர்தத்திற்கு ஒப்பாயிருக்கும்; அதைக் கொணர்ந்து எனக்குக் கொடு; அதனல், நான் மூப்புச் சாக் காடில்லாமல் உன்னோடு நெடுங்காலஞ் சுகித்திருப்பேன்" என்றது.

இதைக்கேட்டு முதலை, "எனக்கு உயிர்க்கு உயிரா யிருக்கிற நட்டோனுகிய வாநாத்துக்கு நீ ஏன் இந்தத் தீங்கு

நினைக்கிறாய்?" என, அது, "நான் உனக்கு அகத்தியமாயிருந்தால், அதனீரலைக் கொணர்ந்துகொடு; இல்லாவிட்டால், நான் உயிர் வைத்துக்கொண் டிரேன்" என்றது. ஆண் முதலை, "காதலி! ஸஹோதானிலும் மித்திரன் அதிகமாதலால், அவனைக்குறித்து நீ அடம் பண்ணவேண்டாம்" என்று,மோவாய்க்கட்டையைப் பிடித்து வேண்டிக்கொள்ள பெண்முதலை, "நீ என்றைக்கும் என் பேச்சுக்குக் குறுக்குச் சொன்னதில்லை; இன்றைக்கு மாத்திரம் மனக்குறைச்சற் பண்ணுகிறாய் ; ஆதலால் இதோ நான் ஜீவனை விடுகிறேன்" எனப் பிடிவாதஞ் செய்யக் கரா பெண்ணின் நிச்சயத்தை யறிந்து,"அச்சுமுகன் எனக்குக் கொல்லக்கூடாதவனாயிருக்கிறான்; நீயா பிடித்ததை விடாமலிருக்கிறாய்: ஆகலான் நான், 'இருதலைக் கொள்ளி யெறும்பு' போலாயினேன்" என்று இங்ஙனஞ் சொல்லி,சுமுகனிடத்திற்குப் போயிற்று.

அப்போது சுமுகன், "நண்பனே! இன்றைக்கு என் வியசனமா யிருக்கிறாய் ?" என, முதலை, "மற்றொன்று மில்லை; உன்மைத்துனர்ச்சி என்னைப் பார்த்து, 'துஷ்டா! நன்றி கெட்டவனே!நீ யாராலே சீவனம் பண்ணுகிறையோ அவனை ஒரு நாளைக்காயினும் நமது வீட்டிற்கு அழைத்து வந்து விருந்திட வேண்டாமா? அவன் வீட்டுக்கு மாத்திரம் வெட்கமில்லாமற் போய்ப்போய் நல்ல பழங்களைத் தின்னுகிறாயே!' என்றிப்படித் திட்டிக் கோபித்தாள். ஆதலால், நீ என் வீட்டுக்கு வா; உன்னைக்குறித்துப் பல பல பதார்த்தங்கள் தேடி வைத்துக்கொண்டு, வழி பார்த்து, உட்கார்ந்துகொண் டிருக்கிறாள்" என்றது.

வாநாம், "நண்பனே! எனக்குத் தண்ணீரில் வரக்கூடாது; ஆதலால், நீ என் பிரியமுள்ள மைத்துனச்சியை இங்கே கூட்டிக்கொண்டு வா" என்றது. மகரம் "சுமு

கனே! நான் கங்கைக்கரையில் இருக்கிறேன்; நீ என் முது கின்மேல் உட்காந்துகொண்டுவா; நோவாமற் கொண்டு போவேன்" என்றது. அதில் நம்பிக்கைவைத்துக் குரங்கு அப்படியே உட்கார்ந்துகொண்ட மாத்திரத்தில், முதலை தண்ணீரிற் குதித்துப் போயிற்று. வாநரம், "எனக்கு அச்சமாயிருக்கிறது; மெள்ளமெள்ள நட" எனவே, அதைக் கேட்டு முதலை, "இப்போது சுமுகன் நம்முடைய அதீனத்தில் இருக்கிறான்; இனி இவனுக்கு நம் கருத்தை வெளியிடுகிறதற்குக் குறை யென்ன இருக்கின்றது? 'உரலிலகப்பட்டது உலக்கைக்குத் தப்புமா?" என்று இங்ஙனம் தனக்குள் தீர்மானித்துக்கொண்டு, "மித்திரா! உன்னிஷ்ட தேவதையை நினை; பெண்சாதியின் பிடிவாதத்தால் உன்னைக் கொல்லக் கொண்டு போகின்றேன்" என்றது. குரங்கு, "நான் என்ன பிழை செய்தேன்?" என, முதலை, "நீ நேற்றுக் கொடுத்த நறுங்கனிகளை என் மனைவி தின்றதன்மேல், 'இத்தன்மையான தீங்கனியைத் தினந் தின்னுகிற பாக்கியவான் ஈரல் கேவலம் அமிழ்தத்தை ஒத்திருக்கும்; ஆதலால், நீ அவனீரலை எனக்குக் கொணர்ந்து கொடாவிடில், நான் பிராணனை வைத்திரேன்' என்றாள். அதைக்குறித்துத் தான் உன்னைக் கொண்டுபோகிறேன்" என்றது.

அதைக்கேட்டு வாநரம், "ஓகோ! இப்படி யென்று எனக்கு முன்னமே தெரிந்தால், அந்த மரத்தின்மேல் ஒளித்துவைத்திருக்கிற அந்த ஈரலை உனக்கு அங்கேயே கொடுத்திருப்பேன்; வெறும் இருதயத்தோ டிருக்கையில் என்னை வீணாகக் கொண்டுவந்தாய்!" எனக் கிலேசப்பட, அப்போது மகரம், "என் பிராணமித்திரா! அதைக் கொடுத்தால், அவள் ஸந்தோஷமாவாள்" என்று சொல்லி, வாநரத்தை அதிசீக்கிரத்தில் முன்னிடத்திற் கொண்டுவந்து

விட்டது. உடனே, வாநரம் குதித்து மரத்தின்மேல் ஏறிக்கொண்டு, "இன்றைக்குக் காலன் கையிலிருந்து விடுபட்டேன்!" என்று எண்ணிக்கொண்டிருக்கையில், முதலை, "மித்ரா! ஈரலைச் சுறுக்காய்க் கொடு; உன் அண்ணியார்க்குக் கொடுத்துவிட்டு வருகிறேன்" என்றது. கேட்டு வாநரம் நகைத்து, "மூடா! துஷ்டா! ஈரல் உடம்பை விட்டிருக்குமா? அஃது இருக்கட்டும். நீ விசுவாச காதகனுதலால், இங்கிருக்கவேண்டாம்! சீக்கிரத்திற் புறப்பட்டுப்போ! உன்னைப் பார்க்க என் கண் நாணுகின்றது" என்று வைது அனுப்பிற்று.

## XXIV. அமைச்சு

32. "தெரிதலும் தேர்ந்து செயலும் ஒரு தலையாச்
சொல்லலும் வல்லது அமைச்சு"

தென்னாட்டிலே மகிழாரூப்பியம் என்னும் பட்டணத்திலே வர்த்தமானன் என்று ஒரு வர்த்தகன் இருந்தான். அவன் தனக்கு வெகு பணம் இருந்தும், இன்னும் சம்பாதிக்கவேண்டும் என்கிற ஆசையினுல் பின் வருகிறபடி ஆலோசிக்கலானுன்: "யாதொன்று சம்பாதிப்பது அருமையோ, அதைச் சம்பாதிக்கவேண்டும்; சம்பாதித்ததைக் காப்பாற்றவேண்டும்; காப்பாற்றினதை விருத்தி பண்ணவேண்டும்; விருத்தி பண்ணினதைத் தானும் அனுபவித்து உத்தமபாத்திரத்திலும் செலவழிக்கவேண்டும்; காப்பாற்ருத திரவியம் நாசமாகும்; விருத்தி பண்ணுதது குறையும்; தானும் அனுபவித்துச் சற்பாத்திரத்திலும் செலவழியாதது வீணுகு மெனச் சாஸ்திரம் கூறுகிறது. மேலும், இன்பமும் புண்ணியமும் கீர்த்தியும் மனிதர்க்குள்ளே பெருமையும் உறவும் நினைத்தது முடித்தலும் யாருக்கு

உண்டு? திரள் திரளாகப் பணங் குவித்தவர்களுக்கேயுண்டு; இல்லாதவர்கள் உலகத்திலே நடைப் பிணமாவார்கள். ஆகையினாலே, மேன்மேலும் சம்பாதிப்பதே யோக்யம்'' என்று ஆலோசித்துக்கொண்டு, தன்னிடத்திலிருந்த சரக்குகளை வண்டியிலேற்றி, அதில் சஞ்சீவகன் நந்தகன் என்னும் பெயரை உடைய, இரண்டு எருதுகளைப்பூட்டி, நடத்திக் கொண்டு, தேசாந்தரம் போனான்.

போகும்போது, ஒரு நாள் நெருங்கிய காட்டிலே மிகுந்த பாரத்தினால் சஞ்சீவக னென்கின்ற எருது காலிடறி விழுந்து, நொண்டியாயிற்று, அப்போது, வர்த்தமானன் அந்த எருதுக்குப் பதிலாக வேறோர் எருதை வண்டியிற் கட்டி ஓட்டிக்கொண்டு அவ் வெருதுக்கு ஓர் ஆளைக் காவல் வைத்துப்போனான் பிறகு அச்சேவகன் வர்த்தகனிடத்துக்கு இரண்டொருநாள் கழித்துப்போய், "அந்த எருது செத்துப்போயிற்று'' என்று பொய் சொன்னான்.

காட்டில் விடப்பட்ட எருதோ, ஆயுர்ப் பலத்தினாற் பிழைத்து, புல்லு முதலாகிய மேய்ச்சலினால் மிகவும் பருத்துக் கொழுத்து, ஒடிந்த காலுங் கூடி, அந்தக் காட்டிலே யதேச்சையாகத் திரிந்து கொண்டிருந்தது. அப்படியிருக்கையில், இராச்சிய பட்டாபிஷேகச் சடங்குகள் இல்லாமல், காட்டிற் சஞ்சரிக்கிற பிராணிகளுக்கெல்லாம் தன் வல்லமையினால் ராஜத்வத்தை அடைந்திருக்கிற பிங்களன் என்னுஞ் சிங்கமானது, தன் பராக்கிரமத்தாற் சம்பாதிக்கப்பட்ட இராச்சியத்தைச் சுகமாக அநுபவித்துக்கொண்டிருக்கையில், ஒருநாள் தாகமெடுத்துத் தண்ணீர் குடிக்க யமுனை யாற்றங்கரைக்குப் போயிற்று.

அப்போது, அங்கே சடிதியில் என்றைக்குங் கேட்டறியாத பேரிடி முழக்கம்போலும் அந்த இடபம் முக்காரம்

போட்ட தொனியைக் கேட்டுத் திடுக்கிட்டு, "இஃதேது புதிதாயிருக்கிறது!" என்று பயந்து, நடுநடுங்கித் தண்ணீர் குடியாமல், சும்மா அசைவற நின்றுவிட்டது. அப்போது, அவ்விடத்தி லிருந்த சிங்கத்தினுடைய பிரதான மந்திரி குமாரர்களாகிய கரடகன் தமனகன் என்கிற நரிகளிரண்டும் இந்த அதிசயத்தை யறிந்து, ஒன்றுக்கொன்று பேசத் தொடங்கின:—

தமனகன் கரடகனைப் பார்த்து, "நம்முடைய அரசன் தண்ணீர்க்குப் போய்க் குடியாமல் ஏன் சும்மா நிற்கிறான்?" என, கரடகன், "அதை விசாரிக்கிறதனால் நமக்காவதென்ன? இரை யகப்படுமா? பெருமை யுண்டாகுமா? கிணற்றுத் தவளைக்கு நாட்டு வளப்பமேன்? சும்மா இரு. தனக்குத் தகாத காரியத்தைச் செய்தால் யார்க்கும் பிராண சேதம் வரும்" என்று சொல்லி, "நேற்று நாம் தின்று மிகுந்திருக்கிற இரையைத் தின்று, சுகமே யிருப்போம் வா" என்று தமனகனை அழைத்தது.

தமனகன் கரடகனைப் பார்த்து, "சுவாமிகாரியஞ் செய்யாமல் இரை தேடுகிறதையே பெரிதாக நினைக்கலாமா? ஒருவன் மித்திரர்களுக்கு உபகாரமும் சத்துருக்களுக்கு அபகாரமும் பண்ணவேண்டும்; அதற்கு இராஜசேவையே தக்கது; மேலும், இராஜாவை அடுத்திருக்கையில், வெகு ஜனங்களுக்கு நன்மை செய்வதே இராஜசேவைக்குப் பிரயோஜனமாம்; நன்மை செய்வதற்கு இடமில்லாவிட்டால், உயிர் பிழைத்திருப்பதனா லென்ன? காக்கையும், காகபலியையும் எச்சிலையும் மலத்தையுந் தின்று, ஆயிரம் வருஷம் பிழைத்திருக்கிறது. நாயும், பசையில்லாத வெள்ளெலும்பைக் கவ்விக் கடித்துக் கடித்துப் பல்லசைந்தும் பசி தீராமற் சந்தோஷத்தை யடைகிறது; மேலும் அது யஜமானன்

கையிலிருக்கிற. ஒரு கவள எச்சிலைப் பார்த்துக் காலில் விழுந்து, வயிற்றை எக்கிக்கொண்டு எளியமுகத்தைக்காட்டி, முகத்தைப் பார்த்து, வாலைக் குழைத்துக் கெஞ்சிக் காத்துக் கிடந்து, கொஞ்சம் எச்சிலை வாங்கித் தின்னும். யானையோ, பாகனைப் பாராமலும் அடுக்காமலும் அவன் வேண்டி வேண்டி வலியக் கொடுக்க, கருவத்தோடு வாங்கி, நாயைக் காட்டிலும் ஆயிரம் பங்கு அதிகஞ் சாப்பிடும். சிங்கம் பசியினுற் சங்கடப்படும்போது, நரி சமீபத்திலிருந்தாலும் அதை அசட்டைபண்ணி, யானையையே கொல்லும். ஆதலால், உலகத்தில் யார் புகழோடு சீவிக்கிறார்களோ, அவர்களே பாக்கியவான்கள். சிறு குழிகள் கொஞ்சந் தண்ணீரால் நிறையும்; எலியின் சோங்கை சில தானியத்தால் நிரம்பும்; அப்படிப்போல மூடன் இதாகிதந் தெரியாமற் கொஞ்சத்திலே ஜீவனம் பண்ணுவான்; அவனுக்கும் பசுவுக்கும் என்ன பேதம்? ஆகையால், இராஜகாரியம் பார்த்துப் பெருமையுடன் சீவிக்கிறதே நல்லது'' என்று சொல்லிற்று.

இதைக்கேட்டுக் காடகன் தமனகனைப் பார்த்து, "நல்லது; இவ்வாலோசனைகளுக்கும் இப்பேச்சுக்களுக்கும் இப்போது நாம் இராஜகாரியத்தி லிருக்கவில்லை; இரைதேடுகிற காரியத்திலிருக்கிறோம். அப்படியிருக்க, நீ ஏன் வீணான மனோராச்சியம் பண்ணுகிறாய்? முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைப்பட்டாற் கிட்டுமா?'' என்று இகழ்ந்து சொல்ல, தமனகன், "நல்ல திருக்கட்டும்; பிரதானியும் காலத்தினால் அப்பிரதானியாகிறான். தன் முயற்சியாலுங் குணத்தினாலும் இலகுவானவனுஞ் சமர்த்தனாகிறான்; யாரும் மேலான காரியத்தையே ஆலோசிக்கவேண்டும்; அது கை கூடாவிட்டாலும், பெருமை வரும்; புத்திசாலிகள் அருமையான காரியங்களைச் செய்வார்கள்; புத்தியீனர்கள் எளிமையான காரியங்

களைச் செய்வார்கள்; மலையுச்சியில் ஒரு பெருங்கல்லை ஏற்றுத லரிது; அங்கிருந்து அதைத் தள்ளுத லெளிது; ஏரியின் நீரைக் கட்டுத லரிது; உடைத்த லெளிது; பெருமையுஞ் சிறுமையும் அவரவராலேயே வரும்; 'முயற்சி யுடையார் இகழ்ச்சி யடையார்' என்னும் பழமொழியை யாயினுங் கேட்டிலையா?'' என்றது.

காடகன் தமனகனைப் பார்த்து, "நல்லது; நீ போய்ச் சிங்கத்தினிடத்தில் எதைக் குறித்துப் பேசுவாய்?'' என, தமனகன், "நம்முடைய சுவாமி மூடத்தனத்தாற் பயந்தி ருக்கிறான். அதை நீ எப்படி யறிந்தாயென்று கேட்கிறை யோ? சொன்ன பொருளைப் பக்ஷிகளும் மிருகங்களும் அறி கொள்ளும். சொல்லாமல் அறிகிறவனே பண்டிதன். அப் படி அறியாவிட்டாற் புத்தியாற் பிரயோஜன மென்ன? நானும் இங்கே யிருந்தபடியே அறிந்தேன். இப்போது நான் இதை முன்னிட்டுக்கொண்டு போய்ச் சிங்கத்தைச் சிநேகம் பண்ணிக்கொள்ளுகிறேன்'' என்றது.

காடகன் தமனகனைப் பார்த்து, "நம்முடைய அரசர் கள் மோந்துகொள்வதுபோலக் கடிக்கிறவர்கள்; அரசரும் நெருப்பும் பாம்பும் சரி; ஆதலாற் பழக்கமில்லாம லிருக்கை யில் அவனை எப்படிச் சிநேகம்பண்ணிக் கொள்வாய்?'' எனவே, அப்போது தமனகன், "நான் பேசுவதிற் சதுர னென்றறியாயா? சமர்த்தனுக்கு எது பெரிது? பறக்கிற பறவைகளுக்கு எது தூரம்? வித்வானுக்கு எது பரதேசம்? பிரியமாகப் பேசுகிறவர்களுக்கு எவன் சத்துரு?'' என்றது. காடகன், "அப்படியானாலும், ராஜாக்களிடத்தில் அகாலத் திற்போனால், அவமானம் நேரிடும்'' என்றது. அதற்குத் தமனகன், "அவமானம் வந்தாலும், யஜமானன் சமீபத்தி லேயே இருக்கவேண்டும். எவன் சமீபத்திலிருக்கிறானோ,

அவனுடனே அரசர்கள் காரியங்களைச் சொல்லுகிறார்கள்; கொடிகள் கிட்டவிருக்கிற மரத்திலேயே படரும்; அரசர் களும் ஸ்த்ரீகளும், தங்களைக் காத்து இங்கிதம் பேசுகிறவர் களிடத்தில் மன மிரங்குவார்கள்'' என்றது.

கரடகன், ''நல்லது; நீ அவனிடத்தில் எப்படிப் பேசு வாய்?'' எனலும், தமனகன், ''நல்ல மழை பெய்திருக்கை யில் எப்படி விதையினின்று முளைகள் புறப்படுமோ, அப் படி ராஜாவின் கேள்விக்கேற்க என் வாக்கினின்றும் உத்த ரம் புறப்படும். ஆயினும், ஒருவேளை பிருஹஸ்பதியும் பேச் சில் தவறுவானானால் மற்றவர்களுக்குக் கேட்பானேன்? ஆயி னும், காலமறிந்து பேசினால், யாதோரவமானமும் வராது; அரசர்கள் தங்கள் காரியம் எவனாலே ஆகிறதோ அவனி டத்தில் ஒருவேளை சிறிது குற்றம் நேரிட்டாலும், அதைப் பாராட்டாமல், அவனைப் பரிபாலித்து விருத்தியடையப் பண்ணுவார்கள்'' என்றது.

கரடகன், ''அரசர்கள் மலையைப்போல அனுசரிக்கிற தற்குக் கடினமா யிருக்கிறார்கள்'' என, தமனகன், ''ஆயி னும், அவரவர்கள் சுபாவமறிந்து பேசித் தனக்கு இதம் பண்ணிக் கொள்ளவேண்டும்'' என்று, கரடகனிடத்திற் செலவு பெற்றுக்கொண்டு, சிங்கத்தினிடத்திற்குப் போய்த் தூரத்திலே நின்று தண்டன் பண்ணிற்று.

அரசனுத்தரவினால் உட்கார்ந்தவுடனே, சிங்கம், ''நெடு நாளாய் உன்னைக்காணோம்'' என, தமனகன், ''இப்போது தேவரீரிடத்திற்கு வரத்தக்க காரியம் நேரிட்டதனால், தங் களுடைய திருவடியண்டை வரலானேன்; இல்லாவிட் டால் வந்ததற்குப் பிரயோசனமென்ன? ராஜாக்களுக்கு ஒருவராலும் பலனில்லாவிட்டாலும், ஒருவேளை சிறு

தும்பும் பல்லுக்குத்த வுதவும்; மற்றவைகளுக்குக் கேட் பானேன்? மேலும், ஒருவேளை அரசர்கள் குணவானை அசட்டை பண்ணித் தள்ளிவிட்டாலும், அவன் சற்குணம் போய்விடுமா? நெருப்பைத் தலைகீழாகப் பிடித்தாலும், அதன் சுவாலை கீழாகுமா? ஆதலால், அரசர்கள் பரிசோதித் தறிந்து, யோக்கியனை நல்ல காரியத்தில் வைத்தால், அவன் ராஜாவுக்குக் கீர்த்தியைப் பெருகப் பண்ணுவான். ஆகை யால், என்னைத் தாங்கள் சிறு நரியென்று அவமானம் பண்ணலாகாது; விஷ்ணு எடுத்திருந்த வராகவடிவை உல கத்திற் பூசிக்கவில்லையா? ரூபத்தைப் பாராமற் குணத்தைப் பார்க்கவேண்டும். மலைபோல விருக்கிற தேர் சிறு சுள் ளாணியால் நிலைபெறும்; நானோ சுவாமி காரியத்திற் பற்று டையேன். கருவியுங் காலமும் அறிந்து கருமம் முடிக்கும் ஆற்றலுடையேன்; இவ்வல்லமை யெல்லாம் உமது சார் பிருந்தாற் பிரகாசிக்கும்; வாள் முதலிய ஆயுதங்களும், வீணை முதலிய வாத்தியங்களும், பூமியும் ஸ்த்ரீகளும், யோக்கியர்களும், சாஸ்திரங்களுமாகிய இவையெல்லாம், பரிபாலனம் பண்ணுகிறவர்களாற் பிரகாசிக்கும்; அண்டை யிற் சமர்த்தனில்லாத ராஜாவுக்கு அபகீர்த்தி வரும்" என்று இப்படி சொல்லிற்று. கேட்டுச் சிங்கம், "தமனகா! நீ என் பிரதானி புத்திரனல்லையோ?" என, தமனகன், 'சுவாமி!' என்று வணங்கிச் சும்மா விருந்தது.

சிங்கம், "ஏதாவது சொல்லவேண்டுவ திருந்தாற் சொல்" என, தமனகன், "தேவரீர் தண்ணீர்க்கு வந்து குடியாமல் மெய்ம்மறந்து சும்மா நிற்கிறீர்களே!" என்றது. சிங்கம், "மெய்தான்; நான் இந்தக் காட்டில் வெகுநாள் சுகமாக இருந்தேன்; இப்போது இதை விட்டுவிடத் தக்க தாகச் சம்பவித்திருக்கிறது; என்றைக்குங் கேளாத மேக

ழ்முழக்கம்போல ஒருதொனி இன்றைக்குக் கேட்டேன்; அந்த முழக்கம் போலவே இருக்குமன்றோ அந்தப் பிரா ணியும்! ஆதலால், இதைக் குறித்து நீ என்ன சொல்லு கிறாயோ அதுவே எனக்குப் பிரமாணம். இப்போது நீ வழுக்கி விழுகையில் ஊன்றுகோல் போலக் கிடைத்தாயே" என்றது.

தமனகன், "சுவாமீ, தொனியினாலேயே பயங்கொள்ள லாகாது; முன் ஒருவன் ஒரு தொனியைக் கேட்டுப் பய ந்து, பிறகு நெருங்கிப் பார்த்தவுடனே. அங்கே தோலுங் கோலுமிருக்கக் கண்டான். தாங்கள் கட்டளை கொடுத் தால், இச்சத்தத்தின் மூலத்தை அறிந்து வருவேன்" எனச் சிங்கம் அப்படியே செலவு கொடுத்தது.

பிறகு தமனகன், சஞ்சீவகனென்னும் எருதினிடத்திற் போய்ப் பேசி, அதைச் சிநேகம் பண்ணிக்கொண்டு, சிங் கத்தண்டை வந்து, தண்டன் பண்ணி முன்னே நின்றது. சிங்கம், "நீ அந்தப் பிராணியை இன்னதென்று அறிந்து வந்தாயா?" என, தமனகன், "தங்கள் கட்டளைப்படியே போய்ப் பார்த்தேன்; முன் தாங்கள் எப்படி நினைத்தீர்க ளோ அப்படியே புஷ்டியா யிருக்கிறான். ஆனால், அவன் தங்கள் நட்பை விரும்புகிறான். கட்டளையானால், திரும்பிப் போய்த் தரிசனத்துக்கு அழைத்துக்கொண்டு வருவேன்" என்றது. சிங்கம், "நல்லது, அப்படியே யாகட்டும்" என, மறுபடி தமனகன் எருதண்டை போய், உபசாரத்தோடு அழைத்துவந்து, இராஜாவைத் தரிசனம் பண்ணுவித்தது. பிறகு பிங்களனுக்கும் சஞ்சீவகனுக்கும் வெகு சிநேக முண்டாய், இராஜாவுக்கு மற்றியாரும் ஆவசியகமில்லாமல் இப்படி வெகுகாலங் கழிந்தது.

## XXV. சொல்வன்மை

**33**. "ஆக்கமும் கேடும் அதனால் வருதலால்
காத்தோம்பல் சொல்லின்கண் சோர்வு"

ஒருநாள் மயில் முதலாகிய பறவைகளெல்லாம் கூடியிருந்து, "நமக்கெல்லாம் கருடன் அரசனுயிருந்தும், நம்மைக் கொல்லுகிற வேடர்களினின்றும் நம்மைக் காப்பாற்றாமலும், இதாகிதமுந் தெரியாமலு மிருக்கிறான். இத்தன்மையையுடைய இறைவன் இருந்து பயனென்னே? நமக்கு அரசனே வேண்டா மென்போமானால், மீகாமனில்லாமற் கப்பல் கரை காணுததுபோல், அரசனில்லாவிட்டால், நிலைகெட்டுப் போவோம். ஆகையால், எல்லாப் பறவைகட்கும் அரசனாகக் கோட்டானை நியமிக்கவேண்டும்" என நிச்சயித்து, இராச பட்டாபிஷேகத்துக்கு வேண்டிய பதார்த்தங்களைச் சேகரித்துப் பின்பு பல வாச்சியங்களை முழக்கி, கோட்டானைச் சிங்காதனத்தின்மேல் உட்காருவிக்க வேண்டுமென் றிருக்கையில், ஒரு காகம் வந்து, அவற்றைப் பார்த்து, "இஃது என்ன காரியம்! இஃது என்ன காரியம்!!" என்றது.

அப்போது எல்லாப் பறவைகளும், "பறவைகளில் காகமும், மனிதர்களில் நாவிதனும், விலங்குகளில் நரியும், மாதர்களிற் பணிப்பெண்ணும் சதுரர்களா யிருக்கின்றார்கள். ஆதலால், இச் செய்தியை இதற்குச் சொல்லி, இதனுடம்பாடும் பெறவேண்டும்" என்று தீர்மானித்து, அதைப் பார்த்து, "எங்களுக்கு அரசனில்லாமையால் இக்கூகையை அரசனாக்கிக் கொள்ளுகிறோம்; இதற்கு நீயும் உடம் படு" என்றன.

இதைக்கேட்டு அக்காகம் குலுக்கென்று நகைத்துச் சிரக்கம்பனம் பண்ணி, "ஓ! ஓ!! இது முழுதுங் கெட்ட காரியம்! அழகும் வல்லமையும் உண்டாகிய மயில் முதலாகிய அநேகம் பறவைகளிருக்கையில், இந்தப் பகற்குருடாகிய குரூபி அரசுக்குத் தக்கவனா? குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக்கொள்ளலாமா? தோலோ தோல்! இதற்கு நான் உடன்படேன். கருடராஜ னிருக்கையில், மிகவும் பயங்கர சுபாவமும் வலியின்மையும் உள்ள இக்கூகையை அரசனாக்கி உங்கட்குப் பலனென்னை? ஒருவன் ஸ்வாமியாயிருக்க வேறொருவன் குணசாலியாய் அகப்பட்டாலும், அவன் உபயோகியாகான். பராக்கிரமமுங் குணமுமுள்ள அரசன் உலகத்தில் ஒருவனே போதும். பல பெயர் அரசர்களானால், மனிதர்கள் துன்ப மடைகிறார்கள். கருடன் பெயரினாலேயே எல்லா வரங்களும் பெற்றும் மனிதர்கள் நம்மிடத்தில் மதிப்புடையரா யிருக்கிறார்கள். வலியவர்களுடைய பெயரினாலே எளியவர்களுக்குக் காரியமாகின்றது. அன்றியும் பெரியோர்களை அடுத்திருந்தால், மலைபோல வந்த வினை சூரியன்முன் பனிபோல நீங்கும். கொல்லையிற் குற்றியை யடைந்த புல், உழவர் உழுபடைக்குக் கெடுமோ? துஷ்டர்களுடைய கூட்டுறவு கணப்போ திருந்தாலும் கெடுதிவரும். செய்யத்தக்கது எதுவோ அதைச் செய்ய வேண்டும்" என்றது.

அப்படிக் காகஞ் சொன்னதைப் பறவைகளெல்லாங் கேட்டு, "இவன் சொன்னது நன்று" என்று எண்ணி, அப்போது சேகரித்த பொருள்களை யெல்லாம் அப்படியே வைத்து, மற்றொருவனை அரசனுக்குவதைக் குறித்து மீண்டும் எல்லாங் கூடுவோமென்று உறுதி செய்துகொண்டு, எல்லாம் தத்தமிடத்திற்குப் போயின.

அப்போது சிங்காதனத்தி னருகே மனையாளோடுகூட உட்கார்ந்திருந்த கோட்டான், தன்பெட்டையைப் பார்த்து, "பெண்ணே! மங்கள ஸ்நாநமாகியும் இப்போது இராச்சியாபிஷேகம் ஏன் பண்ணுமலிருக்கிறூர்கள்?" என, பேடு, "உன் இராச்சியாபிஷேகத்துக்குக் காகம் இடையூறு செய்தபடியாற் பறவைகளெல்லாந் தங்கள் வீட்டுக்குப் போயின; அக்காகம் மாத்திரம் இருக்கிறது" என்றது. இதைக் கேட்டுக் கோட்டான் காகத்தை நோக்கி, "அடா துஷ்டா! நான் உனக்கு என்ன செய்கேனென்று என் காரியத்தைக் கெடுத்தாய்? இதனுல் இன்றுமுதல் உன்குலத்துக்கும் என்குலத்துக்குந் தீராப்பகை யிருக்கட்டும். வாளினுல் வெட்டினுலும், பாணத்தினுல் எய்தாலும் அக்காய மாறிக் குணப்படும்; சொல்லின் காயம் அப்படி யாறுது" என்று சொல்லிவிட்டுத் தன் பெட்டையோடுகூடத் தன்னிடத்துக்குப் போயிற்று.

பின்னர் அக்காகம் மனத்தில் திகிற்பட்டு, "'நுணலை தன் வாயாற் கெடும்' என்பதுபோல இந்தப் பேச்சைச் சொல்லி, நான் வீண்பகை சம்பாதித்தேன். ஸமர்த்தனு யிருக்கிறவன் ஸபையிற் பிறரை நிந்திக்கலாகாது; மேலும், யாதொன்று செய்வதோ அதை மனங்கலந்த நட்டாரோடு உசாவிச் செய்யவேண்டும்; அப்படிச் செய்யாமல், இப்போது ஸங்கடத்தில் அகப்பட்டேன்" என்று இப்படிப் பச்சாத்தாபப்பட்டு, தன் வீடு போயிற்று.

## XXVI. வினைத் தூய்மை

**34.** "என்றும் ஒருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை"

பொன்னுக எச்சமிடுகிற ஒருபறவை மலையின்மேல் நெடுநாளா யிருக்கையில், அங்கே ஒருநாள் போனவேடன்

அது பொன்னாக மலவிஸர்ஜனம் பண்ணப் பார்த்து, மிகவும் ஆச்சரியமாய், "நாம் பாலிய முதலாகத் திரிந்து வருகின்ற வெகு காடுகளிற் பார்த்த பலஜாதிப் பறவைகளிலும் இப்படி ஒன்றைப் பார்த்ததில்லை. ஆதலால், இதை உயிருடனே பிடித்துக்கொண்டு போவோம்" என்று எண்ணி, மாத்தில் வலை கட்ட, அப்போது அப்பறவை வழக்கப்படி வந்து, சடிதியில் வலையிற் சிக்கிற்று.

பின்பு வேடன் அதைக் கூட்டிலடைத்துத் தன்குடிசைக்குக் கொண்டுவந்து, வளர்த்து வருகையில், "இது நம்மிடத் திருப்பதை அரசன் அறிந்தால், இப்பறவையைக் கொண்டுபோவதுமன்றி, நம்முயிரையும் வாங்குவான் ; ஆதலால், இக்குணநிதியை அரசனுக்குக் கொடுப்போம்" என்று நிச்சயித்து, பறவையைத் தந்து, அரசனுடனே நடந்த செய்தியை விண்ணப்பம் பண்ண, அப்போது, அவன் இரத்தினமிழைத்த ஒரு கூட்டில் அதை வைத்தான்.

அதைப் பார்த்து மந்திரி, "அஸம்பாவிதமான இவ்வேடன் பேச்சைக் கேட்டு, இதை ஏன் வாங்கினீர்? இதை விட்டுவிடும்" என, கேட்டு மன்னவன் அப்பறவையை விட்டுவிட்டான். உடனே, அஃது இராசன் மனைச் சிகரத்தில் உட்கார்ந்துகொண்டு, "முன்னே நான் மூடன், இரண்டாமவன் வலைஞன், மூன்றுமவன் இராசன், நான்காமவன் மந்திரி" என்று இப்படிச் சொல்லிப் பறந்துபோய்விட்டது.

## 35. "எற்றென் றிரங்குவ செய்யற்க"

உச்சயினிபுரத்தில் வசித்த தேவநாம வேதியன் என்போன் மனைவியோடு இல்லறம் நடாத்துநாளில் குழந்தையில்லாக் குறையால் ஒரு கீரிப்பிள்ளையை மைந்தனைப் போலக் கருதி, இருவரும் வளர்த்து வருகையில், தெய்

வானுகூல்யத்தால் ஒரு குழந்தை பிறந்தது. ஒருநாள் அதைத் தூங்குவித்து, மனைவி கணவனைப் பார்த்து, "பதியே! நான் ஜலங் கொண்டுவரப் போகிறேன்; நீர் நம் குழந்தையைப்பார்த்திரும்.ஒருவேளை கீரி கடிக்கும்" என்றுசொல்லிக் குடத்தை எடுத்துக்கொண்டு தண்ணீர்க்குச் சென்றாள்.

பிராமணன் தொட்டிலிற் குழந்தை தூங்குவதைக் கண்டு, தனக்குக் குளத்திற்குப் போகவேண்டிய ஆவச்யகத்தால் போய்விட, அத்தருணத்து ஒரு க்ருஷ்ண ஸர்ப்பம்



புற்றினின்றும் கிளம்பிவந்து தொட்டிலின்மேல் ஏற, அதைக்கண்ட கீரிப்பிள்ளை, அக்கணமே பாய்ந்து, நாகத்தைப்பற்றி உதறிக்கொன்று, துண்டு துண்டாய் நறுக்கி, ரத்தத்தாற் பூசுற்ற முகத்துடனே தனது ஆற்றலைக்காட்ட விரும்பி, விரைந்து வாசலுக்கு வந்தது. அத்தருணத்தில் நீர்க்குடத்துடன் வந்த பார்ப்பனி செஞ்சோரியால் நிறை

ந்த அதன் முகத்தைப் பார்த்து, அது தன்பிள்ளையைக் கடித்து மடித்ததென்று, துள்ளித் துள்ளித் துணுக்குற்று, நீர்க்குடம் சிதைந்து போம்படி அதன் தலைமேற் போட்டுக் கொன்று, பரபரப்புடன் உள்ளே சென்று பார்க்கையில், மகன் உறங்குதலையும் அருகே கரும்பாம்பின் துணிக்கைக் குவையையும் கண்டு, "ஆ! கெட்டேன் நான்! என் குழவியைத் தீர ஆராயாமல் கொன்றேனே!" எனச் சோகமுற்றுப் புலம்பி நொந்து போனாள்.

## XXVII. தூது

### 36. "கற்றுக்கண் அஞ்சான் சேலச்சோல்லிக் காலத்தால் தக்கது அறிவதாம் தூது"

ஒரு காட்டிற் சதுரதந்தனென்னும் அரசயானை பல யானைகளோடு கூடிக்கொண் டிருக்கும்போது, அங்கே மழை பெய்யாமையால், ஆறு குளம் ஏரி கசங் குட்டைகளெல்லாம் வற்றிப்போக, அப்போது, யானைகளெல்லாந் தாகித்துச் சதுரதந்தனைப் பார்த்து, "சுவாமி! நாங்களெல்லாந் தாகத்தினாலே செத்தாற் போலானோம்; சிலர் தண்ணீர்க்காகச் செத்தார்கள்; ஆகையால், மிகவுந் தண்ணீருள்ள இடந்தேடிப் போயிருப்போமானால், எல்லாஞ் சுகமடைவோம்" என, இவற்றின் பேச்சைக்கேட்டுத் தன்மனத்தில் ஆலோசித்து, "இதற்கு ஐந்து நாளைப் பயணதூரத்தில் ஒரு பெரிய மடு பாதாளகங்கையினால் நிறைந்திருக்கிறது; அங்கே போனால், எல்லோர்க்கும் மிகவுந் தண்ணீர் கிடைக்கும்" என்று இப்படி உறுதிசெய்துகொண்டு, அப்படியே அங்கே போய்த் தெளிந்த நீரைக் கண்டு, அந்திவரைக்கும் சலக்கிரீடைசெய்து கொண்டிருந்து கரையேறி வந்திருந்தன.

அப்போது, அங்கே வாஸம்பண்ணிக் கொண்டிருந்த வெகு முயல்களில் சில யானைகளின் காலின்கீழ் அகப்பட்டு இறந்தன; சிலச் சில முயல்களுக்குக் கால்கைகள் ஒடிந்தன; சிலவற்றிற்கு உடல்கள் நொறுங்கின; சிற்சிலவற்றிற்குக் குடல்கள் சரிந்தன; சிற்சில இரத்தத்தால் நிறைந்தன. இப்படிப் பொல்லாங்கு நேரிட்டவுடனே, சில முயல்கள் ஒன்றுய்க்கூடி, "இன்றைக்கு யானைக்கூட்டம் வந்து நம்மை அழித்தது; இப்படியே தினமு மழிக்கும்! இங்கே கிட்ட வேறே தண்ணீரில்லாததனால்நமக்கு மீளாச்சங்கடம் நேரிட்டது. யானை தொட்டாலும், பாம்பு மோந்தாலும், அரசன் நகைத்தாலும், துர்ச்சனன் மரியாதைபண்ணினாலும் உயிர்ச் சேதம் வரும்; ஆதலால், இதற்கு ஏதாவது உபாயம் ஆலோசிக்கவேண்டும்" என, அப்போது சில முயல்கள், "உயிரைக் காப்பாற்றும் பொருட்டுப் பூமியை விட்டுவிடலாமென்றிருக்கிறதனால், இவ்விடத்தை விட்டுவிடவேண்டும்" என்றது.

இதைக்கேட்டு வேறு சில முயல்கள், "நம்முடைய பெரியோர்கள் வாழ்ந்த இடத்தை விட்டு வேறிடத்திற் போகாமல், யானைகள் அஞ்சத்தக்க தந்திரம் எடுக்கவேண்டும். நஞ்சில்லாப் பாம்பும் படமெடுத்தால், பயங்கரமாகவிருக்கிற அந்தப் படத்தின் வடிவைப் பார்த்து, மனிதர்கள் அஞ்சுகிறார்கள்" என, அதைக்கேட்டு ஒரு முயல், "யானைகள் பயமுறும்படி ஒருபாயம் சொல்லுகிறேன். விஜயதந்தனென்னும் நம்முடைய ஸ்வாமி சந்திரமண்டலத்தில் இருக்கிறான்; அவன் தூதனுப்பினானென்று ஒரு நிமித்தம் வைத்து, ஒரு பொய்த் தூதனை அந்த யானைகளிடத்துக்கு அனுப்பினால், நம் காரியம் ஆகும்" என்றது.

இதைக் கேட்டவுடனே, எல்லாம் அப்படியே நிச்சயித்து, நெட்டைக் காதனைப் பார்த்து, "நீ சாதுரியவான்; எதிரிகளைச் சமாதானம் பண்ணுகின்றாய்; ஆதலால், தூத காரியத்தில் நிபுணனா யிருக்கிறாய்; மௌட்டிய மில்லாமையும், சோம்பாமையும், பொய்யாமையும், ஊகித்தறிதலும் தூதலக்ஷணமென்று சொன்னவற்றிற்கு நீயே வாஸஸ்தானமென்றுநினைக்கிறோம்; ஆகையால், நீ போனால் நம்முடைய காரியம் கைகூடும்; மூடத் தூதனை அனுப்பினாற் காரியங் கெட்டுப்போம்" என்று சொல்லி, அதை அனுப்ப, பின்பு அதுபோய், யானைகள் வரும்வழியில் ஓர் உயர்ந்த மேட்டில் உட்கார்ந்திருந்தது.

அப்போது அங்குவந்த யூதபதியைப் பார்த்து, "அடா, துஷ்ட யானையே! வெட்கத்தைவிட்டு இந்த மடுவில் வந்து பலவகைப்பட்ட விளையாட்டு விளையாடுகிறாயே; நான் இப்போது எல்லாரையு மடித்தெறிந்துவிட்டாலென்ன?" என, இதைக்கேட்டு யானை, "உன்பேச்சைக் கேட்டு,நான் மிகவும் ஆச்சரியப் படுகிறேன். நீ யார்?" என்றது. முயல், "நான் விஜயதந்த ராஜனுடைய தூதன்; அவன் சந்திர மண்டலத்தில் இருக்கிறபடியால், சந்திரன் என்னை உன்னிடத்திற்கு அனுப்பினான்" என்றது.

இதைக் கேட்டு யானை, "இவன் வலியவனுடைய தூதன்" என்று எண்ணி, அதைப் பார்த்து, "சந்திரனுடைய கட்டளை என்ன?" என, அது, "நீ இங்கே வந்து, நாணமில்லாமற் கிரீடைசெய்து வெகு முயல்களைக் கொன்றாய்; ஆகிலும் நான் ஒருதரம் பொறுத்தேன்; இப்போது உனக்கு உயிர்மேல் ஆசை யிருந்தால், மீண்டு இங்கே வரவேண்டாம்" என்று இப்படிச் சந்திரனுடைய கட்டளை யிருக்கின்றது; அதை உனக்கு நான் சொன்னேன்; இப்

போது இதற்குப் பிரதியுத்தாஞ் சொன்னாற் சுவாமி திரு வடிகட்கு அறிவிப்பேன் என்றது.

யானை, "அவனிடத்திற்கு என்னை யழைத்துக்கொண்டு போ; நான் உன் னெசமானனுக்கு நமஸ்காரம் பண்ணி, வேறொரு குளத்திற்குப் போவேன்" என, இதைக்கேட்டு முயல், "நீ தனியாய் என்னோடு கூட வா; உனக்குச்சுவாமி யைக் காண்பிக்கின்றேன்" என்றது. அது சரி என்று புறப் பட, இரண்டும் போகையில், முயல் ஓரேரியின் அருகே போய், யானையைப் பார்த்து, "அந்தச் சந்திரன் இந்தத் தண்ணீர்க்குள்ளே வந்திருக்கின்றான்; அவனை நமஸ்கரித்து விட்டுக் கடுகெனப் போ; இல்லாவிட்டால், அவனுடைய சமாதிக்குப் பங்கம் வந்தால், வெகு கோபம் வரும்" என, அப்போது யானை பயந்து, சந்திர விம்பத்துக்கு நமஸ்காரம் பண்ணிவிட்டுப் போயிற்று. அது முதற்கொண்டு முயல்க ளங்கே சுகமுற்றிருந்தன.

## XXVIII. அவை அறிதல்

### 37. "தங்கணத்தர் அல்லார்முன் கோட்டி கொளல்"

ஒருநாள், குளிரால் வருத்தப்படுகிற குரங்குக் கூட்டம், மின்னும்பூச்சிக் கூட்டத்தைப் பார்த்து, நெருப்பென்று நினைத்துக் குளிர் காய்வதற்காக அதனருகே போயிற்று. அப்போது, அங்கே ஒரு மரத்தின் மேல் இருந்த சுமுக னென்னும் ஒரு கொக்கு இதைப் பார்த்து, குரங்கினருகே வந்து, "இது மின்மினிப்பூச்சி; நெருப்பன்று" என்று சொன்னவுடனே, அந்தக் குரங்குக் கூட்டத்தில் ஒன்று கோபித்து, அந்தப் பக்ஷியைப் பிடித்து, "நீ எனக்குப் புத்தி சொல்லுகிறவனா?" என்று, கல்லில் அறைந்து

கொன்றது. ஆகையால், துஷ்டர்களுக்கு உபதேசம் பண்ணலாகாது.

•

## XXIX. பொருள் செயல்வகை

### 38. "இல்லாரை எல்லாரும் எள்ளுவர்"

சம்பகாவதி யென்னும் பட்டணத்திற் சூடா கர்ணனென்னும் ஒரு சந்நியாசி, உண்டுமிகுந்த சோற்றைக் கப்பரையிற் போட்டு, உறியின்மேல் வைத்து, நித்திரைபண்ணிக்கொண் டிருக்கும்போது அச்சோற்றை ஓர்எலி தின்று கொண்டு, சுகமாக இருக்க, அங்கே வீணாகர்ண னென்னும் ஒரு சந்நியாசி வந்து அவனோடுகூட அநேக கதாப்பிரஸங்கம் பண்ணிக்கொண் டிருக்கையில், அச்சூடாகர்ணன் கையிலுள்ள ஒரு தடியினாலே பூமியைத் தட்டித் தட்டிச் சோற்றைக் காத்துக்கொண்டிருந்தான்.

அப்போது வீணாகர்ணன், "என்னுடைய கதையை அநாதாவு பண்ணி, நடுவே வேறென்ன வியாபாரத்திலிருக்கிறாய்?" என, சூடாகர்ணன், "உன்வார்த்தையை அநாதாவு பண்ணவில்லை; இவ்வெலி என் பாத்திரத்திலிருக்கு மன்னத்தை நாடோறுந் தின்னுகிறது; அதை ஓட்டுகிறேன்" என, வீணாகர்ணன் அப்போது உறியைப் பார்த்து, "கொஞ்ச பலமுள்ள இவ்வெலி இவ்வளவு உயரம் எப்படிக்குதிக்கிறது? இதற்கு ஏதோ ஒரு காரண மிருக்கவேண்டும்; அது தான் எதுவாயிருக்கலாமென்று ஆலோசித்தால், இங்கே மிகவும் திரவியமிருக்க வேண்டுமென்று தோன்றுகிறது;உலகத்தில் திரவிய முள்ளவர்கள் பலமுள்ளவர்களாய் இருக்கிறார்கள்; அஸாத்யமான காரியங்களையும் ஸாதிக்கிறார்கள்; ராஜத்துவத்திற்கும் இது காரணமாகும்: எல்லாம் இதனு

லாகின்றன" என்று சொல்ல, அச்சந்நியாசி கேட்டு, மெய் தானென்று, பூமியை வெட்டி, கீழிருந்த அதன் திரவி யத்தை எடுத்துக்கொண்டான்; அன்று முதல், அஃதிளைத் துப்போயிற்று.

பின்பு அதற்கு இரையுங் கிடையாததனால் அது மெள்ளமெள்ள நடந்துகொண்டிருக்க, அந்தச் சந்நியாசி பார்த்து, "பார்: இவ்வெலி இப்போது தன்னுடைய சாதித் தன்மையை யடைந்திருக்கிறது. முன் இருந்த தனமதம் போய்விட்டது; ஆகையால், பணமில்லாதவர்களை எல்லோ ரும் அற்பமாய் நினைக்கிறார்கள்" என, இதைக்கேட்டு, எலி, "இப்போது நாம் இங்கே யிருக்கிறது சரியன்று. இதை வேறொருவரோடுஞ் சொல்லலாகாது: பொருளிழவும், கிரு கச் சித்திரமும், தானமும், மானமும், அவமானமும், ஆயு ளும், தனமு மாகிய இவைகளைப் புத்திமான் வெளிப்படுத்த லாகாது. தன்விதி பிரதிகூலமாயிருக்குங் காலத்தில் பராக் கிரமமும் முயற்சியும் வீணாகின்றன. பணமில்லாதவனுக்கு வனவாஸத்தைக் காட்டிலும் சுகமில்லை; எந்த இடத்தில் நாம் பணக்காரரா யிருந்தோமோ, அந்தவிடத்தில் ஏழையா யிருக்கிறது உத்தமமன்று" என்று, மறுபடியும் இழந்த பணத்தை எடுத்துக்கொள்ள முயன்றது. அப்போது சந்நி யாசி அதைத் தடியாலடித்தான்; அதனாலே அது மிகவுந் துக்கமுற்று, வேறோரிடத்திற்குப் போயிற்று.

## XXX. நட்பு

**39.** "செயற்கரிய யாவுள நட்பின் அதுபோல்
வினைக்கரிய யாவுள காப்பு"

கோதாவரிக் கரையிலிருக்கிற ஒரு பெரிய வன்னி மரத் தில் இலகுபதனன் என்னும் ஒருகாகம் வாசஞ்செய்து

கொண்டிருக்கையில், அஃதொருநாள் கண்டகீ நதி தீரத்தி லுள்ள சித்ரவனத்தில் வாஸம்செய்துகொண்டிருந்த ஹிரண் யகன் என்னும் எலியரசனைச் சந்தித்து, "ஹே! ஹிரண்யகா! நீ பாக்யவானுயிருக்கின்ருயாதலால், நான் உன் சிநேகத் தை விரும்புகிறேன். நீ தயைசெய்து, எனக்குச் சிநேகனுக வேண்டும்" என்றது. அப்பொழுது ஹிரண்யகன், "நீ யார்?" என, காகம், "நான் லகுபதனன் என்னும் காக்கை" எனவே, அதைக்கேட்டு எலி, "உனக்கும் எனக்கும் வெகு தூரம்; உலகத்தில் ஸமானஸ்தர்களுக்கே சிநேகமுண்டாகி றது; நான் உனக்கு இரை, நீ என்னைத் தின்கின்ருய்; இப் படி இருக்கையில் சிநேகம் எப்படி ஆகும்? ஆபத்துக்கே முகாந்தரம். உன்னுறவு உபயோகமன்று" என்றது.

காகம், "உன்னைத் தின்ருல் எனக்குப் போதுமா? நீ பிழைத்திருந்தால் நான் *சித்திரக்கிரீவனைப்போலச் சுக மடையலாமென்று உன் நட்பை விரும்புகிறேன்" என, பின்னும் ஹிரண்யகன், "நீ எனக்குப் பகைவன்; உன்னுட னே நான் சிநேகம்பண்ணுகிறதில்லை: சத்துரு தனக்கு அநு கூலனுயிருந்தாலும், அவனேடே சிநேகிக்கலாகாது; தண் ணீர் வெந்நீரானுலும் நெருப்பை யவிக்கும். எது தக்கதோ அதைச்செய்யவேண்டும்; தண்ணீரில் வண்டியும் பூமியின் மேற் கப்பலும் நடக்குமா? சத்துருக்களிடத்திலும் வியபி சாரியிடத்திலும் நம்பிக்கை வைக்கலாகாது" என்று இப் படிப் பலவிதமாகச் சொல்ல, காகம், "நான் உன்னுடனே சிநேகிப்பேன்; இல்லாவிட்டாற் பட்டினியாக இருந்து, இங்கேயே பிராணனை விடுவேன். நெருப்பின் வெப்பத்தி னுல் பொன் முதலானவை உருகி ஒன்ருகின்றன. யாதே

* 19-ம் கதையைப் பார்க்க.

னும் ஒரு நிமித்தத்தினுலே விலங்கு பறவைகள் மித்திரத்துவத்தை யடைகின்றன. பயித்தினுலாகிலும் யாதோ ராசையினுலாகிலும் மூடர்களுக்குச் சிநேகம் உண்டாகிறது. சாதுக்களுடைய சிநேகமோ கண்டமாத்திரத்தி லுண்டாகிறது. மட்பாண்ட சீக்கிரமாய் உடைகிறது; பிறகு பொருந்துவதில்லை. பொற்குடம் சீக்கிரத்திலுடையாது; உடைந்தாலும் ஒன்றும். இப்படியே துர்ச்சன சற்சனர்களுடைய சிநேகமிருக்கின்றது" என, கேட்டு ஹிரண்யகன், "உன் வார்த்தையால் நான் ஸந்தோஷமடைந்தேன். இப்போது உனக்கும் எனக்கும் சிநேகத்துவ மிருக்கட்டும்; இனிமேல் நாமிருவரும் ஒருமனத்தினராயிருக்கவேண்டும்; உபகாரம் பண்ணுகிறவன் மித்திரனென்றும், அபகாரம் பண்ணுகிறவன் சத்துருவென்றும் அறிந்து, மனக்களங்க மில்லாமல் நடக்கவேண்டும்" என்று இப்படிப்பேசி நிச்சயித்து, இலகுபதனனுக்குச் சிறிது ஆஹாரங் கொடுத்துத் தன்வளையிற் போயிற்று. சிநேக லாபம்பெற்ற காகமும், அதினிடத்திற் செலவுபெற்றுக்கொண்டு, தன்னிடத்திற்குப் போயிற்று.

அதுமுதலாக இவைகள் அத்தியந்தம் சிநேகமாய், ஒன்றுக்கு ஒன்று ஆஹாரங் கொடுத்துக் கொண்டு பலபல வார்த்தைகள் பேசிக்கொண்டிருக்கையில், ஒருநாள், இலகுபதனன் எலியைப்பார்த்து, "மித்திரா! இப்போது இங்கே இரையகப் படாமையால், வேறோரிடத்திற்குப் போக இச்சிக்கிறேன்" என, அதைக்கேட்டு ஹிரண்யகன் "எங்கே போவாய்?" என்றது. அப்போது அது, "தண்டகாரணியத்திற் கற்பூரகௌரமென்கிற தடாகத்திலிருக்கிற ஆமையாகிய மந்தர னென்பவன் எனக்குச் சிநேகிதனாயிருக்கிறான்; அவன் எனக்கு விதம் விதமான மீன்களைக்

கொடுத்துப் போஷிப்பான்: அதைக்குறித்து நான் அவனிடத்திற்குப் போக இச்சிக்கிறேன்" என, கேட்டு ஹிரண்யகன், "மித்திரா! அவ்விடத்திற்கு என்னையுங் கொண்டு போகவேண்டும். நான் தேசாந்தரம் போக விரும்புகிறேன்" என்றது.

அப்போது காக்கை, "நீ அப்படி விரும்புவானேன்?" என, ஹிரண்யகன், "அங்கே போன பின்பு * சொல்லுவேன்" என்றது. இலகுபதனன் ஹிரண்யகனை யெடுத்துக் கொண்டு, அந்த இடத்திற்குப் போயிற்று. அவைகளைப் பார்த்து, மந்தரன் அவ்விரண்டுக்கும் ஆதித்யம் பண்ணிற்று. அப்போது இலகுபதனன் மந்தரனைப் பார்த்து, "இந்த ஹிரண்யகன் மிகவும் பரோபகாரி. இவன் சித்திரக்கிரீவனை அவன் கூட்டத்தோடுகூட வலையினின்றும் விடுவித்தான். அப்போது இவன் நட்பின் நிலைமையைப் பார்த்து, நானும் இவனுடனே நட்புக்கொண்டேன்" எனக்கேட்டு, மந்தரன் ஸந்தோஷித்தது.

பிறகு ஹிரண்யகன் தான் உறைவிடந் துறந்து வந்ததற்கு மனம் வருந்த, மந்தரன், "மித்திரா! நீ இதனால் அதைரியமடைந்து உறைவிடந் துறந்தோமென்று வருத்தப்படவேண்டாம். ஸாதுக்கள் எங்கேபோனாலும் மரியாதை பெறுகிறார்கள். சிங்கம் வேறொரு காட்டுக்குப் போனாலும் புல்லைத்தின்கிறதில்லை; யானையையே தின்னும்; உற்சாகமுள்ளவன், ஸந்தோஷமுள்ளவன், தைரியசாலி, சூரன், களங்கமில்லாதவன் என்னும் இவர்களிடத்தில் இலக்குமி தானே வந்து அடைகிறாள். நீ பண மிழந்தாலும், எப்போதும் ஸந்தோஷத்தோடே கூடி யிருக்கிறாய். ஆகையால், உனக்கு இருக்கிற சுகம் பணத்தாசையால் மயங்குகிறவர்

* அஃதங்கே சொன்ன கதை 38-ம் கதையாகும்.

களுக்கு இல்லை. இன்னுங் கேள் : மேகச்சாயை, துஷ்டனுடைய தயை, இளம்புல், யௌவனம், தனம் இவை வெகு நாளைக்கு நில்லா. ஆகையால், இவை யிழந்துபோனால், அழுதுகொண்டு, ஏங்கியிருக்கலாகாது. எவன் கர்ப்பத்தி விடுகிறானோ அவன் பிறக்கிறதற்கு முன்னேதானே தாயிடத்திற் பாலை அமைத்துவைக்கிறான். அப்படிப்பட்டவன் ஆயுளுள்ள வரைக்கும் காப்பாற்ற மாட்டானா? நீ நல்ல விவேகியா யிருக்கிறதினால், இவையெல்லாம் உனக்குத் தெரிந்தே யிருக்கும். இனிச் சிநேகமாய் என்னிடத்திற் சுகமாயிரு" என்றது.

இவையெல்லாங் கேட்டு, இலகுபதனன், "மந்தரா! நீ ஸகலகுண ஸம்பன்னன் ; மேலும் சற்சனன்; ஸாதுக்களுக்கு வந்த ஆபத்தை ஸாதுக்களே நிவர்த்தி பண்ணுகிறார்களென்று அறிந்து நாங்கள் உன்னை நாடிவந்தோம" என்று சொல்லி, நீண்ட பெரிய மாத்தின்மேற்போய் உட்கார்ந்து, தன் சுபாவப்படியே இங்கும் அங்கும் பார்த்துக்கொண்டிருக்கையில், ஏதோ ஒரு பயமுகாந்தரத்தை அறிந்து, அவ்விரண்டுக்கும், "நீங்கள் உங்களிடத்தில் ஒளித்துக்கொண்டிருங்கள்" என, மந்தரன் தண்ணீரிற் போயிற்று ; எலி வளையில் நுழைந்தது.

காகம் விருக்ஷத்தின் நுனியிலிருந்து பார்க்கையில், ஏதொன்றும் காணப்படாமையால், பின்பு அம் மூன்றும் ஒன்றுக்கு ஒன்று பேசிக்கொண்டிருக்கையில், அங்கு அவைகளின் ஸமீபத்தில் சித்திராங்கன் என்னும் ஒரு கலைமான் வந்து, "நான் வேடர் பயத்தால் உங்களிடத்தில் இருக்கலாமென்று வந்தேன்" என, அதைக்கேட்டு மந்தரன் அதற்குச் சம்மானம் பண்ணி, "இஃது உன்வீடு ; நான் உன் சேவகனென்று எண்ணிக்கொண்டு சுகமாயிருக்கவேண்டும்"

என்று, முகமலர்ந்து மனங்கலந்த இன்சொற் சொல்ல, பிறகு இதுவும் அவைகளுடன் நட்புக்கொண் டிருந்தது.

அப்படி யிருக்கையில், ஒருநாள் சித்திராங்கனென்னும் மான் புல் மேய வேறோரிடத்திற்குப் போய், மீண்டு ஸாயங்காலம் வாராமையால், ஆமை, "மேயப்போன மான் இன்றைக்கு ஏன் வரவில்லை?" என்று வியசனப்பட, அதை யறிந்து, எல்லாம் வியசனமடைந்தன. மறுநாள் விடியற் காலத்தில் காக்கை பறந்து நாலுபக்கத்திலும் பார்த்துக் கொண்டு போகையில், சித்திராங்கன் தோல் வலையில் அகப்பட்டிருக்கிறதைக்கண்டு, அதன் கிட்டப்போய், "மித்திரா! உனக்கு இந்த அவஸ்தை எப்படி நேரிட்டது?" என, மான், "இப்போது இதைக்கேட்டுப் பிரயோஜனமில்லை. நீ போய் ஹிரண்யகனைச் சீக்கிரமாய் அழைத்துக்கொண்டு வந்தால், அவன் வேடன் வருகிறதற்குள் என்பாசத்தை யறுத்து, என்னை விடுவிப்பான். வேடன் வந்தால் ஒருபாயமும் நடவாது" என்றது.

இதைக் கேட்டவுடனே காகம் விரைவாகப் போய், அவைகளுடனே நடந்த காரியத்தைச் சொல்லி, ஹிரண்யகனை அழைத்துக்கொண்டு வர, ஹிரண்யகன் மானைப் பார்த்து, "நீ ஸமர்த்தனுயிருக்கையில், வலையில் எப்படி அகப்பட்டாய்?" என, மான், "வல்லமையிருந்தாலும், வருவது வரும்; இப்போது என்னைச் சீக்கிரமாய் விடுவி; எனக்குப் பழையபய மிருக்கிறது: முன் நான் குட்டியாயிருக்கையில், வேடன் வலைகட்டி என் கூட்டத்தை வளைத்தான். மற்றவைகள் பெரிய மான்களாயிருந்தபடியாற் குதித்து வலையைத் தாண்டிப் போயின; எனக்குக் குதித்தோடச் சக்தியில்லா திருந்ததால், வேடன் என்னைப் பிடித்து இராஜனிடத்திற் கொண்டுபோனுன்.

"இராஜா வாங்கித் தன் பிள்ளைகையிற் கொடுக்க, அங்கே நான் வெகுநா ளிருந்தேன். ஒருநாள் மேக கர்ச்சனையைக் கேட்டு மிகவுஞ் சஞ்சலமுற்று, 'காற்று மழைகளாற் பீடிக்கப்பட்டு, மான்கூட்டங்கள் ஓடும்போது, அவற்றின் பின் நான் ஓடேனோ?' என்று மனுஷ்ய பாஷையினால் எனக்குள்ளே பேசிக்கொண்டேன். இராஜகுமாரன் இதைக் கேட்டு, நாற்றிசையும் பார்த்து, என்னையும் பார்த்தான்; பின்பு சற்றுநேரம் சும்மாவிருந்து, இது மனுஷ்யனைப் போல எப்படி உச்சரித்தது? ஆகையால் இஃது ஒரு விசித்திரப்பிராணியா யிருக்கிறது" என்று நினைத்துப் பயத்தினாற் சுரத்தில் விழுந்தான்.

"பிறகு விடியற்காலத்திற் சோதிடர்களை அழைப்பித்து, அவர்களுடனே இதைச்சொல்ல, அவர்கள் 'எல்லா மிருகங்களும் மனிதரைப்போலப் பேசுகின்றன; ஆயினும் நமக்கு முன்னே பேசுகிறதில்லை ; இதுவும் உன்னைப் பாராமற்பேசிற்று. இதற்காக நீ பயப்பட வேண்டாம்; இதுயாதொரு விசித்திரப்பிராணியு மன்று; இதனால் உனக்கு எவ்வளவும் பயமில்லை" என, இதைக்கேட்டு ராஜகுமாரன் என்னை விட்டுவிட்டான்.

"பிறகு இக்காட்டில் வந்தேன். இப்படி முன் ஒருதரம் வலையில் அகப்பட்டேனாகையால், என்னைச் சீக்கிரமாக விடச் சொல்லுகிறேன்'' என்றது.

இதற்குள்ளே மித்திரத்துவத்தினாலே மந்தரனும் அங்கேவந்து, இரணியகனைப் பார்த்து, "மித்திரா! இப்படித் தாமஸம் பண்ணுகிறது சரியன்று: இப்போது வேடன் வந்தால், நாமெல்லாம் ஓடிப்போவோம் ; வலையிலகப்பட்ட சித்திராங்கனைப் பிடித்துக்கொள்வான். இதைக் குறித்து எனக்குக் கிலேசமாயிருக்கிறது. நினைப்பின்படி மனத்தி

யிருக்கிறதை அறிகிற சிநேகிதனும், மநோஹர ஸ்திரீயும், பிறர் துக்கமறிகிற பிரபுவும் கிடைக்கிறது அருமை'' என்று இப்படிச் சொல்லிக்கொண் டிருக்கையில், வேடன் சடிதியில் யமனைப்போலத் தூரத்தில் வருகிறதை இலகுபதனன் கண்டு, எலியைப்பார்த்து, "மித்திரா! வேடன் வந்தான்; இப்போது பெரிய ஸங்கடம் நேரிட்டது" என, அதைக் கேட்டு இரணியகன் அதிசீக்கிரமாய்ச் சித்திராங்கன் வலையை யறுத்தது.

அறுத்தவுடனே, கிட்டவந்த வேடனைப் பார்த்து, எல்லாம் ஓட்டம்பிடிக்க, அப்போது அவன் வியசனமடைந்து, நாலண்டையும் பார்க்கையில், மந்தரன் தன் நடையின்படி நடந்துகொண்டிருக்கக் கண்டு, அதைப் பார்த்துப் பிடித்துத் தன் வில்லிற் சேர்த்துக் கட்டிக்கொண்டு, அவன் கொஞ்சம் ஸந்தோஷத்தோடே போகும்போது, மானும் எலியும் காகமும் அதைப் பார்த்து மிகவுஞ் சிரமப்பட்டு, "இப்போது என்னசெய்யலாம்?'' என்று வேடன் பின்னே போகத்தொடங்கின.

அப்போது இரணியகன், "ஒரு ஸங்கடம் நிவர்த்தியாகிறதற்குள்ளே மற்றொன்று வந்து நேரிட்டது; ஆகையால், சீவனுக்குத் தேகத்தோடு கூட அநேகந் துக்கங்களை அனுபவிக்கவேண்டி யிருக்கிறது. இந்தத் துன்பம் சிநேகத்தினால் நமக்கு வந்தது. எவன் மித்திரனிடத்தில் விசுவாஸம் வைக்கிறானோ, அந்த விசுவாஸம், அவனுக்குத் தாய் தந்தை சகோதரன் பிள்ளை சுற்றங்களிடத்திலும் இராது'' என்று இப்படி வெகுவிதமாய்த் துக்கித்து, பின்னும், "வேடன் தூரமாகப் போவதற்கு முன்னே மந்தரனை விடத்தக்க உபாயம் பண்ணவேண்டும்; பிறகு ஆகமாட்டாது'' என்றது.

அப்போது அவைகள், "என்னசெய்யலாம்? சொல்" என, எலி, "சித்திராங்கன் ஏரிகரையிற் செத்தவனைப்போலக் கிடக்கவேண்டும்; அதன்மேற் காகம் உட்கார்ந்து கொண்டு பொய்யாகக் குத்தவேண்டும்; அப்படியிருந்தால், இதை வேடன் பார்த்து, மந்தரனைப் பூமியில் வைத்து விட்டு, மானண்டை போவான்; இதற்குள்ளே நான் ஆமையின் கட்டைச் சேதிப்பேன்; பிறகு அவ்வாமை தண்ணீரில் ஓடிப்போம்" என்றது. இதைக் கேட்டு எல்லாம் அவ்வாறே செய்து, மந்தரனை விடுவித்தன.

பிறகு, அந்த வேடன், வாய்த்தவிடும்போய், அடுப்பு நெருப்பும் இழந்தவள்போல வெட்கி, மிகவும் வருத்தமடைந்து, "கைக்கு வாராத பெரிய இலாபத்தை இச்சித்துக் கைக்கு வந்த சிறிய இலாபத்தை இழந்தேனே! யார்க்கும் 'அதிக ஆசை அதிக நஷ்டம்.' கிடைத்தமட்டும் போதுமென்று நினைக்கிறவனே மஹா புருஷன்" என்று இங்ஙனம் எண்ணிக்கொண்டு, தன் வீட்டுக்குப்போனவுடனே, அந்தக் காகமும் ஆமையும் மானும் எலியும், மிகவும் ஸந்தோஷமடைந்து, தங்கள் இடத்தில் முன்போல வாழ்ந்திருந்தன.

## 40. "அழிவி னவைநீக்கி ஆறுய்த்து அழிவின்கண் அல்லல் உழப்பதாம் நட்பு"

மகததேசத்திலேயுள்ள ஒரு சண்பக வனத்திலே ஒரு மானும் காகமும் ஒன்றுக்கொன்று நட்பாயிருக்கையில், அந்தமான் தன் மனத்தின்படி புல் முதலானவைகளை மேய்ந்து கொழுத்திருக்கிறதை ஒரு நரி பார்த்து, தனக்குள்ளே ஆலோசித்து, "இவன் நமக்கு அஸாத்தியனாயிருக்கிறானாகையால், இவனை வஞ்சனையாற் கொல்லவேண்டும்"

என்று இப்படி நிச்சயித்து, அதன் சமீபத்திற்போய், "சிநேகிதா! சுகமா?" என்றது. அதைக்கேட்டு மான், "நீ யார்"? என, நரி, "நான் க்ஷுத்திரபுத்தி என்கிற நரி; இந்தக் காட்டில் யாருமற்ற பாவியாய் ஒருவனாகத் திரிந்துகொண் டிருந்தேன்; இன்றைக்கு உன்னைப்பார்த்து, மிகுந்த ஸந்தோஷத்தை யடைந்தேன்; இப்போது உனக்கு வேலை செய்து கொண்டு, உன்னிடத்திலிருக்க இச்சிக்கிறேன்" என்றது.

அதைக்கேட்டு மான், "நல்லது" என்றது. பிறகு பொழுதுபோனவுடனே, இரண்டும் ஒரு சண்பகமரத்தின் கீழே வந்தன. அம்மரத்தின்மேல் வாசம்பண்ணிக்கொண் டிருக்கிற, மானின் சிநேகமாகிய சுபுத்தி யென்னுங் காகம், இவ்விரண்டையும் பார்த்து, மானை நோக்கி, "ஓ மித்திரா! உன்னண்டையிலிருக்கிறவன் யார்?" என, மான், "இந்தச் சம்புகன் என்னுடன் சிநேகிக்க விரும்புகிறான்" என்றது. அப்போது காகம், "மித்திரனே! சடிதியில் வந்த வழக்கமில்லாதவனை நம்பலாகாது. ஒருவன் குலமும் நடத்தையுந் தெரியாமல், அவனுக்கு இடங்கொடுக்கலாகாது" என்றது.

அப்போது நரி, "ஒருவன் சுபாவம் சிநேகிக்கிறதற்கு முன்னே தெரியுமா? நல்லோர்களுக்குச் சுபாவத்தினாலே காரியமில்லை. அவர்களுடைய சிநேகம் கண்ட மாத்திரத்தினாலேயே ஆகிறது" என்றது. மான் அதைக்கேட்டுக் காகத்தைப் பார்த்து, "எப்படி நீ எனக்கு மித்திரனோ, அப்படியே இவனும் இருக்கட்டும்; நீ ஒன்றுந் தடை சொல்லாதே" என்று சொல்லி, நரியைத்தன்னிடத்தில் வைத்துக்கொண்டது.

பிறகு, மூன்றும் தங்கள் மார்க்கத்தின்படி வயிற்றை நிரப்பிக்கொண்டு, இராத்திரிக்கு அந்த இடத்தில் வந்து

கொண்டிருந்தன. இப்படியிருக்கையில், ஒருநாள் நரி மானைப்பார்த்து, "மித்திரா! இக் காட்டில் இளவிளவென்று நேர்த்தியான பயிர் இருக்கிறதை உனக்குக் காண்பிக்கிறேன்" என்று சொல்லி, அதை அழைத்துக்கொண்டு போய்க் காட்டிற்று. அன்றுமுதல் அந்த மான்போய்த் தினமானம் பயிரை மேய்ந்துகொண் டிருக்கையில், அதைக் கொல்லைக்காரன் பார்த்து, அங்கே வலை கட்டினன்.

பின்பு வழக்கப்படி அங்கே மேயப்போன மான் அதிற் சிக்கிக்கொண்டு, "இப்போது என்னை மித்திரனைத் தவிர யார் விடுவிப்பர்?" என்று மனதில் எண்ணிக்கொண் டிருக்கையில், அங்கே நரிவந்து, "என்னுடைய மனோரதம் நிறைவேறிற்று: இப்போது நான் இதன் எலும்பையும் மாம்சத்தையும் நிரம்பத் தின்னுவேன்" என்று வாயூற மனத்தில் எண்ணிக்கொண்டு, சும்மா இருந்தது. அதைக்கண்டு மான், "மித்திரா! ஏன் சும்மாவிருக்கிறாய்? என்னுடைய வலையைச் சீக்கிரம் அறுத்து என்னைவிடுவி; ஸங்கட காலத்தில் சிநேகிதர்கள் உடையிழந்தவன் கைபோல உதவுகிறார்கள்" என, சம்புகன், "ஆம்; நீ சொல்வனவெல்லாம் மெய்யே; ஆயினும், எனக்கு விரதமாகையால், நான் இன்றைக்கு இந்தத் தோல்வலையைத் தீண்டமாட்டேன்; நாளைக்கு என்ன சொன்னாலுங் கேட்பேன்; சிநேகிதனுக்காக நான் பிராணனைவிடத் தக்கவன்" என்று சொல்லி, அதன் கண்ணுக்குத் தப்பித்துக்கொண்டு, அங்கே ஓரிடத்தில் ஒளித்துக் கொண்டிருந்தது.

காகம் இராத்திரிக்கு மான் வாவில்லையென்று அதைத் தேடும்பொருட்டு இங்கும் அங்கும் திரிந்துகொண்டு அங்கே வருகையில், அந்த மானின் அவஸ்தையைப் பார்

த்து, "சிநேகிதா! உனக்கு இந்த அவஸ்தை ஏன் வந்தது?" என்றது. மான், "இஃது உன் வார்த்தையைக் கேளாமையால், வந்த பயன்" என, காகம், "உன் கூட்டாளியான சம்புகன் எங்கேபோனுன்?" என்றது. மான், "என்னுடைய இறைச்சியைத் தின்கிறதற்காக அவன் இங்கேதானே ஒளித்துக் கொண்டிருப்பான்" என்றது.

அதைக்கேட்டுக் காகம், "தனக்கு இதம் பண்ணுகிற மித்திரன் பேச்சைக் கேளாதவனுக்கு விபத்துச் சீக்கிரம் வரும்; பின்னும் அவன் சத்துருவுக்குச் சந்தோஷமும் வருவிக்கிறுன்" எனச் சொல்லிக்கொண் டிருக்கையில், கொல்லைக்காரன் கையில் ஒருதடியை யெடுத்துக்கொண்டு வர, அவனைப் பார்த்துக் காகம் மானுக்கு, "மித்திரா! நீ இப்போது மூச்சை யடக்கிக்கொண்டு, செத்தவனைப் போலக் கிடந்தால், அவன் உன்னைப் பார்த்து, நீ செத்தாய் யென்று 'என்ணிக்கொண்டு, கட்டியவலையை யவிழ்த்துச் சுருட்டி வேருேரிடத்தில் வைக்கப்போவான்; அப்போது நான் கத்துகிறேன்; அதைக் கேட்ட மாத்திரத்தில் நீ மிகவும் விரைவாய் ஓட்டம்பிடி" என்று சொல்லித் தான் அப்படியே பொய்யாக மானின் கண்ணைக் குத்திக்கொண்டிருந்தது.

இதற்குள்ளே வந்த கொல்லைக்காரன் மானைப் பார்த்துச் செத்ததென்று எண்ணி, கட்டியிருந்த வலையை யவிழ்த்து ஓரிடத்தில் ஒன்ருகக் கூட்டிவைக்கப்போனுன். காகம் அதைப் பார்த்துச் சங்கேதப்படி கத்த,மான் அதைக்கேட்டவுடனே, ஓட்டம்பிடித்தது. அதைக்கொல்ல நினைத்து அந்தக் குடியானவன் தடியை விசிறியெறிய, அது பதிவிருந்த நரிமேற்பட, அஃது இறந்தது.

## 41. "மதிப்பின்னீர பேதையார் நட்பு"

ஒரு நகரத்திலிருக்கிற ஓர் வீழைப்பார்ப்பான் தனக்கு ஒருவன் கொடுத்த பசுவின்கன்று இரண்டையும் புல் முதலானவைகள் போட்டு மிகவும் பருத்துக் கொழுக்க வளர்த்தான். அக் கடாரிகளைப் பார்த்து, அவற்றைக் கொண்டுபோக ஒரு திருடன் தும்பெடுத்துக்கொண்டு புறப்பட்டு வரும் வழியில், கோரப்பல்லும் நீண்ட மூக்குஞ் செம்பட்ட மயிருஞ் சிவந்த கண்ணுங் கறுத்தவுடம்புமாக விருந்த ஓர் இராக்கதனைக் கண்டுபயந்து, அவனைப் பார்த்து, "நீ யார்?" என்றான்.

அவன், "நான் சத்தியவசனனென்னும் இராக்கதன். நீ யார்? சொல்" என, இவன், "நான் திருடன்; ஒரு வறிய பிராமணன் வைத்துக்கொண்டிருக்கிற இரண்டு பசுக்களைத் திருடப் போகிறேன்" என்றான். இராக்ஷதன், "மித்திரா! அவ்வந்தணன் பரிசுத்தனாகையால், நான் அவனைத் தின்பேன்; பின்பு இருவர் காரியமும் ஆகும்" என்றான். இப்படிப் பேசிக்கொண்டு, இருவரும் அங்கே போகும்போது, அந்தணன் தூங்கிக்கொண் டிருந்தமையால், அவனைத் தின்ன இராக்கதன் போக, அவனைப் பார்த்துச் சோரன், "மித்திரா! நான் பசு விரண்டையுங் களவு செய்த பிறகு நீ அவனைத்தின்" என்றான்.

இராக்ஷதன், "சிநேகிதனே! பசுக் கூச்சலாற் பார்ப்பான் விழித்துக்கொண்டால், நம்முடைய காரியமெல்லாங் கெட்டுப்போம்; ஆதலால், நான் முன்னே அவனைப் புசிக்கிறேன்; பின்னர் நீ அச்சமில்லாமல் கோக்களைக் கொண்டுபோ" என்றான். கள்ளன், "நீ அவனைத் தின்னத் தொடங்கும் அரவத்தால், வேறொருவன் வந்தால், அவன் என்னைப்

பசுக்கொண்டுபோக வொட்டான்; ஆதலாற் பசுக்களிரண்டையுங் கொண்டுபோன பின்பு, நீ அவனைத்தின்'' என்றான்.

இப்படியாக இருவர்க்கும் வாதம் நடக்கையில், அவ்வேதியன் விழித்துக்கொள்ளவே, அப்போது கள்ளன், "ஓ பிராமணா! இவ்வரக்கன் உன்னைத்தின்பேனென்கிறான்'' என, அதைக்கேட்டு இராக்கதன், "இக்கள்வன் உன் மாடுகளைக் களவாடவந்தான்'' என்றான். இப்படி இருவர் பேச்சையுங் கேட்டுப் பார்ப்பான் மெலுக்குவைப்பட்டு, இஷ்டதேவதை தியானத்தால் இராக்கதனினின்றுந் தன்னைக் காப்பாற்றிக் கொண்டு, கையில் தடியெடுத்து வந்து, கள்வனை யடித்துத் துரத்தினான்.

## XXXI. நட்பாராய்தல்

**42.** "ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை
கடைமுறை தான்சாந் துயரந் தரும்''

ஓர் இராஜாவின் பஞ்சணையில் மந்தவிசர்ப்பணி யென்னும் ஒரு சீலைப்பேன் நெடுநாளாக வாசம் பண்ணிக் கொண்டிருக்கையில், ஒருநாள் அதன் வீட்டுக்கு டிண்டிபனென்னும் மூட்டுப்பூச்சி வந்தது. அதைப் பார்த்துச் சீலைப்பேன், "அப்பா! நீ பொல்லாத தீயோய்; முட்களைப்போன்ற பற்களினாலே தூங்குவதற்கு முன்னமே துடுக்காய்க் கடிப்போய்;நீ சமயந் தெரியாதோயாதலால், ராஜசயனத்திலிருக்கத் தக்கோயல்லை; இவ்விடம் விட்டு ஓடிப்போ'' என்று கடுகடுத்துச் சொல்லிற்று.

மூடு, "நான் அப்படிச் செய்யவில்லை. நீர் சொன்னபடியே கேட்பேன்'' என்றதன் காலில் விழுந்து பிரார்த்திக்க, சீலைப்பேன் மனமிரங்கி, "நல்லது; நீ வெடுக்கென்று

கடியாமல், நித்திரை செய்யப்பார்த்து, மெத்தெனக் கடித் துக் கொஞ்ச ரத்தங் குடித்திரு" என்று சொல்லிற்று. அப்போது அம் மூட்டுப்பூச்சி "நல்லது" என்றிருந்தது.

பிறகு, ராசன் விழித்திருக்கும்போதே மூடு சுறுக் கென்று கடிக்க, ராசன் திடுக்கிட்டெழுந்திருந்து, "என் னே கடித்தது" என்று, சோதனைக்காரருடனே சொல்ல, அவர்கள் விளக்குக் கொண்டு சோதிக்க, மூடு சீக்கிரமாய்க் கட்டிற் சந்திலொளித்துக்கொண்டது. அதற்கிடங்கொடுத்த சீலைப்பேன் அகப்பட, "நீ யன்றோ எங்களரசனைக் கடித் தாய்?" என்று, அவர்கள் அதனை நசுக்கிக் கொன்றார்கள். ஐயோ! அது வகை தெரியாமல் இறந்தது.

## 43. "குணனும் குடிமையும் குற்றமும் குன்று இனனும் அறிந்துயாக்க நட்பு"

பாகீரதி தீரத்தில் திரிகூட மென்னும் மலையில் ஒரு முதிய இத்திமரப் பொந்தில் வாசம்பண்ணிக்கொண்டிருந்த நகமுங் கண்ணு மில்லாத சாற்கவன் என்னும் ஒரு கிழக்கழு கானது, மற்றைப் பக்ஷிகள் தன்னிடத்தி லிரக்கம் வைத்துத் தங்கள் ஆஹாரத்திற் கொஞ்சங் கொஞ்சம் நெருக்கிக் கொடுக்கத் தின்றுகொண்டு சீவித்திருக்கையில் ஒருநாள் நெடுஞ் செவிய னென்னும் பூனை பறவைகளுடைய குஞ்சு களைத் தின்னவேண்டி அம்மரத்தின் கீழே வர, அதைக் குஞ்சுகள் பார்த்துப் பயந்து பெருங் கூச்சலிட, கழுகு கேட்டு, "நீங்கள் ஏன் அஞ்சுகிறீர்கள்? இங்கே எவன் வந் தான்?" என்றது.

இதற்குள்ளே பூனை சாற்கவனைப் பார்த்து, "நான் செத்தேன்!" எனப் பயந்து, உடனே மனத்தில் தைரியம் பண்ணிக்கொண்டு, "இந்தச் சத்துருவைத் தப்பித்துக்

கொண்டு ஓடுகிறதற்கு நமக்குச் சக்தியில்லை; ஆகையால், இவன் சமீபத்திற் போகவேண்டும்; பின்னர் எஃதுண்டாகுமோ அஃதுண்டாகட்டும்'' என்று இப்படி நிச்சயித்து, அந்தக் கழுகின் கிட்டப் போய், "ஸமர்த்தனே! உனக்கு வந்தனம் பண்ணுகிறேன்'' என்றது. கழுகு அதைக் கேட்டு, "நீ யார்?'' என, அப்போது பூனை, "நெடுஞ்செவியனென்னும் பூனை நான்'' என்றது. பின்பு சாற்கவன், "நீ சீக்கிரமாய் இவ்விடம் விட்டு ஓடிப்போ, இல்லாவிட்டாற் சாவாய்'' என்றது.

பூனை, "நான் என் விருத்தாந்தத்தைச் சொல்லுகிறேன்; அதைக் கேள்; பிறகு, கொல்லத்தக்கதானாற் கொல்லு; சாதிபேதத்தினாலேயே பிராணிகளைக் கொல்லுவதாவது பூசிப்பதாவது யோக்கியமன்று; ஆதலால் அவனவன் நடத்தையைப் பார்த்து, எது செய்யத்தக்கதோ அது செய்யவேண்டும்'' என்றது.

கழுகு அதைக்கேட்டுப் பூனையைப் பார்த்து, "நீ ஏன் வந்தாய்? சொல்''என, பூனை,"நான் கங்காதீரத்தில் நித்திய ஸ்நானம் பண்ணிச் சாந்திராயணம் முதலாகிய விரதங்கள் ஆசரித்துக்கொண் டிருக்கிறேன்; நீ மிகவுந் தருமவானாயிருக்கின்றாயென்று பக்ஷிகளால் எப்போதுங் கேள்விப்படுகிறதனாலும், வயதில் முதிர்ந்த வித்துவானிடத்தில் தருமங் கேட்கவேண்டுமென்று சாஸ்திரம் இருக்கிறதனாலும் நான் உன்னிடத்திற்கு வந்தேன். நீ தர்மத்தை விட்டு, என்னைக் கொல்லத் துணிந்தாய். இப்படி இல்லறத்தாருடைய ஆசாரம் எங்கும் பார்த்ததில்லை. சத்துருவும் தம்வீட்டுக்கு வந்தால், சாதுக்கள் அவனுக்குச் சம்மானம் பண்ணுவார்கள்; மரம் தன்னை வெட்டுகிறவனுக்கும் நிழல் கொடுக்க வில்லையா? சாதுக்கள் தங்கள் வீட்டுக்கு எவன் வந்தாலும்,

பூசிக்கிறார்கள்; குறைச்சலொன்றும் பண்ணுகிறதில்லை; அதிதி யாருடைய வீட்டுக்கு வந்து முகம் வாடிப் போகிறானோ, அவன், தன் பாவத்தை அவ்வீட்டு யஜமானனுக்குக் கொடுத்து அவன் புண்ணியத்தைக் கைக்கொண்டு போகிறானாகையால், அவர்களெல்லாரிடத்தும் தயைசெய்கிறார்கள்; சந்திரன் சண்டாளன் வீட்டிலும் பிரகாசிக்கிறான்'' என்றது.

இதைக்கேட்டுக் கழுகு, "பூனை இறைச்சிகளைத் தின்னுகிறது; மேலும் கொலை செய்கிறது என்று நினைத்து, இப்படி நான் சொன்னேன்'' என, அதைக்கேட்டு நெடுஞ்செவியன், பூமியைத் தொட்டுச் 'சிவசிவ' வென்று உச்சரித்துக் காதின்மேற் கையை வைத்து, "நான் தரும சாஸ்திரங்கள் கேட்டு, மிகுந்த வைராக்கியமடைந்து, பொல்லாத கருமங்களை யெல்லாம் விட்டுவிட்டேன். அநேக சாஸ்திரங்களில் கொலை செய்வதுபோல வேறொரு பாதகம் இல்லையென்று சொல்லி யிருக்கின்றது. எவர்கள் மற்றொருவனைக் கொன்று, தங்களுக்குச் சுகத்தை விரும்புகிறார்களோ, அவர்கள் நரகத்தை யடைகிறார்கள். ஆகையால், கொலை செய்யாமலிருப்பதுபோல வேறொரு தருமம் இல்லையென்று நினைத்துக் காட்டிலிருந்துகொண்டு, காய்கனி கிழங்குகளைச் சாப்பிடுகிறவர்கள், பாதகம் எப்படி பண்ணுவார்கள்?'' என்று சொல்லிக் கழுகுக்கு நம்பிக்கை வரப்பண்ணி, அதன் வீட்டில் இருந்தது.

பிறகு அந்த உருத்திராக்ஷப் பூனை, பட்சிகளின் குஞ்சுகளை நாடோறும் அங்கே கொண்டுவந்து தின்றுகொண்டிருக்கத் தலைப்பட்டது. அப்போது, குஞ்சிழந்த பறவைகளெல்லாம் விசனமுற்று, ஒன்றாய்க்கூடித் தங்கள் குஞ்சுகளைச் சோதிக்கத்தொடங்கவே, பூனை அதையறிந்து, அவ்விடம் விட்டு ஓடிப் போயிற்று. அந்தப் பக்ஷிகள் அங்

கங்கே பார்த்துக்கொண்டே கழுகின் பொந்தண்டை வந்து பார்க்கையில், அக்குஞ்சுகளேயுடைய எலும்புகளும் சிறகு களும் விழுந்துகிடக்கக் கண்டு, "நம்முடைய குஞ்சுகளே இந் தத் துரோகிக் கழுகே பக்ஷித்தது" என்று நிச்சயித்து, அந்தக் கழுகைக் கொத்திக் கொன்றன.

## XXXII. கூடா நட்பு

### 44. "சீரிடங் காணின் எறிதற்குப் பட்டடை நேரா நிரந்தவர் நட்பு"

ஒரு தேசத்தில் தேவசன்மா என்கிற ஒரு சந்நியாசி தான் பிச்சை யெடுத்துச் சம்பாதித்த திரவியத்தைக் கந் தைக்குள் வைத்து யார்க்குந் தெரியாமல் தைத்துப் போர் த்துக்கொண்டு, பின்னும் பிச்சையெடுத்துச் சாப்பிட்டுக் கொண்டு திரிய, அந்தச் சூதையறிந்த ஆஷாடபூதி யென் னும் ஒரு திருட்டுப்பிராமணன், "இந்தக் கந்தையை மாத்தி ரம் எப்படியாயினும் திருடிக்கொண்டால், நாம் எப்போ தும் திருட்டுவேலே செய்யவேண்டுவதில்லே; நம்முடைய வாழ்க்கை வெகு நாளேக்கு இனிது நடக்கும்" என்று ஆலோசித்து, ஒரு பிரமசாரியைப்போல அந்தச் சந்நியாசி யினிடத்திற் போய், அவன் காலில் வீழ்ந்து, "அடியே னுக்கு ஞானேபதேசஞ்செய்து, இந்த நிஸ்ஸாரமாகிய சமு சார சாகரத்தில் நான் இன்னும் அலேயாமற் சிறிது கடைக் கண்ணுற் பார்த்து என்னேக் கடைத்தேறப் பண்ணும். ஓ, மஹாநுபாவா! பாதுக்கஞ் சகியாத ஓ, பரமபுருஷா!" என்று இப்படி அழுத கண்ணும் சிந்தியமூக்குமாகக் கலங்கி நிற்க, அதைப் பாசாங்கென்று அறியாத அந்தச் சந்நி யாசி, இவன் தலேமேற் கையை வைத்து, "பயப்படாதே" என்றுன்.

அதுமுதலாக ஆஷாடபூதி வெகு பயபக்தியுடனே அவன் காலாலிட்ட வேலையைக் கையாற் செய்துகொண்டு, கந்தைக்குச் சமயம் பார்த்துக்கொண் டிருக்குநாளில், ஒரு நாள் ஒரு பிராமணன் வீட்டில் இருவரும் விலாப்புறம் வீங்கப் பிக்ஷை பண்ணிக்கொண்டு வெகுதூரம் வந்தார்கள்.

அப்போது ஆஷாடபூதி, ஒருவரும் அறியாமல் ஒரு துரும்பை யெடுத்துத் தன் தலைமேலே வைத்துக்கொண்டு, அந்தத் துரும்பைக் குருவுக்கு எடுத்துக்காட்டி, "ஐயையோ! நமக்குப் பிக்ஷைகொடுத்த பிராமணன் வீட்டுத் துரும்பு என் தலையில் ஒட்டி வந்துவிட்டதே! 'அன்னமிட்ட வீட்டிற் கன்னமிடலாமா?' 'உப்பிட்டவரை உள்ளளவும் நினை' என்று பழமொழியும் இருக்கின்றன வன்றோ?" என வாய்பதற நடுநடுங்கி, "இதை அந்த அன்னதாதா வீட்டிற் போட்டுவிட்டு இதோ நொடியளவில் வருவேன்" என்று, குருக்கள் பார்க்கும்படி பரபரப்பாக சிறிதுதூரம் ஓடி, ஒரு செடிமறைவில் உட்கார்ந்திருந்துவிட்டு, பின்பு இரைக்க இரைக்க ஓடிவந்து, ஆசாரியன் காலில் விழுந்தெழுந்து, "சுவாமி! உமதநுக்கிரகத்தா லிந்தப் பாவத்திற்குத் தப்பினேன்" என்றான்.

இதைப் பார்த்து, அந்த ஏழைச் சந்நியாசி ஆச்சரியமுற்று, "இவன் பரசொத்துக்கு ஆசைப்படாத பரமாத்மா" என்று நம்பி, தன்னுயிர்க்குச் சமானமாக நினைத்திருந்த கந்தையைச் சீடன்கையிற் கொடுத்து, ஒரு குளக்கரையில் இருக்கச்சொல்லி, தான் காலலம்பப் போனான். அவ்விடத்தில், இரண்டு ஆட்டுக்கடாக்கள் ஒன்றோடொன்று முட்டிச் சண்டை செய்ய அவைகளின் மண்டையிலிருந்து ஒழுகுகிற உதிரத்தை உண்ணலாமென்று ஒரு நரி போய் இரண்டுக்கும் நடுவில் அகப்பட்டு இறந்தது.

அவன் அந்த அநர்த்தத்தைப் பார்த்துக் கொண்டு சிறிதுநோ மிருக்கவே, அப்போழ்து அந்தச் சீஷன், "இதுதான் நல்லசமயம்; இது விட்டால் இனிக் கிட்டுமா? காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ள வேண்டும்" என்று நினைத்துக் கந்தையைச் சுருட்டிக்கொண்டு ஓடிப்போனான். உடனே சந்நியாசி வந்து பார்த்துச் சீஷனைக் காணாமல், "ஓகோ!, நம்மை ஆஷாடபூதி ஏய்த்தானே! நாம் மோசம் போனோமே!" என்று திகிற்பட்டு, உப்புக்கண்டம் பறி கொடுத்த ப்ரர்ப்பனிபோல ஒருவருடனும் சொல்லாம லிருந்துவிட்டான்.

## 45. "பகைநட்பாங் காலம் வருங்கால் முகம்நட்டு அகநட்பு ஒரீஇ விடல்"

ஒரு கிணற்றிலிருந்த கங்காதத்த னென்னும் ஒரு பெருந் தவளையை மற்றைத் தவளைகள் மிகவும் வருத்திக் கொண்டிருந்ததனால், அஃது இராட்டினத்தோண்டி நெறியே வெளியில் வந்து, "இத்தாயாதிகள் வலியவர்களும் பலருமா யிருக்கிறார்கள்; இதற்கு என்ன செய்வோம்?" என்று எண்ணமிட்டுக்கொண்டிருக்கையில், ஒரு பாம்பின் புற்றைப் பார்த்து, "வழிப்போக்கர் காலில் தைத்த முள்ளை முள்ளாலேயே வாங்குகிறதுபோல இந்தப் பாம்பை நமது வீட்டுக்குக் கொண்டுபோய், பங்காளிகளைக் கொல்ல வேண்டும்" என நிச்சயித்து, வளையின் கிட்டவிருந்து, பாம்பைக் கூவ, பாம்பு, "இவன் மாந்திரிகனோ? நம்மைக்கொல்லவந்தவனோ? கூப்பிடுகிறவன் இன்னவனென்று தெரியவில்லை. ஆதலால் இவனை இங்கிருந்தே கேட்கவேண்டும்" என்று தீர்மானித்து, "நீ யார்?" என்றது.

மண்டூகம், "நான் கங்காதத்தனென்னும் மண்டூக ராஜன்; உன்னைச் சரணமாக அடைந்தேன்" என, கேட்டுப் பிரியதரிசனன், "நெருப்புத் துரும்புகளின் சேர்க்கை நில்லாததுபோல நான் உன் பரம சத்துருவா யிருக்கையில், நீ இங்கே வந்து இந்த விபரீத பாஷணம் ஏன் பண்ணுகிறாய்?" என்றது. கங்காதத்தன், "என்னை மாற்றார் வருத்துகிறார்களென்று உன்னிடத்திற்கு வந்தேன்; நீ எங்கள் ஜன்மசத்துருவென்பது மெய்யே; ஆனாலும், வலிய பகைவர்களை வைரிகளைக் கொண்டே அடிக்கவேண்டுமென நீதிநூலிருக்கிறது" என்றது.

கேட்டுச் சர்ப்பம், "என் வரவு அங்கு எப்படிக் கிடைக்கும்?" என, மண்டூகம், "உன்னை நான் அநாயாஸமாய்க் கொண்டுபோவேன்" என்றது. அதைக் கேட்டுப் பிரியதரிசனன், "நாம் தீனியைக் குறித்து என்றைக்கும் விசாரப்பட்டுக்கொண் டிருக்கின்றோம்; அவ் வாஹாரம் தானே வந்து இன்றைக்கு நம்மை அழைத்துக்கொண்டு போகவிருக்கையில், ஆலஸ்யம் ஏன் பண்ணவேண்டும்? 'வலிய வந்த சீதேவியைக் காலாலுதைத்துத் தள்ளலாமா?" என்று தனக்குள் ஆலோசித்துக்கொண்டு தவளையின் பின்னே வர, தவளை அதை இராட்டினத்தின் வழியாய்க் கொண்டுபோய்த் தன் வீட்டில் வைத்துக்கொண்டது.

பின்பு, அந்தப் பாம்பு தவளைகளை யெல்லாந் தின்று, பிறகு கங்காதத்தனைப் பார்த்து, "மித்திரா! உன் சத்துருக்களையெல்லாங் கொன்றபடியினால், எனக்கு ஏதாவது ஆஹாரங் கொடு!" என்றது. தவளை, "நீ உன் சிநேகிதன் காரியத்தைச் செய்தாய்; இப்போது வந்தவழியே வீட்டுக்குப் போகலாம்" என்றது. அதைக் கேட்டுப் பாம்பு, "கங்கா

தத்தா! அந்தப் பிலத்தில் வேறு ஏதாவது வந்து தங்கியிருக்கும்; யான் அங்கேபோய் என்ன செய்வேன்? நீயே உன் ஸமுதாயத்திலிருந்து நித்தியம் எனக்கு ஒவ்வொரு தவளை கொடுத்துக்கொண்டு வா; இல்லாவிட்டால், நான் எல்லாரையும் ஒருங்கே கொல்லுவேன்'' என்றது.

இவ்வுத்தரவைக் கேட்டுக் கங்காதத்தன் பயமுற்று, நிதம் ஒரு தவளை விழுக்காடு கொடுத்துக்கொண் டிருக்க, பாம்பு தின்று, கடைசியில் ஒரு நாள் கங்காதத்தன் புத்திரனையுந் தின்றது. அதைக் கங்காதத்தன் மனைவி பார்த்து மிகவும் இடும்பையுற்று, கங்காதத்தனைப் பார்த்து, "நீர் இக்கொடியோனைக் கொண்டுவந்து குலத்தை நாசம் பண்ணினீர்; இனி இவ்விடம் விட்டுப் புறப்படும்; இல்லாவிடின் இவனைக் கொலை செய்யச் சூழ்ச்சி செய்யும்'' என, இதைக் கேட்டு மண்டூகம் ஆராய்ச்சி செய்துகொண் டிருக்கையில், பாம்பு, "எனக்கு ஏதாயினுந் தின்னக்கொடு'' என்றது.

கங்காதத்தன், "மித்திரா! நான் இருக்கையில், நீ தீனிக்கு ஏன் விசனமடைகிறாய்? இப்போது என் மனைவியை அனுப்பி வேறு கிணற்றி லிருந்து இன்னும் மண்டூகங்களை அழைப்பிக்கிறேன்; அதுவரையும் நீ சும்மாவிரு'' என, கேட்டுப் பிரியதரிசனன், "நீ எனக்கு அன்னதாதா; ஆதலாற் பிதாவாக இருக்கிறாய்; உடனே தவளைகளை அழைப்பி'' என்றது. பின்னர் கங்காதத்தன் தனது மனைவியை மற்றொரு கூபத்திற்போக்கி, சிறிது பொறுத்ததும், "போனவள் இன்னும் வரவில்லை; நானே போய், அநேகந் தவளைகளைக் கொண்டு வருகிறேன்; நீ இங்கே சுகமாவிரு'' என்று சொல்லித் தானும் இராட்டின வழியே புறப்பட்டுப்போய், பின்பு திரும்பாமல் அங்கேயே இருந்துவிட்டது.

## XXXIII. பேதைமை

**46.** "போய்படும் ஒன்றோ புனைபூணும் கையறியாப்
பேதை வினைமேற் கொளின்"

தென் தேசத்திலே பைடணபுரி என்னும் ஊரிலே பணிபத்திரன் என்னும் ஒரு வணிகன் நன்னெறியில் ஒழுகி வரும் காலத்தில் தரித்திரத்தால் மிகவும் வருந்தி, "சிச்சீ! தயை சாந்திமுதலாகிய குணங்கள் பொருளில்லாதாரிடத்து விபரீதமாகத் தோன்றுகின்றன" என்று க்ஷணந்தோறும் வியசனமுற்றுப் புலம்பி, "ஐயோ! குடும்பப் பாதுகாப்பின் ஏக்கத்தினால் அறிவு மழுக்க மடைகின்றதே! தான்யம் முதலிய பொருளில்லாத வீடு சுடுகாடு ஒக்குமன்றோ? தரித்திரன் கல்வி முதலிய குணச் சிறப்புற்றோனாயினும் மனிதர் எண்ணிக்கையில் உறுவனோ? எல்லாக் கவலைகளும் தரித்திரத்தினாலேயே உண்டாகின்றன. இனி பட்டினிகிடந்து உயிர் துறப்பதே நலம்" என்று துணிந்து, அம்மணிபத்திரன் தூங்குகையில், பதுமநிதி ஒரு சந்நியாசியின் வடிவத்தோடு அவன் கனவில் தோன்றி, "நான் உன் ஒழுக்கத்தால் சந்தோஷ மடைந்தேன்; நாளை இவ்வுருவத்தோடு உன் வீட்டுக்கு வருவேன்; நீ ஒரு கோலால் என் தலையில் அடிப்பையாயின், நான் ஒரு பெரும் பொன்குவை யாவேன்" என்று சொல்லி மறைந்தது.

இவ்வாறு கனவுகண்ட மணிபத்திரன் துயிலொழிந்து தான் கண்ட கனவைப்பற்றிச் சிந்திப்பானாய், "ஆ! ஆ! இக் கனவு உண்மையோ? அன்றேல் எப்பொழுதும் நமக்குண்டாயிருக்கும் பொருட்சிந்தையின் தோற்றமோ?" என்று இப்படிக் கருதிக்கொண் டிருக்கையில், இரவில் கண்டது போல ஒரு சந்நியாசி வரக்கண்டு, கனவு உண்மைதான்

என்று நிச்சயித்து, அவன் சிரசின்மேல் ஒரு கோலால் மெல்ல அடிக்க, அவன் பொன்மயமாக ஒளிவிட்டு நின்றான். வணிகன் களித்து, அப் பொன்னை ஒன்றிற் கொட்டி மூடிக் கொண்டிருக்கையில், அங்கு அவன் மனைவிக்கு நகங் களைந்துகொண்டிருந்த ஓர் அம்பட்டனை நோக்கி, "அடா நாவிதனே! உனக்குக் கொஞ்சம் பொருள் தருவேன்; நீ யாருடனும் இந்த அதிசயத்தைச் சொல்லாதே" என்று வற்புறுத்தி உறுதிமொழி வாங்கிக்கொண்டு, திரவியத் துடன் அவனை அனுப்பினான்.

அவ் வம்பட்டன் வீட்டிற்குச் சென்றதும், அறிவின் மையால் தன்னுள், ஓ! ஓ! நாளை விடியற் காலையில் நாம் ஒரு துறவியை அழைத்து வந்து, அவன் மண்டையில் கோல்கொண் டறைவோம்; அவன் சுடர்விரி பசும்பொன் னாவன்" என்று முடிவு செய்துகொண்டு, மற்றைநாள் பௌத்த சந்நியாசிகள் கூட்டத்திற் சென்று, மிக வணங்கி, "ஹே! ஸாதுக்களே! நீங்கள் எவ்வகைப்பட்ட மானிடர்க் கும் உபதேசம் செய்து கரையேற்றுகின்றீர்; மேலும் எவ் வெவர் வீட்டிற்கும் பிக்ஷைக்குச் செல்கின்றீர்; ஆதலால் இத்தினம் நாயினேன் சிறு குடிலுக்குத் தேவரீர் திருக் கூட்டத்தோடு எழுந்தருள்வீராக'' என்று பிரார்த்தித்தான். அவர்களில் தலைவன் அம்பட்டனை நோக்கி, "ஓ! மாசுதீர்ப் போய்! பிராமணர்கள்தாம் உன் வீட்டிற்கு நாள்தோறும் வருகின்றனரே! இன்று நீ ஏன் எம்மை அழைக்கின்றனை?" என்று கேட்க, அவன், "அடிகளே! நம்மிடத்துப் பேர் அறச்செயல்கள் இருக்கின்றன. நீவிர் என் வேண்டுகை யைச் சிறிதும் மறுக்காமல், திருவுளம் வைத்தருள்வீர்" என்று, அவன் கையைப் பிடித்துத் தன் வீட்டினுள் இழுத்

துச் சென்று, அவன் கபாலத்தில் உலக்கையால் சாத்தின அளவில், அவன் மூர்ச்சித்து நிலத்தில் வீழ்ந்திறந்தான்.

இதற்குள் மற்றச் சந்நியாசிகளும் வந்து சேர்ந்து, மெய்ம்மறந்து கிடக்கின்றவனைக் கண்டு, பேரிரைச்சலிட, இக் கலிபலியை அரசன் காவலர்கள் கேட்டு, அவ் வம்பட்டனைப் பிடித்துக் கட்டிக் கொண்டுபோய் மன்னன்பால் விட்டனர். அவன் மஞ்சிகனை நோக்கி, "அடா! பாவீ! இஃதென் செய்தாய்?" என்று உறுக்கி வினவ, அம் மங்கலன் "ஓ! நரபதே! நான் மணிபத்திரன் வீட்டிற் கண்டு இப்படிச் செய்தேன்" என்று வணிகன் வீட்டில் நடந்ததைச் சொன்னான். வேந்தன் வணிகனை அழைப்பித்து, "நின் வீட்டில் நிகழ்ந்தது என்னை?" எனவே, அவன் ஒன்றும் உரையாதிருக்க, மன்னன், "இவ் வம்பட்டன் ஒன்றும் ஆராயாது அறிவின்மையால் இப்படிச் செய்தான். இவனைக் கழுவேற்றுக" என்று கட்டளை யிட்டான். பேதையான வெள்ளறிவன் கழுவேறுண்டு மாண்டான்.

## XXXIV. புல்லறிவாண்மை

### 47. "வெண்மையெனப் படுவது யாதெனில் ஒண்மை உடையம்யாம் என்னும் செருக்கு"

நெடுஞ்செவியல் என்ற ஒரு கழுதையும் ஸுமதி என்ற ஒரு நரியும் ஊரினர் பொருளைக் கொள்ளை யடித்து, ஒருநாள் இரண்டும் விலாப்புடைக்கத் தின்று, தேக்கெறித்துக் குந்தியிருக்கையில், அப்போது நிலவெறித்தமையால், நெடுஞ்செவியல், "இந் நிலவெறிக்கும் இரவில் எனக்குப் பொழுதுபோகவில்லையாதலால், நான் சற்றுப் பாடுவேன்" என்றது.

உடனே ஸுமதி, "நீள் செவியா! நீ பாடாதே! உழவர் உன் குரலைக்கேட்டு விழித்து வந்து, உன்னை அடிப்பார்கள். மௌனமாயிரு" என்றது. "நீள் செவியல், உனக்குக் கானரஸம் தெரியாது; ஆதலால்தான் என்னைத் தடுக்கின்றாய்" என்று நரியை வைதுவிட்டு, தன் பெருங் குரல் முழுதும் திறந்து பாடிற்று.

அப்போது உழவர் விழித்து வந்து, அக் கழுதையைக் குண்டுருட்டாய்ப் பிணித்து, நையப் புடைத்தனர்.

## 48. "அருமறை சோரும் அறிவிலான் செய்யும் பெருமிறை தானே தனக்கு"

விகடசங்கடங்க ளென்னு மிரண்டு அன்னமும் கம்புக்கிரீவனென்னும் ஆமையும் சிநேகமாய் ஒரு குளத்தில் வாழ்ந்துகொண்டிருக்கையில், அன்னங்கள், "இப்போது இங்கே மழை பெய்யாமையாற் குளம் வற்றிப்போமாகையால், இனி வேறொரு குளத்திற் போய்ச் சேர்வது யோக்கியம்" என்று நினைத்து, "இதை நம்முடைய சிநேகனுக்குஞ் சொல்ல வேண்டும்" என்று ஆலோசித்து, அப்படியே அதற்குச் சொல்லும்போது, கம்புக்கிரீவன், "நீங்கள் செப்பட்டையினாற் பறந்துபோவீர்கள்; நான் வேறோரிடத்திற்கு எப்படிப் போவேன்?" என்றது.

விகடசங்கடங்கள், "எங்கள் வார்த்தையில் நம்பிக்கை வைத்து, ஸ்திரமாயிருப்பையானால், உன்னையுங் கொண்டு போவோம். கொண்டுபோகையில், வழியில் நீ ஏதொன்றும் பேசாம லிருந்தாற் போகக் கூடும்" என்று சொல்லி, ஒரு கழி கொண்டுவந்து, ஆமையைப் பார்த்து, "இந்தக் கழியைப் பல்லினாலே பலமாய்க் கடித்துப் பிடித்துக்கொள்ளு; விட்டுவிடாதே; நாங்க ளிருவரும் இதை இருபுறத்திலும்

மூக்காற் கௌவிக்கொண்டு, ஆகாச மார்க்கத்திற் போகிறோம்" என்று சொல்லி, அந்தக் கொம்பை இரண்டும் பற்றிக்கொண்டு, எழும்பிப் பறந்துபோயின.

போகையில், இதை ஒரு பட்டணத்துச் சனங்கள் பார்த்து, அதிசயித்து நகைத்து, எல்லோரும் ஒருமிக்க, "ஆ! இஃதென்ன! இரண்டு பறவைகள் ஒரு கழியைத் தூக்கிக்கொண்டு, அதை ஆமையாற் பிடிப்பித்துக்கொண்டு போகின்றன!" என்றிப்படிப் பேரிரைச்சலிட்டுப் பேசினார்கள். அதைக் கேட்டுக் கம்புக்கிரீவன், "இந்த இரைச்சல் எங்கிருந்துண்டாகிறது?" என்று சொல்வதற்கு வாய்திறந்தவுடனே, கழியினின்றும் விடுபட்டுப் பூமிமேல் விழுந்தது. அப்போது அங்கே யிருந்த சில புலால் தின்பவர்கள் உடனே அதனைக் கொன்று தின்றார்கள்.

## 49. "காணாதாற் காட்டுவான் தன்காணான்"

ஒரு மரத்தின்மேற் கூடுகட்டி அதில் வாழ்ந்துகொண்டிருந்த இரண்டு தூக்கணங் குருவிகள் ஆலங் கட்டியுடனே கூடப் பெருமழை பெய்கையிற் குளிராலே நளிர்பிடித்துப் பல்லுக்கிட்ட நடுங்கிக்கொண்டு அம் மரத்தடியில் ஒதுங்கியிருந்து வருந்துகிற ஒரு வானரத்தைக் கண்டு, "உனக்குக் கைகால்க ளிருந்தும் குளிர் காற்று முதலிய துக்கத்தை ஐயோ! நீ ஏன் அனுபவிக்கின்றாய்? நீ ஏன் வீடு கட்டிக் கொள்ளவில்லை?" என்று இரக்கத்தாற் சொல்ல, இதைக் கேட்டு அத் துஷ்டக் குரங்கு "ஊசி மூஞ்சி மூடா! நீ வல்லவனுக்குப் புத்தி சொல்லுகிறையா? எனக்கு வீடு கட்டுகிற சக்தியில்லை; அதைப் பிரித்தெறிகிற ஸாமர்த்தியம் உண்டு; இதோ பார்" என்று அதன் கூட்டைப் பிய்த்தெறிந்தது.

## XXXV. பகைத்திறம் தெரிதல்

### 50. "வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும் பகைவர்கண் பட்ட செருக்கு"

தென்றேயத்தில் மயிலை நகரத்தின் ஸமீபத்தில் ஒரு பெரிய ஆலமரத்தில் மேகவர்ணனென்னுங் காகராஜன் தன் கூட்டங்களோடுகூட இருக்கையில், அங்கே, உருமர்த்தனன்* என்னும் இராஜக் கோட்டான், தன் கூட்டத்தோடு மலைக் குகையிலிருந்து வந்து, ஆலமரத்தை வளைத்துக் கொண்டு, இராத்திரியில் அகப்பட்ட காகத்தையெல்லாம் கொன்றுவிட்டு, நாடோறும் போய்க்கொண்டிருந்தது.

அதனால் அவ்விடத்தை விட்டுவிடும்படி காக்கைகட்கு நேரிட்டதனுல், மேகவர்ணன் தன் மந்திரிகளை அழைத்து, "நம் பகைவர் நாடோறும் இங்கு இராமாறு வந்து காக்கைகளைக் கொல்லுகிறார்கள்; நமக்கோ இரவிற் கண் தெரிகிறதில்லை; மேலும், அவர்களிருப்பிடமும் அறியோம்; அறிந்தாலங்கே போய் அவர்களைக் கொல்லலாம்; பகைவரை அசட்டை பண்ணினுல், அவர் நோய்போலப் பெருகிப் பொல்லாங்கு விளைப்பர்; ஆதலால் இப்போழ்து சந்தி விக்கிரகம் பேதம் கலஹம் என்னும் இவற்றுள் தக்கது இதுவென்று சொல்வீர்கள்" என்றது.

இதைக் கேட்டு மந்திரிகள், "அரசன் கேட்பதற்கு முன்னேதானே பிரதானிகள் இதஞ் சொல்லவேண்டும்; இல்லாவிடின் கேட்ட பிறகாயினும் விரைவாய்ச் சொல்ல வேண்டும்; அப்படிச் சொல்லாமற் சும்மா இச்சகம் பேசுகிறவனை அரசனுக்குச் சத்துருவென்று நினைக்க வேண்

---

* இதன் பெயர், பின்னே அரிமர்த்தனன் எனக் காணப் படுகின்றது.

டும்" என்று இவ்வாறு சொல்லிப் பின்பு, அம்மந்திரிகள் ஐந்தும் "என்ன செய்வோம்?" என்று ஒன்றுக் கொன்று ஆலோசிக்கத் தொடங்கின:—

அப்போது அவைகளில் உத்தமசீவி யென்பது அரசனை நோக்கி, "மஹா ராஜாவே! வலியவர்களுடனே பகை பண்ணலாகாது! ஸமாதானமே தகுந்தது; பகைவர்களை வணங்கிக் காலம் பார்த்து மோசம் பண்ணுகிறவர்கள் சுகமடைகிறார்கள்; ஆற்றில் தண்ணீர் நிரம்பிப் பெருகி வருகையில் வணங்கிய செடி நாசமடையாமற் பின்பு முன்போல நிமிர்ந் திருக்கின்றதே. நெருக்கமான காலத்தில் துஷ்டர்களுடனே ஸமாதானம் பண்ணி உயிரைக் காப்பாற்றினாற் பின்பு எல்லாச் செல்வமும் ஸம்பாதிக்கலாம். மேலும், தனக்குப் பலபேர் பகைவர்க ளிருந்தால், அவர்களில் ஒருவனோடு உறவுகொண்டு, எல்லாரையுங் கெடுக்க வேண்டும். நிலமும் நட்பும் பொருளுமாகிய இவற்றின் இருப்பைத் தன்னிடத்திலும், மாற்றானிடத்திலும் இவ்வளவென்று ஆராய்ந்துகொண்டு, கூடுமானாற் பின்பு அவனுடன் எதிர்க்க வேண்டும்; இல்லாவிடின் கூர்மவிருத்தியை அநுஸரித்துத் தனக்குப் பலமுள்ள காலத்தில் கிருஷ்ண ஸர்ப்பத்தின் வியாபாரத்தை அநுஸரிக்க வேண்டும். ஜயிப்புந் தோற்பும் ஒருவன் பங்கல்ல. ஆதலால், மாற்றாருடைய வலியும் வலியின்மையும் பார்த்து, எது செய்யத்தக்கதோ அது செய்ய வேண்டும். அஸமயத்திற் கொக்குப் போல உறங்கியிருந்து, ஸமயத்தில் அதன் குத்தைப்போல இருக்கவென்று பெரியோரும் சொல்லியிருக்கிறார்களே" என்றது.

இப்படி அதன் வாக்கியத்தைக் கேட்டு இராஜன் இரண்டாம் பிரதானியைப் பார்த்து, "உன் கருத்தென்ன சொல்" என, இரண்டாம் மந்திரி, "அவன் சொன்னவற்

றிற் சிறிதும் நன்மையில்லை: பெரிய சங்கடம் நேரிட்ட போது பகைவருடனே ஸந்தி பண்ணலாகாது. நெருப்பி ஞற் காய்ச்சின நீர் அந்த நெருப்பை அவியாதா? நம்மைக் கோட்டான்கள் வருத்துகின்றன வென்று அவர்களோடு ஸந்தி பண்ணினுற் கொல்லுவார்கள். விஷமச்சுரம் அப் பியங்கநத்தால் வளர்கிறது போலவும், நெய்யினுல் நெருப்பு விருத்தியாகிறதுபோலவும் பொல்லாங்கு சம்பவிக்கும். சத்துரு வலியவன் நாம் எளியோம் என்பீரானுல், அதற் குச் சிந்தையில்லை. யானை பெரிதா யிருந்தாலும் அதைச் சிங்கக் குட்டி கொல்லாநிற்கும். ஆதலான் மனோபலத் தோடு பகைவரைக் கொல்லவேண்டும். அரசனுடைய கொடுங் தண்டத்தைப் பார்த்து வைரிகள் இயல்பாய்ப் பயமடைகிருர்கள். எங்கும் பெயர் பாவி யிருக்கிற பராக் கிரமசாலியாயும் எல்லாராலும் அறியப்பட்டவனும் இருக் கிறவன் எவனே அவனே பாக்கியவான். இல்லாவிடின் தாயின் யௌவனத்தைக் கெடுத்துப் பயனென்ன? பராக் கிரமத்தால் உயிர்த்திருக்கிறவனே உயிருள்ளவன், மற்ற வர்கள் பிணத்துக்கு ஒப்பானவர்கள்" என்றது.

இப்படி அது சொன்னவற்றை யெல்லாம் அரசன் கேட்டு, மூன்றும் பிரதானியைப் பார்த்து, "உன் கருத் தைச் சொல்வாய்" என, அஃது, "அரசனே! கேள்: பகை வன் தன்னிலும் வலியவனு யிருந்தால், அவனேடு பொருந் தலாவது பொருதலாவது ஒன்றுஞ் செய்யாமல் தன்னி டத்தை விட்டு வேறிடத்திற் போகவேண்டும்; இதுவே நல்லது; இவ்வேளை சண்டை செய்யலாகா தென்று வைரி யின் பலத்தைப்பார்த்து எவன் தேசத்தைத் துறந்துபோகி ருனே அவன், பாண்டவர்களைப் போலச் சுகமடைகிருன்.

இதைவிட்டு எவன் செருக்குடனே யுத்தஞ் செய்கிருனே அவன், குலமுதலறக் கெடுகிருன்" என்றது.

இதைக் கேட்டு அரசன், நாலாம் மந்திரியைக் கேட்க, அது, "தன்னிடம் விட்டுப் பெயர்தல் தகுதியாகக் காண வில்லை; முதலை தன்னிடத்தி லிருந்தால், மலையொத்த யானை யையும் இழுத்துக் கொண்டு போகின்றது; அதுவே தன் னிடம் விட்டுப் பெயர்ந்தால், அதை நாய்களும் இழுத்துக் கொண்டு போகின்றன. ஆகையால், தன்னிடத்திலிருந்தே நட்புள்ளவர்களை உதவிக்காக அழைப்பித்துக்கொண்டு, பகைவர்களைக் கெடுக்க வேண்டும். எவன் சத்துரு வரு கிருனென்று பயந்து தன்னிடம் விட்டுப் போகிருனே, அவன் மறுபடி அவ்விடத்திற்கு வருவதில்லை. பற் பிடுங்கின பாம்பும், மதமில்லாத யானையும், இடம்விட்டுப் பெயர்ந்த அரசும் எல்லாராலும் அவமான மடைகின்றன. மேலும் தன்னிடத்தி லிருந்தால், ஒருவனே நூறு பெய ருடனே யுத்தம் பண்ணுகிருன். ஆதலால், துர்க்கத்தை யும் மதிலையும் அமைத்துக் கொண்டு அவற்றின் சார்பாற் பகைவருடனே யுத்தம் பண்ணவேண்டும். அதனுல், வெற்றி பெற்ருல் இலக்குமியைப் பெறலாம்; செத்தால் ஸ்வர்க்க லோகம் பெறலாம். ஆகையால் இவ் விரண்டையுந் துறக் காது, நிலத்திற் சிக்கென ஊன்றிய வேரையுடைய மரம் காற்றினுல் விழாது; அந்த மரமே தன்னிடத்தில் இராவிட் டால், வாயு அதைத் தள்ளுகிறது. ஆகையால் எதொன்று செய்யத்தக்கதோ அதை இங்கே யிருந்துகொண்டே செய்யவேண்டும்" என்றது.

இப்படி அரசன் அதன் கருத்தை யறிந்துகொண்டு ஐந்தாம் மந்திரியை நோக்கி, "உன் அபிப்பிராயம் எப்படி?" என, அது, "ஸ்வாமி! என் ஆலோசனையும் இப்படியே

யிருக்கிறது. சார்பை விட்டாற் சமர்த்தர்களும் பராக்கிரமக் குறைச்சலடைகிறார்கள். ஆதலால், யாரையானாலும் உதவிக்குச் சேகரித்துக் கொள்ளவேண்டும்; அதுவும் இருப்பிடத்திலிருந்தே ஸம்பாதிக்கவேண்டும். உறைவிடம் விட்டுப் பிரிந்தவனுக்கு யாரும் வாய்ப்பேச்சினாலானாலும் சகாயம் பண்ணார்கள். எப்போது அக்கினிக்குப் புல் சருகு முதலியவற்றின் சேர்க்கையாற் காட்டைக் கொளுத்த வலியுண்டாகிறதோ அப்போது, வாயு மித்திரத்தனமாய் உதவி பண்ணுகிறது; அந்நெருப்பே விளக்கு வடிவாய் அந்தாமாநிற்கும்போது காற்றே அதை யவிக்கிறது. மேலும் வலியவர்களுடைய சார்பிருந்தால், எல்லோர்க்கும் பெருமையுண்டாகிறது. தாமரையிலையைச் சார்ந்த நீர்த்துளி முத்தினொளியை யடைகிறது. சார்பில்லாமல் யாதொரு காரியமுமாகிறதில்லை; ஆகையால், மற்றொருவனை அநுஸரிக்க வேண்டும். இதுவே என் கருத்து" என்றது.

பிறகு, மேகவர்ண ராஜன் பிதாவின் மந்திரியாகிய சிரஞ்சீவியைப் பார்த்துக் கும்பிட்டு, "உம்முடைய ஸந்நிதியில் எல்லோரையுங் கேட்டு, அவர்கள் சொன்ன உத்தரங்களையும் உம்மைக் கேட்பித்தேன். இவற்றில் எது தக்கதோ அதை நீர் சொல்லும்" என, இப்படி ராஜா சொன்னதைக் கேட்டுக் கிழமந்திரி, "எல்லோரும் நூற்சார்பாலேயே சொன்னமையால் போக்கியமாகவே யிருக்கின்றன. சத்துரு பலவானா யிருந்தாலும், அவனுக்கு விச்வாஸங் காண்பித்து அவனைக் கெடுக்கவேண்டும். இல்லாவிட்டால் துர்க்கம் முதலியவற்றிலிருந்து, தனக்கும் சத்துருவுக்கும் இருக்கிற பலாபலங்களை அறிந்து, எது செய்வதோ அது செய்ய வேண்டும்; இது விகிதமாம். மாதர்கள், முக நட்புள்ளவர்கள், பகைவர்கள், சூதாடுகிறவர்கள் இவர்களிடங்களிலே

மெய் முன்னுக்கு வராது. தெய்வம் குரு இவர்களிடத்தில் மெய்யாகவே நடக்கவேண்டும்" என்றது.

இப்படிப் பெரிய மந்திரியின் வசனங்களைக் கேட்டு, மேகவர்ணன், "பிறனுடைய புரைசல்களை எப்படி அறியலாம்?" எனக் கேட்க, சிரஞ்சீவி, "மறைந்த பொருள்களைப் பிராமணர்கள் வேதத்தினாலேயும், பசு வாசனையினாலேயும், அரசன் வேவுகாரரை யனுப்பியும், மற்றவர்கள் தங்கள் கண்களாலும் இப்படிப் பலவிதமாய் அறிகிறார்கள்" என்றது. கேட்டு மேகவர்ணன், "நல்லது: இந்தப் பிரதானிகள் ஏன் பல பலவிதமாய்ச் சொன்னார்கள்?" என, சிரஞ்சீவி, "நாரதன் தருமராஜனுக்குச் சொன்னதைக் கேள்: அரசன் தனக்கு உபயோகமானவற்றைக் குறித்து ஒரு நாழிகை விசாரியாவிட்டாலும், உடனே கெடுதிவரும். உடையவன் கண்ணோடாப் பயிர் அழியாதா? ஆகலால், மந்திரி முதலானவர்களுடைய ஸமாசாரங்களைக் கணந்தோறுந் தெரிந்து கொண்டு எப்போதுந் தான் எச்சரிக்கையா யிருக்கவேண்டும்" என்றது. கேட்டு மேகவர்ணராஜன் மறுபடியும் அதைப் பார்த்து, "ஐயா! இப்போது என்ன செய்யலாம்?" என, "நான் உன் சத்துருவை வஞ்சித்து உன் கருமத்தை முடிப்பேன். நான் என்ன உபாயஞ் சொல்லுகிறேனோ, அப்படியே செய்: 'நீ சத்துரு பக்ஷத்தில் இருக்கிறாய்' என்று என்னை நீ நிந்தித்து, வேறொன்றின் இரத்தத்தை என்மேலெல்லாம் பூசி, ஆலமரத்தின் கீழே எறிந்துவிட்டு, நீ கூட்டங்களோடுகூட மலையின்மேற் போயிருந்தால், கோட்டான்கள் தங்கள் பகைவர்களுக்கு இவன் விரோதியாயிருக்கிறானென்று எண்ணிக்கொள்ளுவார்கள். பிறகு நான் அவர்கட்கு நம்பிக்கை வருவித்துத் துர்க்கம் முதலானவற்றின் உளவறிந்து, சத்துருநாசம்பண்ணுவேன். அது

வரைக்கும் நீ அங்கேயிரு. இவ்வாலோசனை நான் முன்னமே செய்து இப்பேர்து உனக்குச் சொன்னேன்" என்றது.

இப்படி அதன் உள்ளுறையைக் கேட்டு மேகவர்ணன், "அத்தியந்தம் பிரியமான பிராணனை நீ துரும்புபோல நினைத்தாய்", என, பிரதானி, "ராஜகாரியத்துக்காகச் சேவகர்கள் இப்படியே செய்யவேண்டும்; இடர் வருங்காலத்திற் சேவகர்கள் உதவுவார்களென்று அரசர்கள் தானமானத்தினால் அவர்களைப் பரிபாலிக்கிறார்கள். அப்படி உதவாவிட்டாற் பரிபாலனத்துக்குப் பலன் என்னை ?" என்று இப்படிச் சொல்லிப் பொய்க் கலகத்துக்கு ஆரம்பித்தது. இந்த ரகசியம் இரண்டாம் பேர்க்குத் தெரியாது. அதனால், மற்றைப் பறவைகள் அதைக் கொல்லத் தீர்மானிக்க, அப்போது மேகவர்ணன், "நீங்கள் அவனைத் தண்டிக்கவேண்டாம்: இவன் பகையாளிக்கு நன்மை பண்ணுகிற துஷ்டனாகையால், இவனை நானே சிக்ஷித்துக் கோபமாறுவேன்" என்று சொல்லி, எழும்பியெழும்பி மூக்குமுனையால் அதைப் பொய்யாகக் குத்திச் சங்கேதப்படி ஆலமரத்தின்கீழ் எறிந்துவிட்டுக் கூட்டத்தோடு வேறிடத்திற்குப் போய்விட்டது. பிறகு பொழுது போனவுடனே ராஜக் கோட்டான் அவ்விடத்திற்கு வந்து, மரத்தைச் சுற்றி முற்றுகை போட்டுக்கொண்டு, காகங்களைப் பார்க்கும்போது, யாதொன்றும் அங்கே யில்லாமையால், தன் கூட்டத்தைப் பார்த்து, "காகங்கள் எவ்வழியாற் போயின ? அவ்வழி உங்கட்குத் தெரிந்திருந்தால், இப்போதே அவர்களைக் கொல்லுவோம்: பகைவர்கள் துர்க்கம் முதலியவற்றைச் சேர்வதற்கு முன்னேயானால், அவர்களை வெல்லலாம்; பின்பு வெல்லக்

கூடாது" என்று இப்படிச் சொல்லிக்கொண்டிருக்கையில், சிரஞ்சீவி மெல்லெனக் கத்தினுன்.

அதைக் கேட்டமாத்திரத்தில் வெகு கோட்டான்கள் போய், அதைக் கொல்லத் தொடங்கும்போது, சிரஞ்சீவி, "நான் மேகவர்ணன் மந்திரி; என் பெயர், சிரஞ்சீவி: அக் கொடியவன் எனக்கு இப்படிப்பட்ட அவஸ்தை வரப் பண்ணினுன்; ஆகையால், நான் உங்கள் அரசனேச் சரணமாக அடைகிறேன்" என்றது. இதைக் கேட்டுச் சேவகர்கள் உருமர்த்தனனுக்குச் சொல்ல, அவன் அதைக்கேட்டு ஆச்சரியமாய் அதனருகே போய், "ஓ! சிரஞ்சீவி! உனக்கு இந்த ஸ்திதி ஏன் நேரிட்டது?" என்றனன். சிரஞ்சீவி கை கூப்பிக்கொண்டு, "முன்னுள் நீர் காகங்களே அடித்தீரென்று கோபமாய் அந்தக் கொடிய மேகவர்ணன் உம்முடனே போர் செய்ய ஆயத்தப்பட, அப்போது நான், "ராஜனே! இஃது உனக்குத் தக்கதன்று: வலியவனுடனே எளியவன் போர் செய்தால், விளக்கையவிக்க விட்டில் போய் விழுகிறதுபோலக் கெடுதியுண்டாகும்; ஆதலால், அவருடனே ஸமாதானம்பேசி, அவர்கள் கேட்பதைக் கொடுத்துப் புத்திமானுனவன் உயிரைக் காப்பாற்ற வேண்டும்; பணம் எப்போதும் ஈட்டிக் கொள்ளலாம்; உயிரிழந்தாற் பெறக் கூடாது" என்று இப்படிச் சொல்ல, என்னே, 'நீ பகைவர் பக்கமாய்ப் பேசுகின்ருய்' என்று வைது இந்த உபத்திரவம் பண்ணினுன். இப்போது எனக்கு உம்முடைய திருவடிகளே துணே; எனக்கு இந்தக் காயங் குணப்பட்டாற் காகங்கள் முழுதையுங் கொன்று, உமக்குக் கீழ்ப்பட்டிருப்பேன்" என்றது.

இப்படி அது சொல்ல, கேட்டு உலூக ராஜன், குருதிக் கண்ணன், கொடுங் கண்ணன், கொள்ளிக் கண்ணன், குரூர

நாசன், பிரகாரநாசன் என்னும் தன்னுடைய ஐந்து மந்திரி யுளேம் பார்த்து, “சத்துரு மந்திரியாகிய இவன் நமக்குக் கைவசமானுன்: இவனை என்ன செய்யலாம்?” என்றது. அப்போது குருதிக்கண்ணன், “இவன் அவனுக்கு முதன் மந்திரி; காலவிசேஷத்தால் அவனுக்கு இவன் பிரதிகூல மாய்த் தோற்றப்பட்டான்; அவன் ஒருநாளும் இவன் வார்த்தைக்கு வேருக நடக்கிறவ னல்லன்; ஆதலால், இவ னைத் தம்மிடத்தில் வைத்துக்கொண்டு, இவன் கையாலே சத்துருவோடு ஸந்தி செய்யவேண்டும்; இதுவே தக்கது; ஸாமமுதலாகும் நான்கு உபாயத்தில் தண்டம் கடைப்பட் டது; ஆகையாலே, அந்தப் பிரயோகம் கடைசியிற் பண்ண வேண்டும்; ஸாமத்தினுற் செய்கிற காரியம் எப்போதுங் கெடுகிறதில்லை; ஆகையால், அவர்களிடத்தில் தண்டத்தை ஆலோசிக்கலாகாது! சருக்கரையைத் தின்று பித்தம் போ மானுற் கைப்பான மருந்தை என் தின்னவேண்டும்? ஆத லால் ஸாமோபாயமே என் ஸம்மதம்; இதுவே நல்லது” என்றது.

இதைக் கேட்ட உருமர்த்தனன் இரண்டாம் அமைச் சனைப் பார்த்து, “உன் உள்ளுறை எது? அதைச் சொல்” என, கொடுங்கண்ணன், “வேந்தனே! இக்காகங்கள் நமக்கு இயல்பான வைரிகள்; ஆகையால், இவர்களோடு ஸமாதா னந் தக்கதன்று; தண்டமே தகுந்தது; வெல்லக் கூடாத பகைவர்கள் இருந்தால் அவர்கட்கு விரோதமாகிய தாயாதி களை வருத்தவேண்டும்; இல்லாவிட்டாற் பணங் கொடுத்தா வது பொய்ப் பத்திரம் பிறப்பித்தாவது அவர்களுள் ஒருவர்க் கொருவர் பகையெழுப்ப வேண்டும்; நடுவிற் புரைசலுண் டாளுல், முத்தும் பந்தனை யடைகிறது! ஆதலால், இதைக் குறித்து என் சொல்லைக் கேட்டுச் சுவபக்ஷத்தை ரக்ஷித்துக்

கொண்டு, பரபக்ஷத்தைப் பேதிக்கவேண்டும்; இக்காகம் வைரியாயினுங் கொல்வது நன்றன்று: ஒருவேளை மாற்றானும் ஹிதம் சொல்லுகிறான்" என்றது.

இப்படி அவனுள்ளத்தை யறிந்து, அரிமர்த்தனன் கொள்ளிக்கண்ணனைப் பார்த்து, "உன் மனத்தைச் சொல்வாய்" என, அவன் "மஹாராஜனே! ஸாமமும் பேதமும் எனக்கு உடம்பாடல்ல; ஸமாதானத்தாற் பகைவனுக்குச் செருக்கு உண்டாகும்; மற்றும், உமது பேதத்தை அவன் அறிந்தால் ஒருவேளை மோசமுஞ் செய்வான்; ஆதலால், விவேகி கொடையாற் பகைவனை வசம்பண்ணி, அதை மேன்மேலும் பெருகச்செய்தால், பின்பு, அவன் தனக்குத் தானே கைவசமாவான்; மேலும், இவன் அவர்களோடு விருத்தமாய் நம்மிடத்தில் வந்தமையால், விரோதிகளிடத்திலிருக்கிற குறைச்சல்களை அறிவித்து நமக்குச் சந்தோஷம் வருவிப்பான்; அதுபற்றி, இவனைப் பாதுகாக்கவேண்டும். இங்ஙனஞ் செய்தால், ஒருவர்க் கொருவர் இன்சொற்களாற் காலப் போக்குஞ் சம்பவிக்கும். மேலும் நம்முடைய மர்மங்களையும் வெளிவிடான். இங்ஙனமன்றி, ஒருவர்க் கொருவர் ரகசியங்களை வெளிவிட்டால், நஷ்டம் ஸம்பவிக்கும்" என்றான்.

இதைக் கேட்டு இறைவன் குரூரநாசனைப் பார்த்து, "உன் இஷ்டம் எது?" என, அஃது "இம் மூவர் சொன்னதும் உத்தமமா யிருக்கவில்லை; ஸாம தான பேத மென்னும் உபாயங்கள் வலியில்லாதவர்களைக் குறித்து இருக்கின்றன. வலியுள்ளவர்கள் சத்துருக்களிடத்தில் தண்டமே செய்யவேண்டும். அதைத் துறந்து ஸாமம் முதலாகிய தந்திரத்தை ஆலோசிக்கின்றவனைப் பகைவர் பயந்தவனென்று எண்ணி அவன்மேல் வருவார்கள். ஆகையால், வேந்தன்

தண்டத்தினுலேயே பாக்கியஞ் சேகரிக்க வேண்டும். பாராக்கிரமம் இல்லாவிடில் எது தெய்வத்தால் நேரிடுகிறதோ அதை நுகர வேண்டும்; மேலும் உலகத்தில் எல்லோரும் இலக்குமியை விரும்புகிருர்கள்; அப்படி விரும்பினுலும், மனவூக்கத்தோடு தண்டத்தால் எதிரிகளை அவமானம் பண்ணுகிறவர்களுக்கே இலக்குமி கைவசமாகிருள். சோம்பலுள்ளவர்கள் அருமையான பொருளைக் குறித்து இலக்குமியைப் பிரார்த்திக்கிருர்கள்;பராக்கிரமமுள்ளவனே, தன் சௌரியத்தினுல் இலக்குமியைப் பலவிதமாக அநுபவிக்கிருன். ஆதலாற் பலவான் பகைவனைக் கொல்லவேண்டும்." என்றது.

கேட்டு அரசன் பிரகாரநாசனை நோக்கி: "உன் மனத்தில் என்ன இருக்கிறது?" என, அவன், "மஹாராஜாவே! இவன் தங்களை அடைக்கலமாக அடைந்தபடியினுல், இவனைத் தலைவனுக்கி முற்காலத்தில் இராமசந்திரன் விபீஷணனைத் தலைவனுக்கி, இராவணுதிகளை எப்படி அழித்தானே அப்படியே சத்துருக்களைத் தாம் அழிக்க வேண்டும். மேலும், சரணமடைந்தவனைக் கொல்லுகிறவன் ரௌரவ நரகத்தை அடைவானென்று, சிபி சக்கரவர்த்தி தன் மாமிசத்தை வேடனுக்குக் கொடுத்துப் புருவை விடுவித்தான் என்று பாரதத்திற் சொல்லியிருக்கிறது. ஆதலால், அபயமென்று அடைந்தவர்களைக் காக்கவேண்டும்" என்ருன்.

இதைக்கேட்டு அரிமர்த்தனன், "எனக்கும் இப்படியே அபிப்பிராயம் இருக்கின்றது; இவன் சத்தியவானும் புத்திமானுமா யிருக்கிருன்; கபடியல்லன். இவற்றை யறியாமல் மேகவர்ணன் இவனை மானபங்கஞ் செய்தான்; இவனைக் கொன்ருல் நான் விசுவாச காதக ஞவேன். பிரமஹத்தி, கள்ளுண்டல், களவாடல் இவற்றிற்குப் பிராயச்சித்தம்

உண்டு; விசுவாச காதகத்துக்கு அஃதில்லை யன்றோ! ஆகை யால், இவனுக்குச் சம்மானம் பண்ணி நமது தூர்க்கத்திற்கு அழைத்துக் கொண்டு போகவேண்டும்" என்று உறுதி செய்து, சிரஞ்சீவியைப் பார்த்துச் சொல்லுகிறது: "நீ என் கோட்டையில் வந்து சுகமாக இரு; நான் உன்னைப் பாது காப்பேன்" என, இதைக் கேட்டுச் சிரஞ்சீவி களிப்புற்று, "மஹாராஜாவே! நான் விஸ்தரித்துச் சொல்லுவதென்ன? என் குடிப்பிறப்புப் பிரபுவுக்குச் சகவாசத்தால் வரவரத் தெரியும்" என்றது.

அப்போது குரூரநாசன், "இப்போது கோட்டான் குல மெல்லாம் ராஜன் குற்றத்தாற் பாழாகும்; பிறர் குற்றங்களை அரசனுக்கு அறிவிக்கவேண்டும்; அரசன் இதத்தைக் கேளாவிடின் அதற்கு என்ன உபாயம் இருக்கின்றது?" என்று சொல்ல, அரசன் அதைக் கேளாமற் சிரஞ்சீவியைத் தன் அரணிற் கொண்டுபோய் வைத்தான். பின்னர்ச் சிரஞ் சீவி, "நம்மைக் கொல்லவேண்டு மென்றவன் எல்லாரிலும் கெட்டிக்காரன்; மேலும், யஜமானனுக்கு நன்மையையே செய்பவன்; மற்றவர்கள் யஜமானனைப்போல மூடர்களா கையால், அவனொருவன் இல்லாவிடின் இவர்களை வெல்வது அருமையன்று" என்று இப்படி மனத்துக்குள் குதூஹலிப் புடனே ஆலோசித்துக்கொண் டிருக்கையில், அரிமர்த்த னன் காரியக்காரர்களைப் பார்த்து, "இச் சிரஞ்சீவிக்குத் தூர்க்கமெல்லாங் காட்டுங்கள்" என்றான்.

சிரஞ்சீவி ராஜன் கட்டளையின்படி எல்லாம் பார்த்து, "நாம் இதற்குள்ளிருந்தால், நமதெண்ணம் முடியாது; பின் னும், நம்முடைய வஞ்சனைகளையுந் தெரிந்துகொள்ளுவார் கள். ஆதலாற் கோட்டைத்தலைவாசலிலிருந்து மனோபீஷ் டத்தை முடிக்கவேண்டும்" என்று, தனக்குள்ளே தீர்மா

னித்துப் பிறகு அரசனை நோக்கிச் சொல்லுகிறது: "மஹா ராஜனே! நான் வாயஸம்; ஆதலால், உள்ளே யிருக்கத்தக் கவனல்லன்; உமது கடைவாசலிற் காத்திருந்து கபடமில் லாமற் சேவித்துக் காலந் தள்ளுவேன்; அன்புள்ளவனும் மனத்தழுக் கில்லாதவனுமாகிய சேவகன் எங்கிருந்தாலுஞ் சிந்தையில்லை" என்று இவ்வண்ணஞ் சொல்லிக் காகம் வெளியே இருந்தது.

அப்போது குரூரநாசன், "ராஜா அமைச்சர் முதலிய நீவிரெல்லீரும் மூர்க்கர்களா யிருக்கிறீர்களென்று எண்ணு கிறேன்; முற்காலத்தில் நடந்த ஒரு கதையும் இங்ஙனம் இருக்கிறது. 'முதல் மூடன் நான்; இரண்டாமவன் வேடன்; மூன்றாமவன் அரசன்; நான்காமவன் அமைச்சன்' என்று சொல்லி விட்டு, ஒரு பறவை பறந்து போயிற்று" என்று சொல்லி, பின்பு தனது இஷ்ட மித்திரர்களைப் பார்த்து, "இன்றை வரைக்கும் இவ்விராஜாவின் சார்பில் இருந்தேன்; இனி வேறொரு மலையைச் சார்ந்திருக்க வேண் டும்" என்று சொல்லி, அவர்களோடு குரூரநாச மந்திரி தேசாந்தரம் போயிற்று.

பின்னர்க் காகமந்திரி, "இப்பொழுது கோட்டான் கூட்டத்தைக் கொல்வதற்கு வருத்தமில்லை. விவேகமில் லாத மந்திரியையுடைய அரசன் சீக்கிரத்திற் கெடுவான்; விவேக மந்திரி, வஞ்சனையுள்ள மித்திரர்களைப் பகைவ ரென்று அறிந்துகொள்வான்; இப்படி அறிகிறவன் இவ னிடத்தில் இப்போது ஒருவனுமில்லை. ஆதலால், நங்குலத் தின் மங்களத்தைக் குறித்து யாதாயினும் பிரயத்தனஞ் செய்யவேண்டும்" என்று மனத்தில் நிச்சயித்து, அன்று முதல் தினந்தினம் ஒவ்வொரு விறகாகக் கொண்டு வந்து வழியண்டை போட்டுக்கொண்டே வந்தது. அது போரா

கக் குவிந்தவுடனே, கோட்டான்களெல்லாம் குருடுகொண் டிருக்கும் சூரியனுதய காலத்திலே அவ்விறகுகளையுஞ் சுள்ளி களையும் அக்குகையின் வழியிற் கும்பலாகச் சேர்த்துத் தான் மெள்ள மேகவர்ணனிடத்திற்கு வந்தது.

அப்போழ்து மேகவர்ணராஜன், "வா; என்னசெய்தி?" என, சிரஞ்சீவி, "நான் பகைவர் குலவேரைப் பிடுங்கத்தக்க உபாயஞ் செய்திருக்கிறேன்; நீங்கள் ஒவ்வொருத்தரும் ஒவ்வோர் எரி கொள்ளி விழுக்காடு கொண்டுவந்து, என் சாகையின் மேற்போட்டாற் கோட்டான்களெல்லாம் இறக் கும்" என்றது. இதைக் கேட்டுக் காகராஜன், "என்ன உபா யஞ் செய்தாய்? சொல்" என, மந்திரி, "மஹாராஜாவே! இது சொல்லத்தக்க சமயமன்று; நான் சொல்லிய செய்தி யைப் பகைவ ரறிந்து வேறூரிடத்திற்கு ஓடிப்போனால், நம்முடைய இத்தனை முயற்சியும் வீணாய்ப்போம்; மேலும், கடிதிற் செய்யத்தக்க காரியத்தில் தாமஸஞ் செய்யலா காது" என்றது.

காகராஜன் கேட்டு, தன் பரிவாரத்தோடு கூட எரி கொள்ளிகளைக் கொண்டு வந்து உலூகங்களிருக்குங் குகை வழியிற் போட, அப் புகையினாற் கோட்டான்கள் பயந்து, கலக்கமுற்று இரைச்சலிட்டுக்கொண்டு வெளியே வருகை யிற், போக வழியில்லாமையால், அப்போது குரூரநாசன் சொன்னதை நினைத்துக்கொண்டு, "அவன் வார்த்தையைக் கேளாமைக்குப் பலன் இதுதான், இதுதான்!" என்று அழுகுரலோடு சொல்லிக்கொண் டிருக்கையில், நெருப்புச் சுவாலை அதிகரித்துக் கோட்டான்கள் இறந்தன.

பின்பு மேகவர்ணராஜன், முன் விட்ட தன் மாத்திற் குடிபோய்ச் சுகமாய் இராச்சியத்தை அநுபவித்துக்கொண் டிருக்கையிற் சிரஞ்சீவியைப் பார்த்து, "நீ பகையாளி வீட்

டில் இருந்து எவ்வாறு காரியத்தை முடித்தாய்?" என்றான் சிரஞ்சீவி, "குரூரநாசன் தவிர மற்றவர்க ளெல்லாரும் மூட ராகையால், அவர்கள் அவன் புத்தியைக் கேளாமல் அவனை அவமானம் பண்ணி, என்னைத் தங்கள் துர்க்கத்திற் கழைத்துக்கொண்டு போனார்கள்; அதனால் அவன் தன் சிநேக பந்துக்களோடுகூட மறுதேயத்திற்குப் போனான்; எந்தச் சமயத்தில் எது செய்யவேண்டுமோ அந்தச் சமயத் தில் அதனைச் செய்து சத்துருக்களை வேரோடுகூட நாசம் பண்ணவேண்டும். நெருப்புத் தன் பராக்கிரமத்தினாற் காடு முழுதையுந் தகிக்கின்றது! ஆனால் மாவேர்கள் பூமியில் இருக்கின்றன; தண்ணீருங் காற்றும், மிருதுத் தன்மை யினால் அவ்வேர்களை அடியோடு பிடுங்குகின்றன" என்றது.

இங்ஙனம் அதன் வாக்கியங்களைக் கேட்டு மேகவர் ணன், "கடையானவர் இடையூறு வருமென்ற பயத்தினாற் காரியங்களைத் தொடங்குகிற தில்லை; இடையானவர் காரி யங்களைத் தொடங்கி, விக்கினம் வந்தால் விட்டுவிடுகிறார்கள், ஆயிரம் இடையூறுகள் வந்தாலும் எடுத்த கருமத்தை முடிக் கிறவர்கள் தலையாயாராவர். ஆதலால், நீ அநேகவித கஷ் டப்பட்டுப் புத்தியினாலே வெகு பகைவர்களைக் கொன்றாய். இது யோக்கியமாகவே யிருக்கிறது. சத்துரு, அக்கினி, வ்ரணம் இவற்றின் சேஷம் வைத்தால் மீண்டும் வளரு மென்று அறிந்து, நீ வைரியைக் களைந்தாய். ஆயுதத்தால் ஒருவன் சாகிறான். புத்தியினால் அநேகம் பெயர் ஒருமிக் கச் சாகிறார்கள்" என்ற, இராஜன் மொழியைக் கேட்டுச் சிரஞ்சீவி, "எல்லாம் உன் பிரதாபத்தால் ஆயின. உன் னைப்போலவிருக்கிற ஸத்துக்களுக்கு ஈஸ்வரனும் விதியும் நல்ல புத்தியைக் கொடுக்கும். அஸத்துக்களுக்குத் துர்ப் புத்தியைக் கொடாநிற்கும். இஃது அல்லாமல் தடியெடுத்

துக்கொண்டு அடிக்கிறதில்லை. கர்மத்தை அநுஸரித்துக் கொண்டிருக்கிற புத்தியினுற் பயன்களை அடைகிறார்கள்" என்று இப்படிச் சொல்ல, மேகவர்ணன் அம்மாத்தின் மேற் சுகமாய் அரசு செய்துகொண்டிருந்தது.

## XXXVI. உட்பகை

**51.** "உட்பகை யஞ்சித்தற் காக்க உலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும்"

அயோத்தியா நகரத்தில் சந்திரஸேனன் என்னும் ஓர் இராஜன் தன் மகன் குரங்குகளோடு விளையாடுவதில் அதிக ஆசையுடையனு யிருத்தலைக்கண்டு, பற்பல வானரங்கள் கொண்டுவந்து சாலையில் வளர்த்து வருகையில், அங்குச் சமையற்காரருக்கும் குற்றேவல் செய்வோர்க்கும் பகை மூண்டது. அதை அறிந்த அக் குரங்குகளுள் சதுரப்பாடுடைய ஒரு வானரம் மற்றக் குரங்குகளை நோக்கி, "இவ்விடம் கலகம் நிகழ்ந் திருக்கின்றமையால், நாம் இங்கு இருக்கக் கூடாது. காட்டகம் புகுவோம்" என்றது.

அதைக் கேட்ட மற்ற வானரங்கள், "ஆ! ஆ! வெகு நேர்த்தி! நீ மூத்தமையால் அறிவிழந்து கண்டபடி பிதற்றுகிறுய். இங்கு அரசனை அடுத்துப் பலவண்ணமான உண்டிகளை யுண்டு கூடியிருந்தோம். இந்த நலத்தை வலிவில் தள்ளிவிட்டு, வனத்தில் தழை தின்று வாழ்வதோ மேல்? யாதொன்று வரப் போகிறதோ, அஃது இங்குத்தான் வரட்டுமே!" என்று மறுத்து விட்டன. அதனுல் கிழக் குரங்கு தன் குடும்பத்தோடு காட்டுக்குப் போய்விட்டது.

பின்னர் வேலைக்காரர்களுக்கும் சமையற்காரர்களுக்கும் துவேஷம் முற்றி, ஒருநாள் வேலைக்காரர் மடையர்

களை ஒரு கோலினுல் அடிக்க, சமையற்காரர், கொள்ளிக் கட்டையைக் கொண்டு எறிந்தனர். அக் கனற்பொரி வைக் கோற் போரில் பற்றிக்கொண்டு, குதிரைச் சாலையிலும் பிடித்துக்கொள்ள, பல நல்ல குதிரைகள் வெந்திறந்தன; பல பாதியுடல் கரிந்தன. சில கண் மூக்கு முதலிய உறுப்பு வெந்தன. இச்செய்தி அரசன் அறிந்து, குதிரை வைத்தி யரை யழைப்பித்து, "என்ன செய்யலாம்" என்று கேட் டான். அவர்கள், "குரங்கின் தைலத்தால்தான் குணப் படும்" என்றனர். மன்னன வேலைக்காரரைக் கொண்டு குரங்குகளைப் பிடிப்பித்துக் கொன்று, வைத்தியர்கள் சொல் லிய பிரகாரம் தைலமாட்டும்படி உத்தரவு செய்தான். அதனுல் அச் சாலையிலுள்ள குரங்குகள் அனைத்தும் கொலை யுண்டிறந்தன.

இதை அக் கிழக்குரங்கு அறிந்து, "ஐயோ ! நம் வம் சம் இப்படியா நாசமாகவேண்டும்! இப்பழிக்கு நான் பழி வாங்கா திருப்பதில்லை" என்று உறுதி செய்துகொண்டு, காட்டில் திரிந்து வருகையில், மிகவும் அழகிய ஒரு தடா கத்தைக் கண்டது. ஆனுல் அங்கு மனுஷ்ய ஸஞ்சாரத் தையே காணுமல் வியப்புற்று, "இங்கு ஏதேனும் ஒரு பெரும் பேயிருக்கவேண்டும்" என்று எண்ணிக்கொண்டு, எட்ட நின்றே ஒரு தாமரைத் தண்டைப் பிடுங்கி, அதன் நாளத்தால் நீர் உறிஞ்சிக் குடித்தது. இதை ஆங்கு வசித் திருந்த ஒரு பைசாசம கண்டு, மர்க்கடத்தின் புத்திக் கூர் மையை யெச்சி, அருகு வந்து, "ஏ! வானரமே! உன் சது ரப்பாட்டை நான் மெச்சினேன். இந்த மணி வடத்தை ஏற் றுக்கொள்" என்று, ஓரிரத்தின மாலையைப் பரிசளித்தது.

உடனே குரங்கு அப் பேயை நோக்கி, "நீரில் உனக்கு எவ்வளவு பலமுண்டு?" என்று கேட்க, "பைசாசம் ஆயிரம்

பேர் ஒருங்கே இறங்கினாலும், அவர்களைக் கவளீகரித்து விடுவேன்" என்றது. அதைக் கேட்டுக் குரங்கு "ஆ! ஆ! அப்படியா! நீ எனக்கு ஸம்மானம் செய்தமையால், உனக்கு நான் நிரம்ப ஆகாரம் தருவேன்" என்று, ரத்தின மாலையைக் கழுத்தில் அணிந்துகொண்டு, சந்திரசேன அரையன் நகரம் சென்று, அவனைத் தரிசித்து, "அரசே உமது சோறு நெடுநாள் உண்டு வளர்ந்தேன். எப்படியும் உண்ட வீட்டுக்குப் பூனையும் வாலாட்டு மல்லவா? ஆதலால் உம்மைக் காண வரலாயினேன்" என்று பணிவாய்ச் சொல்லிற்று. அரசன் அதன் கழுத்திலுள்ள ரத்தின மாலையைக் கண்டு, "ஏ! வானரமே! உனக்கு இந்த மணி மாலை எங்கே அகப்பட்டது?" என்று கேட்டான்.

அதற்கு அது, "அரசே! காட்டில் ஒரு தடாகம் இருக்கின்றது. அதனில் விடியற்காலையில் மூழ்குவானுக்கு இவைபோன்ற மாலைகள் கிடைக்கின்றன" என்றது. அம்மொழி கேட்ட மன்னன், "ஆனால் நான் அங்குச் சென்று மூழ்கலாமா?" என்றான். அதற்கு வானரம், "ஆம்! நீங்கள் உங்கள் சேனையோடு சென்று மூழ்கினால் ஆளுக்கொன்று கிடைக்கும்" என்றது. அரசன், "அதுவே நல்லது" என்று, சேனைகள் புடைசூழக் காட்டிற்குப் போய், அத்தடாகத்தை அடைந்து, அன்றிரவு அதன் கரையில் தங்கியிருந்து, விடிந்ததும் தன் பரிவாரங்களோடு நீரில் இறங்கப் போக, வானரம், "நீரும் நானும் அப் பரிவாரங்கள் மாலை கொண்டெழுந்த பின்னர் மூழ்குவோம்" என்றது.

அரசன் சம்மதித்துத் தன் சேனைகளை மட்டும் ஏவ, அவைகள் நீரில் இறங்கினதும், பிசாசு அவர்கள் எல்லாரையும் ஒருங்கே அமிழ்த்திவிட்டது. அரசன் நெடுநேரமாகத் தன் பரிவாரங்கள் நீரினின்றும் எழுமென்று காத்திருந்து,

அவை வாராமையால், குரங்கை நோக்கி, "வானரமே! அவர்கள் ஏன் இன்னும் எழவில்லை?" என்றான். அதற்கு மர்க்கடம், ஒருயர்ந்த மரத்தின் உச்சிக் கிளையில் பாய்ந் தேறிக்கொண்டு, அரசனை நோக்கி, "வேந்தே! நீ என் குலத்தைக் குதிரைக்காகக் கொல்வித்தாய், அப் பழிக்கு நான் இதோ பிரதி செய்தேன். நீ எனக்கு அன்னமிட்டமையால், உன்னை மட்டும் காப்பாற்றினேன்" என்றது. அரசன், "ஐயோ! குரங்கு வஞ்சகமுள்ள பிராணி என்று கேட்டிருந்தும், மோசம் போனேனே!" என்று மனம் வருந்தினான்.

## XXXVII. பெரியாரைப் பிழையாமை

**52.** "கூற்றத்தைக் கையால் விளித்தற்றால்
ஆற்றுவார்க் காற்றா தாரின்னா செயல்"

மதுரா நகரத்து அரசனான பத்திரசேனக் கோமானுடைய ரத்தினவதி என்னும் பெயருடைய கட்டழகியாகிய மகளைக் கவர்ந்துசெல்லக் கருத்துக்கொண்டு, ஓர் இராக்கதன் வந்து ஸமயம் பார்த்திருந்தான். அப்படிக் கொஞ்சகாலம் அவன் இலக்குப் பார்த்துக்கொண்டு திரிகையில், ஒருநாள் அக் கன்னிகை அவனைக் கண்டு, தன் தோழி முகம் நோக்கி, "என் உயிர்ப் பாங்கி! இவ் வரக்கன் இரவும் பகலும் என்னையே உத்தேசித்துப் பதிவிருந்து வருகிறான். இவனை ஏமாற்ற ஏதேனும் ஒரு தந்திரம் செய்யவேண்டும்" என்றனள். அதைக் கேட்டிருந்த இராக்கதன், "ஓ! ஓ! இவளுக்கு நம் மெண்ணம் தெரிந்துவிட்டது. நம்மினும் வலியுள்ள ஒருவன் வந்துவிட்டால் நாம் என்ன செய்கிறது?" என்று மனத்திற்குள் அச்சங்கொண்டு, அரசன் குதிரைப் பந்தியினுள் ஒரு குதிரை வடிவு கொண்டிருந்தான்.

அப்படி யிருக்கையில், குதிரை திருடிப்போம்படி அங்கு வந்த ஒரு கள்வன் மற்றக் குதிரைகளைவிட இக் குதிரை சிறந்ததா யிருந்ததைக் கண்ணுற்று, அதன் வாயில் கடிவாளத்தைப் பூட்டி, வெளியில் இழுத்துவந்து, அதன் மீது ஏறிக்கொண்டு தன் வீட்டிற்கு ஓட்டினான். அஃது அங்குமிங்கும் இழுத்து, முரட்டுத்தனம் செய்ய, அவன் அதனைச் சம்மட்டியால் பன்முறை அடித்தும் பல வேறு உபாயங்கள் செய்தும் முயன்று பார்த்தான். என்ன செய்தும், அஃதொழுங்காய்ச் செல்லாமையால், அக்கள்வன், "இத்தனை காலமாக நான் கண்ட குதிரைகளில் இதை ஒத்த துஷ்டக் குதிரையை நான் பார்த்ததில்லையே! இஃது ஏதோ கிருத்திரிமமாக இருக்கிறது" என்று உள்ளங் கலங்குகையில், அக் குதிரை ஓர் ஆலமரத்தின் கீழ் இழுத்தோடிற்று.

அப்போது கள்வன், "இனி நாம் இக் குதிரைமீது சவாரிசெய்ய முடியாது" என்று, ஆலின் வீழைப்பற்றி மரத்தில் ஏறினான். அரக்கனோ கள்வனது விளாசலுக்கு அஞ்சி வேகமாக ஓட, அப்போது அவ் வாலமரத்தின்மேலிருந்த ஒரு குரங்கு, "ஏ, அரக்கா! நீயோ அரக்கன்; இவனோ மானிடன்; இவனுக்கு நீ அஞ்சி ஓடுகின்றனையே!" என்றது. அதைக்கேட்ட கள்வன் வெகுண்டு, குரங்கின் வாலைப் பிடித்து, "துஷ்ட மிருகமே! உனக்கு எவர் எப்படிப் போனாலென்ன? எனக்கா நீ தீங்குசெய்ய எண்ணுகிறாய்?" என்று அதை முறுக்கி வருத்த, அதைக் கண்ட அரக்கன் குரங்கு வஞ்சகமுள்ளது என்று அஞ்சிப் பின்னும் அதிகம் விரைந்தோடினான். தன்னைக் காட்டிலும் வலியனாகிய கள்வனை எதிர்த்த குரங்கு துன்புற்று மாண்டது.

## XXXVIII. பெண்வழிச் சேறல்

### 53. "மனைவிழைவார் மாண்பயன் எய்தார்"

நருமதை யாற்றங்கரையிற் பவானி யென்னும் ஓர் ஏழை வண்ணான் தன் கழுதை தீனி யில்லாமல் நாளுக்குநாள் இளைத்துப்போகிறதைக் குறித்து வியசனப்பட்டுக்கொண் டிருக்கையில், ஒருநாள் நினையாமற் கிடைத்த புலித்தோலைக் கொண்டுவந்து, களிப்புடனே இரவில் அக் கழுதைமேற் போர்த்து, ஊரார் பயிர்களில் மேய்வித்துக்கொண் டிருக்கும்போது, குடிகள் இதைப் புலி யென்று நினைத்து ஓடிப் போனார்கள்.

இப்படி யிருக்கையில், இப் பெருவாயன் மிகவும் பருத்து ஒருநாள் பயிரில் தானியத்தைத் தின்றுகொண் டிருக்கும்போது, ஒரு பெண் கழுதையின் கூச்சலைக் கேட்டுப் பெருங் கூச்சலிடத் தொடங்கிற்று. அப்போது அக்கொல்லைக்காரன், இது புலியன்றென்று நிச்சயித்து, அதைப் பிடித்து இடுப்பொடிய அடித்தான். பெண்பால் விழைவு வைத்த கர்த்தபம் இப்படித் துன்புற்றது.

### 54. "இல்லாள்கண் தாழ்ந்த இயல்பின்மை எஞ்ஞான்றும் நல்லாருள் நாணுத் தரும்"

பராக்கிரமசாலியான நந்தனராஜனென்பவன் துரைத்தனம் பண்ணிக்கொண் டிருக்கையில், அவன் மனையாட்டி, ஏதோ வொரு மொழியாற் பிணங்கிக்கொண்டு, அதைக் குறித்து அரசன் எவ்விதச் சமாதானஞ் செய்துங் கேளாமல், "நீ வாயிற் கடிவாளம் போட்டுக்கொண்டு உன் முதுகின்மேல் என்னைச் சுமந்தவனாய், குதிரைபோலக் கனைத்

தால் நான் உன் பேச்சிற்குச் செவி கொடுப்பேன்" என, நிருபன் அவள் பிரீதிக்காகச் சொன்னபடி செய்தான்.

அதைப் பிரதானியின் மனைவி கேள்வியுற்று அவளும் கோபமாய்த் தன் பதியுடனே பேசாமல் முறுக்காயிருக்க, அவ்வேளையில், முழுதும் அறிந்தவனாகிய வாருசியென்னும் மந்திரி தன் மனைவிக்கு எவ்வித ஆறுதல் சொல்லியும், அவள் உடன்படாமல், "நீ தலைமொட்டை யிட்டுக்கொண்டு என்னை வலசாரி இடசாரியாகச் சூழ வந்து, ஸாஷ்டாங்க நமஸ்காரம் பண்ணுவாயானால் உனக்கு நான் உட்படுவேன்" என, மந்திரி அவள் பிடிவாதத்துக்காக அங்ஙனஞ் செய்து, மறுநாளுதயத்திற் சபையில் வந்திருந்த அரசனிடம் போனான்.

அரசன் பிரதானியைப் பார்த்து, "நீ எதற்காக முண்டனம் பண்ணிக்கொண்டாய்?" என, மந்திரி, "மஹாராஜாவவர்கள் குதிரையைப்போலக் கனைத்தபடியினால் அடியேன் மழுங்க மொட்டையிட்டுக்கொண்டேன்" என்றான். இப்படி இருவர் பேச்சையுங் கேட்டுச் சனங்கள் நடந்த செய்தி யெல்லாம் அறிந்துகொண்டார்கள்.

### 55. "நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாட் பெட்டாங் கொழுகு பவர்"

தாரா நகரத்தில் குடும்பத்தோடுகூட இருந்த சத்தியவிரதனென்னும் வேதியன் தன் மனையாட்டி எல்லாரோடும் கலகம் பண்ணிக்கொண் டிருக்கையால், அவள்மே லிருக்கிற மோஹத்தினால் தன் தேயத்தைத் துறந்து அவளை அழைத்துக்கொண்டு தேசாந்தரம் போகையில், அவ்வழியிற் பார்ப்பனி, "நாயகா! எனக்கு மிகவுந் தாகமெடுக்கின்றது; எங்கிருந்தாயினுந் தண்ணீர் கொண்டுவா" என, அவன் அவளை அங்கேயே வைத்துவிட்டுத் தண்ணீர்க்குப் போய்வர, அவள்

அதற்குள் இறந்து பிணமாய்க் கிடக்கிறதைப் பார்த்து, மிக வும் புலம்பி வருத்தப்படுகையில், "உன் வயதிற் பாதி இவட் குக் கொடுத்தால், இவள் 'மீண்டு எழுந்திருப்பாள்'' என்று ஆகாசவாணி யுண்டாக, அதைக் கேட்டுப் பார்ப்பான் பவித் திரத்தோடே பாதி வயதை மூன்றுதரம் உச்சரித்துக் கொடுக்க, அதனுல் அவள் ஜீவித் தெழுந்து ஜலபானம் பண்ணினுள்.

பின்பு ஒரு பட்டணத்திற் போயிறங்கி, அந்தணன் செலவு வாங்கக் கடைக்குப் போனபோது, இங்கே ஒரு முடவன் நேர்த்தியாக ஸங்கீதம் பாட, அதைக் கேட்டு அவள் மோகித்து, அவனருகிற் போய், "சிநேகா! என்னை அங்கீகாரஞ்செய்; இல்லாவிட்டால் உனக்குப் பெண்கொலை வரும்'' என, அதைக்கேட்டு அவன், "இதோ 'முடவனுக் குக் கொம்புத்தேன் கிடைத்ததே'!'' என்று பொங்கி, அவள் கையைப் பிடித்துக்கொள்ள, அப்போது அவள், "இவ்வுடம்பை உனக்கு அர்ப்பணம் பண்ணினேன்; இனி நீ ஐயமில்லாமல் என்னுடனே கூட வா'' என, அப்படியே அம்முடவன் அவளண்டை உட்கார்ந்திருந்தான்.

இதற்குள்ளே கடைச் சரக்குகள் வாங்கிக்கொண்டு வந்த அந்தப் பிராமணனுக்குச் சமையல்பண்ணி இலை போட்டு, இம்முடவனுக்குங் கொஞ்சம் அன்னங் கொடுக்க வேண்டுமெனச் சொல்லி, அவ னுடன்பாட்டினுல் அம் முடத்துக்கு அன்னங்கொடுத்து இருவரும் சாப்பிட்டபிறகு, பார்ப்பனத்தி, "நாயகனே! நீர் என்னைத் தனியே விட்டுப் போம்போது எனக்குத் துணையில்லாமையால் இம்முடவன் எனக்குத் துணைக்கிருக்கட்டும்'' என்றுள்.

கேட்ட அந்தணன், "இம்முடவனை எப்படிக் கொண்டு போகலாம்?'' என, அவள், "நான் முதுகிற் கட்டிக்கொண்டு

வருவேன்'' என, "நல்லது" என்று, அவள் கபடத்தை நிஜ மென்றெண்ணி, அதற்கு உட்பட்டான். பின்பு அவள் அவனைப் புடைவையிற் சுற்றி, முதுகிற் கட்டிக்கொண்டு நடக்கையில், அவ்வழியிற் பிராமணன் இளைப்பாய்க் கிணற்றங் கரையில் படுத்துக் கண்ணயர்ந்ததைப் பார்த்து, அம்முடவனிடத்துள்ள ஆஸக்தியினாற் புருஷனைத் தாவில் உருட்டி விட்டு, சனி தொலைந்ததென்று, அம்முடவனை ஒரு பெட்டியில் வைத்து நோவாமல் எடுத்துக்கொண்டு தேசாந்தரம் போகையில், அங்கே சேவகர்கள், அவள் தலைமேற் பெட்டியிருக்கிறதைக் கண்டு, அவளைப் பெட்டித்தலையுடனே அரசன் சமுகத்திற் பிடித்துக் கொண்டுபோய் விட்டார்கள்.

அப்போது அரசன் பெட்டியைத் திறப்பித்துப் பார்த்து, அதில் முடவனைக்கண்டு, "இவன் யார்? என்ன செய்தி?'' என்று பார்ப்பனியைக் கேட்க, அவள், "இவர் என் பர்த்தா; இவர் நோயாளியா யிருக்கிறதினால் இப்படித் தலையிற் சுமந்துகொண்டு போகிறேன்'' என்றாள். அரசன் அதைக் கேட்டு, அவள் கற்புடைமைக்கு மகிழ்ந்து, இவள் நமக்கு உடன்பிறப்பென் றெண்ணி, அவளைத் தன்பால் நிறுத்திக் கொண்டான். இங்கிப்படியிருக்க, அங்கவ் வழியிற் போன வழிப்போக்க னொருவன் தாகத்துக்குக் கிணற்றினுள் இறங்கினபோது, விழுந்து கிடக்கிறவனைப் பார்த் திரங்கி, எடுத்து வெளியே விட்டுப் போக, இவன் அங்கே பங்குவையும் மனைவியையுங் காணாது, அங்கங்கே தேடிக்கொண்டு, அந் நகரத்தினுள்ளே போனான்.

இவன் வருவதை அவ் வியபிசாரி பார்த்தவளவில், வேந்தனுடனே, "இதோ வருகிற இச்சண்டாளன் என் பதிக்கு விரோதி'' என்று முறையிட, அவ்வேந்தன், "இவனைப் பிடித்துக் காவலில் வையுங்கள்'' எனச் சேவகர்கட்கு

உத்தரவு செய்தான். அவர்கள் அப்படியே செய்யத் தொடங்குகையில், அவன் இறைவனைப் பார்த்து, "ஓ அரச சிகாமணியே! நீர் தருமகுணமுள்ளவரா யிருக்கின்றீர்; ஆக லான் தேற விசாரியும்" என்று தன் குறைகளை யெல்லாஞ் சொன்னான். அரசன் அதைக் கேட்டு ஒரு பஞ்சாயத்து நியமித்து, அவர்களால், "இப் பார்ப்பான் குற்றவாளி யல்லன்; அவளே துஷ்டை" என்றறிந்து, அவட்குத் தக்க தண்டனை செய்து வேதியனைச் சமாதானம் பண்ணினான்.

## 56. "அறவினையும் ஆன்ற பொருளும் பிறவினையும் பெண்ணேவல் செய்வார்க ணில்"

நாராயண நகரத்தில் மந்தரன் என்னும் தந்துவாயன் (சேணியன்) பலவகைப்பட்ட வஸ்திரங்களை நெய்து, வரும் லாபத்தைக்கொண்டு தன் மனையாளோடு உண்டுடுத்துக் காலந்தள்ளி வருகையில், அவன் தறி முறிந்தமையால் மா மொன்று வேண்டிக் காட்டிற் சென்று, ஒவ்வொன்றாய்ப் பார்த்துக்கொண்டு திரிகையில், ஒரு பெரிய வாகைமரத் தைப் பார்த்து, வெட்டத் தொடங்குகையில் அதன்மே லிருந்த ஒரு யக்ஷன், "அடா, சாலியா! இம்மரம் எனக்கு வீடாக இருக்கிறது. இதை வெட்டாதே; நீ விரும்பிய தைத தருவேன்" என்றது.

சேணியன், "நான் வீட்டிற்குப் போய் எனக்கு வேண்டியவர்களோடு ஆலோசனை பண்ணிக்கொண்டு வந்து கேட்கிறேன்" என்று சொல்லிப்போய்த் திரும்பி வருகை யில், தனது தோழனான ஓரம்பட்டனைக் கண்டு, நடந்த விஷயங்களைச் சொன்னான். அவன், "நீ ஓரிராச்சியங் கேளு; அதற்கு நீ ராஜாவா யிருக்கலாம். நான் மந்திரியா யிருக்கிறேன்" என்றான்.

அதைக் கேட்டுக்கொண்டு அவன் வீட்டிற்கு வந்து, தன் மனைவிக்கு எல்லாம் உரைப்ப, அவள், "ஓ ஓ! ராஜ்ய பாரம் வகிப்பது வெகு கஷ்டம். அது கேட்கத் தகுந்த தன்று. நீ வேறொரு முகமும் பின்னும் இரண்டு கைகளும் கேட்பையாயின், ஒரு நாளைக்கு ஒன்றுக் கிரண்டாக வஸ்திரம் நெய்யலாம். அதனால் நமக்கு முட்டுப்பா டில்லாமற் காலக்ஷேபம் நடக்கும்" என்றாள்.

அப் பேதைச் சாலியன் பெண் புத்தியை மேற்கொண்டு போய், யக்ஷனைக் கேட்க, அவன் அங்ஙனமே தந்தமையால், மகிழ்வுடன் ஊர் திரும்புகையில், ஜனங்கள் இவனது விபரீத உருவினைக் கண்டு,இராக்கதன் என்றையுற்றுத் தலையாலொரு கல்லெறிந்து கொன்றனர். ஸ்த்ரீ புத்தி கேட்ட ஏழைச் சேணியன் யமனுக் கிரையாயினான்.

## XXXIX. பெருமை

**57.** "சிறுமை, அணியுமாம் தன்னைவியந்து"
"அற்றம் மறைக்கும் பெருமை"

ஒரு வனத்திற் பொட்டைச் சிங்கத்தோடு கூடியிருந்த சிங்கத்துக்கு இரண்டு குட்டிகள் உண்டான வுடனே, பல விலங்குகளைக் கொன்று தன் பெண்சிங்கத்தின் கையிற் கொடுத்து, அதைப் பார்த்து, "இப்பிள்ளைக்கு வினைத் தெரி கிறவரைக்கும் இவர்களை நம்பித் தனியே விட்டிராதே" என்று பத்திரஞ் சொல்லி, நித்தியங் தான்மாத்திரம் போய், மிருகங்களைக் கொன்று கொண்டுவந்து, கொடுத்துக்கொண்டிருக்கையில், ஒருநாள் அதற்கு ஒன்றுங் கிடையாமல் திரும்பி வீட்டுக்கு வரும்போது, வழியிற் கையிலகப்பட்ட ஒரு நரிக்குட்டியை அடியாமற் பிடித்துப் பெட்டையண்டை கொண்டுவந்து, "இன்றைக்கு இதைவிட வேறொன்றுங் கிடைக்கவில்லை" என்றது.

அப்பெட்டை அக்குட்டி மிகவுஞ் சிறிதா யிருக்கின்றதைப் பார்த்துத் தன் குழந்தைகளி லொன்றாய்க் காப்பாற்றிக்கொண்டு வருகையில், அம்மூன்றும் பெரியனவாய், ஒரு நாள் காட்டுக்குப் போனபோது, அங்கு ஒரு யானையைக் கண்டு, இதன் கிட்டப் போகலாகாதென்று சொல்லிவிட்டு நரிக்குட்டி வீட்டுக்கு ஓடிப்போயிற்று. மற்றிரண்டும் அதைப் பார்த்து, அதன் பின்னே வீட்டுக்கு வந்து, தம் தாயுடனே அந்நரியின் காரியத்தைச் சொல்ல, நரிக்குட்டி அதைக் கேட்டு மிகவுங் கோபித்து, "நான் இவர்களிலும் சௌரியத்திற் குறைந்தவனா ? இவர்கள் என்னைப் பழித்து நகைப்பானேன்? 'கூழ்க்கு மாங்காய் தோற்குமா ?' நான் இவர்களைத் தண்டித்து, என் பராக்கிரமத்தைக் காட்டுவேன். 'கொட்டினால் தேள், கொட்டாவிட்டாற் பிள்ளைப் பூச்சியா?' " என்றது.

அதைக் கேட்டுப் பெண்சிங்கம் நரியை ஏகாந்தமாய் ஓரிடத்திற் கொண்டுபோய், "நீ நரிக்குட்டி; உன் குலத்தில் யானையைக் கொல்லுகிற சக்தி யில்லை; உன்னை நான் என் பால் கொடுத்து வளர்த்தமையால், இந்தப் பராக்கிரமஞ் சொல்லிக்கொள்ளுகிறாய்; அவர்கள் இனி உன்னை இன்னானென்று அறிகிறதற்கு முன்னே நீ புறப்பட்டு ஓடிப்போ; இல்லாவிட்டால், அவர்கள் கையில் அடியுண்டு இறந்து போவாய்" என்றது. அதைக் கேள்வியுற்றவுடனே, சம்புகம் ஓடிப்போயிற்று.

## XL. கயமை

### 58. " கரும்புபோல், கோல்லப் பயன்படும் கீழ் "

ஒரு பட்டணத்தில் தேவதத்த னென்னும் ஒரு சாவகாரி தான் திரவிய ஹீனனாய்ப் போனதனால், மறுபடி திரவியம் சம்பாதிக்க நினைத்துத் தேசாந்தரம் போகப் புறப்

படும்போது, தன் வசத்திலிருந்த ஆயிரம் இருப்புக் கம்பிகளையும் அவ்விடத்திருந்த தன் சிநேகிதனிடத்தில் வைத்துவிட்டுப் போனான்; போன விடத்தில் திரவிய சம்பாத்தியத்தைக் குறித்து அநேக வுபாயம் பண்ணியும், பணம் அகப்படாமையால், மீண்டும் வீட்டுக்கு வந்து, தன்னுடைய இருப்புக் கம்பிகளைக் கேட்டான்.

வைத்துக்கொண்ட சிநேகிதன், மிகுந்த துராசையினால், "இருப்புக் கம்பிகளை எலிகள் தின்றுவிட்டன" என்றான். இவன் இந்த அபூர்வத்தைக் கேட்டு, "நல்லது, இருக்கட்டும்" என்று சொல்லி வீட்டுக்குப் போனான்; பிறகு ஒருநாள், சிநேகிதன் பிள்ளையை விளையாடுகிறதற்காக அவனிடத்திலிருந்து எடுத்துக்கொண்டு போய், மற்றொரு வீட்டில் ஒளித்துவைத்து, பின்பு சிநேகிதனிடத்தில் வந்து உட்கார்ந்தான். அவன், "உன்னிடத்திலிருந்த என் பிள்ளை எங்கே?" என, சாவகாரி, "உன் பிள்ளையைப் பறவை தூக்கிக்கொண்டு போயிற்று" என்றான்.

இதை அவன் கேட்டு மிகவுங் கிலேசப்பட்டு, அவனை இழுத்துக்கொண்டு ஊரதிகாரியண்டை போய், "இந்தத் துஷ்டன் என் பிள்ளையைக் கொண்டுபோய் ஒளித்துவைத்துவிட்டு, 'பிள்ளையைப் பக்ஷி யெடுத்துக்கொண்டு போயிற்று' என்கிறான்; ஆகையால், என் பிள்ளையை எனக்குக் கொடுப்பிக்க வேண்டும்" என்றான். அதிகாரி இதைக் கேட்டுச் சாவகாரியை அழைத்து, "இவன் பிள்ளை எங்கேயிருக்கிறது? சொல்" என, அவன், "இவன் பிள்ளையைப் பக்ஷி கொண்டுபோயிற்று" என்றான்.

அதிகாரி இதைக் கேட்டுக் குலுங்க நகைத்து, "இந்த அஸம்பவம் இதுவரைக்கும் உலகத்தில் இல்லை; அப்படியிருக்க, நீ எப்படிச் சொல்லுகிறாய்?" என்றான். அப்

போது அவன், "இஃது ஓர் ஆச்சரியமா? எப்படி இருப்புக் கம்பிகளை எலிகள் தின்றனவோ, அப்படியே இதுவும் சம்ப வித்தது ஆண்டவனே!" என்றான்.

இதைக் கேட்டு நியாயாதிபதி முன் நடந்தவைகளை விசாரித்து அறிந்துகொண்டு, வாதியை நோக்கி, "அவனு டைய இருப்புக் கம்பிகளை நீ கொண்டுவந்து கொடுத்தால், அவன் உன் பிள்ளையைக் கொண்டுவந்து கொடுப்பான்" என்றவுடனே, அவ்விருவரும் அப்படியே செய்து, தங்கள் வீட்டுக்குப் போனார்கள்.

**59.** " உடுப்பதூஉம் உண்பதூஉம் காணிற் பிறர்மேல்
வடுக்காண வற்றாகும் கீழ் "

ஒரு காட்டில் மதோற்கட னென்கிற ஒரு சிங்கம் நரி யையும் புலியையுங் காக்கையையுந் தனக்கு மந்திரிகளாக வைத்துக்கொண்டு அரசாளுகிற நாளில், ஒருநாள் அந்தக் காட்டில் ஒட்டகமொன்று வழிதப்பி வரக்கண்டு, மந்திரி யாகிய காக்கை, "நீ யார்?" என்று கேட்க, அது, "நான் ஒட்டகம், வழிதப்பி வந்துவிட்டேன்" என்று சொல்லிற்று. காக்கை அதை அழைத்துக்கொண்டு போய்ச் சிங்கத்தி னிடத்தில் விட்டு, நடந்த காரியத்தைச் சொல்ல, அதை அந்தச் சிங்கம் கேட்டு, ஒட்டகத்தைப் பார்த்து, "பயப் படாதே; நம்முடைய மந்திரிகளுடனே நீயு மொரு மந்திரியா யிரு" என்று அதற்கு அபயங்கொடுத்து, மந்தானக னென்று பெயரிட்டு, அதைத் தன்னிடத்தில் வைத்துக் கொண்டது.

இப்படி வெகு காலஞ் செல்லுகையில், ஒரு நாள் சிங் கத்துக்குச் சரீரம் அசக்தமா யிருந்தபடியினால், அது தனது மூன்று மந்திரிகளையும் அழைப்பித்து, "இன்றைக்கு என் னால் இரை சம்பாதிக்கக் கூடாது; ஆகையால், நீங்கள்

போய், எனக்கு ஏதாவது இரை கொண்டுவர வேண்டும்; பிறகு நான் தின்றுமிகுந்ததை நீங்கள் தின்னலாம்'' என்றது.

இம் மூன்றுஞ் சிங்கத்தின் கட்டளைப்படி அந்தக் காட்டிற் போய் இரை தேடிப்பார்த்து அகப்படாமையால், அவற்றிற் காகம் அப்போது தங்களோடு கூடவிருந்த மந்தானகனைத் தூரத்திற் போகும்படி ஒரு வேலையிட்டு, மற்றையிருவரையும் பார்த்து, "இன்றைக்கு நாம் மந்தானகனைக் கொல்லுவோம்: புல்லுந் தழையுந் தின்னுகிறவனால் நமக்குப் பிரயோஜன மென்ன?'' என்றது. மற்றிரண்டும், "சரிதான்; அவனுக்கு நம்முடைய ராஜா அபயங் கொடுத்திருக்கிறதனால், அவனை நாம் எப்படிக் கொல்லலாம்? கூடாது'' என்றன.

காகம், " ஆனால் நாம் இன்றைக்குச் சிங்கத்தின் கையால் தப்பாமல் மரணமடைவோம்; பசி யெடுத்தால் தாயும் பிள்ளையை விட்டுவிடுகிறாள்; பாம்பு தான் இட்ட முட்டைகளைக் குடிக்கிறது; ஆகையால், பசியாற் பீடிக்கப்படுகிறவன் எந்தப் பாதகந்தான் பண்ணமாட்டான்? இஃது உங்களுக்குத் தெரியவில்லையா?'' என்று சொல்லி, உடனே சிங்கத்தண்டைபோய், "சுவாமி! இன்றைக்கு எதுவுங் கிடைக்கவில்லை'' என்றது. ஆனால், " இதற்கு என்ன உபாயம் பண்ணலாம் ? '' என்று சிங்கங் கேட்க, காகம், " தங்கள் சுவாதீனத்தில் இரை யிருக்கையில், வேறே ஆலோசிப்பானேன் ? வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய் தேடலாமா ?'' என்றது.

சிங்கம், "என்னிடத்து ஆஹாரம் எங்கே யிருக்கிறது?'' என, காகம், "மந்தானக னென்னும் ஒட்டை யிருக்கின்றதே'' என்றது. இதைக் கேட்டுச் சிங்கம் பூமியைக் கையால் தொட்டு, "சிவ! சிவ!!'' எனக் காதின்மேற்

கையை வைத்து, "நான் அவனுக்கு அபயங் கொடுத்திருக்கையில், நீங்கள் இப்படி விபரீத வார்த்தை சொல்லலாமா? அடைக்கலம் புகுந்தவர்களைக் கைவிடலாமா? பசு, பூமி, தானியம் இவற்றின் தானத்தைக் காட்டிலும் அபயதானம் அதிகம்; அசுவமேத புண்ணியத்தைக் காட்டிலும் இந்தப் புண்ணியம் அதிக மென்று சாஸ்திரமும் இருக்கிறதே" என்றது.



ஸ்ரீ:

# செய்யுட் குறிப்புரை

[காப்பு] 'மாமேவு...பணிந்து' என்னும் பாட்டு.

மா- லக்ஷ்மீ, ஒண் பஞ்சதந்திரம்- புகழ்பெற்ற பஞ்சதந்திரம், வண்கதை-சொல்நயம் பொருள்நய முதலியன அமைந்த கதை, கோமேவு- மேன்மைபொருந்திய, முப்பால்-திருக்குறள், பூமேவு- தாமரைப் பூக்கள் நிறைந்த, அம் கயத்து-அழகிய தடாகத்திலுள்ள, வேழம்-யானை (கஜேந்திரன்), பங்கயத்து மான்-திருமகள், தாள்- திருவடி.

## I. இல் வாழ்க்கை—கற்புடைய மனையாளோடுகூடித் தர்மவழி பற்றி வாழ்தலின் சிறப்பு.

### 1. 'வையத்துள்......படும்'

வாழ்வாங்கு வையத்துள் வாழ்பவன் - மனையாளோடு கூடி வாழும் இல்லற இயல்புப்படி உலகில் வாழ்பவன்; வான் உறையும் தெய்வத்துள் வைக்கப்படும். (இப்பொழுது இவ்வுலகத்துள் ஒருவனே எனினும்) ஸ்வர்க்கத்தின்கண் வாழும் தெய்வத்துள் ஒருவனாக நன்கு மதித்து எண்ணப்படுவான்; மறுமையில் அவனுக்கு ஸ்வர்க்கவாஸமுண்டு என்பதாம்.

## II. அடக்கமுடைமை—பேச்சினாலேயும் மனம்மெய்களினாலேயும் அடங்குதல் உடையனாதல்.

### 2. 'யாகாவா......பட்டு'

யா காவாராயினும் நா காக்க - ஒருவர் தம்மால் காக்கப்படுவனவாகிய ஸகலத்தையும் ரக்ஷிக்கமாட்டாராயினும், நாவை மாத்திரமேனும் காக்கக் கடவர்; காவாக்கால் சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு-அப்படிக் காவாமல் விட்டு விடுவாராயின், சொற் குற்றப்படுவதினாலே தாமே துன்புறுவர்.

III. புறங்கூறாமை—காணாதவழிப் பிறரை இகழ்ந்து சொல்லாமை.

3. 'பகச்சொல்லி..........தவர்'

நகச்சொல்லி நட்பாடல் தேற்றாதவர்-ஒன்று கூடி மகிழ்ந்து வாழும்படி சொல்லவேண்டுவனவற்றை எல்லாம் சொல்லி அயலாரோடு ஸ்நேகித்தலை அறியாத கோட்சொல்லிகள், பகச்சொல்லிக் கேளிர் பிரிப்பர்- உறவா யிருக்கிறவர்களையும் பகைத்து நீங்கும்படி தீச்சொற்களைச் சொல்லிப் பிரியப்பண்ணுவர்.

IV. தீவினையச்சம் — பாவங்களாயினவற்றைச் செய்தற்கு அஞ்சுதல்.

4. 'தீயவை.......தற்று'

தியவை செய்தார் கெடுதல்- பாவங்களாயினவற்றைச் செய்தவர் தாமே கெடுதல் எதுபோல நிச்சயம் எனின், நிழல் தன்னை வீயாது அடி உறைந்தற்று - ஒருவனுடைய நிழல் அவன் நெடுந்தூரம் போனாலும் அவனை விடாது வந்து அடியின்கண் தங்கியிருக்கும் தன்மை போலவாம். அஃதாவது அவர் தமக்கு வரும் கேட்டை விலக்கொணாது என்பதாம்.

V. கூடா ஒழுக்கம் பக்கம் 18—ஒருவர்க்கு முற்றிலும் பொருந்தாத தீய ஒழுக்கம். அஃதாவது தகாத கெட்ட நடக்கை இங்கே கூடா நட்பு என்பதை கூடா ஒழுக்கம் என்று திருத்திப் படித்து 'படிற்றொழுக்கம் எற்றெற்றென் றேதம் பலவும் தரும்' என்ற குறளை இக் கதைக்கு நீதியாகக் கொள்க.

5. 'படிற்றொழுக்கம்.......தரும்'

படிறு ஒழுக்கம் - ஒருவர் மறைந்து ஒழுகும் தீய ஒழுக்கமானது, எற்று எற்று என்று ஏதம் பலவும் தரும் - அப்பொழுது இனிதுபோலத் தோன்றுமாயினும், பின்பு, “ஐயோ! என்ன காரியம் செய்தோம்! என்ன காரியம் செய்தோம்!” என்று தாமே பச்சாத்தாபம் கொள்ளும்படி அவர்க்குப் பல துன்பங்களையும் கொடுக்கும்.

VI. கள்ளாமை—பிறரது உடைமையாய் இருக்கிற எதையும் அவரை வஞ்சித்துக் கொள்ளக் கருதாமை.

6. 'களவின்கண்...... ...தரும்'

களவின்கண் கன்றிய காதல் - பிறர் பொருளை வஞ்சித்துக் கொள்ளுவதிலே உண்டாகிய மிக்க ஆசை, விளைவின் கண் வீயா விழுமம் தரும் - அப்பொழுது இனிதுபோலத் தோன்றினும், பிறகு அது பயன் கொடுக்கும்போது நீங்காத துன்பத்தைத் தரும்.

VII. மெய்யுணர்தல்—ஒரு பொருளை விபரீத ஸந்தேகங்களில்லாமல் உண்மையாக அறிதல்.

7. 'இருள்நீங்கி.........யவர்க்கு'

மருள் நீங்கி மாசு அறு காட்சியவர்க்கு - ஸந்தேகம் ஒழிந்து மெய்யுணர்வை உடையவர்க்கு; இருள் நீங்கி இன்பம் பயக்கும் - அம் மெய்யுணர்வு துன்பத்தை நீக்கி இன்பம் கொடுக்கும்.

8. 'ஐயுணர்வு........தவர்க்கு'

மெய்யுணர்வு இல்லாதவர்க்கு-பலவகையாக மயங்குதல் இல்லாமல் உண்மை இது என்றறியும் சக்தியில்லாதவர்க்கு, ஐயுணர்வு எய்தியக்கண்ணும் பயம் இன்று - பஞ்சேந்திரியங்களும் தம் வசமான வழியும் அதனால் பயனில்லை.

9. 'காமம்..........நோய்'

காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன் நாமம் கெட - ஆசையும், வெறுப்பும் ஒன்றை மற்றொன்றாகக் கருதும் மயக்கமும் என்னும் இக்குற்றங்கள் மூன்றின் பெயர்கூடக் கெடுமாயின், நோய் கெடும்-ஆபத்துக்கள் நீங்கும். (பாட்டிலுள்ள 'நொய்' என்பதை 'நோய்' என்று திருத்திப் படிக்க.)

VIII. அவாவறுத்தல்—துராசையை விட்டொழித்தல்.

10. 'வேண்டாமை.........இல்லை'

வேண்டாமை அன்ன விழு செல்வம் ஈண்டு இல்லை - ஒரு பொருளையும் இச்சிக்காததை ஒக்கும் பெருத்த செல்வமானது இவ்வுலகத்தில் இல்லை.

11. 'ஒருவனை........அவா'

ஒருவனை வஞ்சிப்பது அவா-ஒருவனை வஞ்சித்துக் கெடுக்க வல்லது ஆசையாம் (ஓரும்-அசை).

IX. ஊழ்—புண்ணிய பாவமென்ற இரண்டு வினைப்பயனும் செய்தவனையே சென்று அடைதற்கு ஏதுவாகிய நியதி அல்லது முறை.

12. 'தீயவும்.......ஆம்'

தீயவும் நல்ல ஆம் - தீயவைகளுங்கூட நல்லவைகளாகும் விதிவசத்தால்.

X. கல்லாமை—படியா திருத்தல்.

13. 'கல்லாதவரும்........பெறின்'

கல்லாதவரும் நனி நல்லர் - படிப்பில்லாத மடையரைக்கூட ஒரு சமயம் மிக்க நல்லவர் எனலாம்; எப்பொழுதெனில், கற்றார் முன் சொல்லாது இருக்கப்பெறின் -கற்ற அறிவுடையார் முன்னே தமது உளறல் ஒன்றையும் சொல்லாதிருக்க அவருக்குக் கூடுமானல் அக்காலத்திலே. அதாவது மூடர்கள் தமது பேச்சாலேயே தமது மடமையை வெளிப்படுத்தி விடுவர் என்பதாம்.

XI. அறிவுடைமை—கல்வி கேள்விகளினுலாகிய அறிவோடு இயற்கை யறிவுமுடையனு யிருத்தல்.

14. 'அறிவுடையார்......அறிவார்'

அறிவு உடையார் ஆவது அறிவார் - புத்தியுடையவர்கள் பின்னுலே வரக் கடவதனை முன்னுலேயே அறிந்து, செய்யத்தக்கனவற்றைச் செய்வர்.

15. 'எதிரதா.......நோய்'

எதிரதா காக்கும் அறிவினர்க்கு - வரக்கடவதாகியவற்றை முன்னுலே அறிந்து காக்கவல்ல புத்தியுடையவருக்கு, அதிரவருவது ஓர் நோய் இல்லை - அவர் நடுங்கும்படியாக வரத்தக்க ஒரு துன்பமும் இல்லை.

XII. குற்றங்கடிதல்—மதம் அல்லது செருக்கு முதலாகிய குற்றங்களைத் தன்னிடத்து உண்டாகாமல் காத்தல்.

16. 'வருமுன்னர்......கெடும்'

வரும் முன்னர் காவாதான் வாழ்க்கை - ஆபத்துவரும் முன்னமே அது வாராதவாறு காக்காதவனுடைய வாழ்க்கையானது, எரி முன்னர் வை தூறுபோல கெடும் - அக்கினி முகத்து நின்ற வைக்கோற் குவைபோல நாசத்தை அடையும்.

17. 'நயவற்க......வினை'

நயவற்க நன்றி பயவா வினை-தனக்கு நன்மை பயக்காத காரியத்தைச் செய்வதற்கு மனத்தாலும் விரும்பாதிருக்கக் கடவன்.

XIII. பெரியாரைத் துணைக்கோடல்—ஒருவன் தன்னைத் துன்மார்க்கத்தினின்றும் விலக்கி நல்ல வழியிற் செலுத்தும் பேரறிவுடையாரைத் துணையாகக் கொள்ளுதல்.

18. 'தம்மிற்......தலை'

தம்மில் பெரியார் தமரா ஒழுகுதல் - அறிவு முதலியவற்றால் தம்மைக் காட்டிலும் விசேஷித்தவர் தமக்கு வழி காட்டியாக அவர் வழி ஒழுகுதல், வன்மையுள் எல்லாம் தலை-எல்லா பலத்தைக் காட்டிலும் சிறந்த பலமாம்.

19. 'தக்கார்.......இல்'

தக்கார் இனத்தனாய் தான் ஒழுக வல்லானை-அறிவு முதலியவற்றால் தக்க யோக்யதை யுடையவர்களது பந்துவாயும் தானும் அறிவோடு கூடியவனாயும் ஒழுக வல்லானை, செற்றார் செயக்கிடந்தது இல்-பகைவர் செய்யக் கடவதாகியது ஒன்றுமில்லை.

XIV. சிற்றினம் சேராமை—நல்லவற்றின் நன்மையையும் தீயவற்றின் தீமையையும் அறியாத கீழ்மக்களது கூட்டத்தைப் பொருந்தாமை.

20. 'தீயினத்தின்.......இல்'

தீ இனத்தின் அல்லல் படுப்பதும் இல் - தீய கீழ்மக்களது சேர்க்கையைவிடத் துன்பத்திற் குள்ளாக்குவது இல்லை.

XV. தெரிந்து செயல்வகை—ஒருவன் தான் செய்யும் வினைகளைப் பெரியாரைத் துணைக்கொண்டும் தானும் ஆராய்ந்தும் செய்யும் வகை.

21. 'தெரிந்த........இல்'

தெரிந்த இனத்தோடு தேர்ந்து எண்ணி செய்வார்க்கு - அறிவுடைய நண்பரோடு இது செய்யத்தகும் என்று ஆராய்ந்து, பிறகு தாமும் எண்ணிச் செய்யவல்ல புத்தி யுடையார்க்கு, அரும்பொருள் யாதொன்றும் இல் - சித்தியாகாத அரிய காரியம் ஒன்றுமில்லை.

22. 'எண்ணித்........கருமம்'

கருமம் எண்ணி துணிக-செய்யத்தக்க காரியமும் முடிக்கும் உபாயத்தை எண்ணித் தொடங்குக.

XVI. வலியறிதல்—"வினைவலியும் தன் வலியும் மாற்றான் வலியும், துணைவலியும் தூக்கிச் செயல்" அதாவது தான் செய்யக் கருதிய காரியத்தின் பலத்தையும், தன்னுடைய பலத்தையும், தனது காரியத்திற்கு விக்கினம் செய்ய வரும் பகைவன் பலத்தையும், தனக்கும் தனது பகைவனுக்கும் துணையாவார் பலத்தையும் சீர்தூக்கி அறிதல்.

23. 'வினைவலியும்.........செயல்'

கீழே சொன்னோம்.

XVII. காலமறிதல்—ஒருவன் தன் பகைவனைவிடத் தான் வலியால் மிக்கவனாயினும், அவ்விளைத்த பகைவன்மேல் செல்லற்கு ஏற்ற காலத்தை அறிதல்.

24. 'ஊக்கம்.........தகைத்து'

ஊக்கம் உடையான் ஒடுக்கம்-வலி மிகுதியுடைய ஒருவன் பகைவர் மேல்செல்லாமல் காலம் பார்த்திருக்கின்ற இருப்பு, பொருதகர் தாக்கற்கு பேரும் தகைத்து- யுத்தம் செய்கின்ற ஆட்டுக்கடா தன் விரோதியான கடா கெடும்படிப் பாய்தற் பொருட்டுப் பின்னே கால்வாங்கும் தன்மை போலவாம்.

25. 'செறுநரை தலை'

செறுநரைக் காணின் சுமக்க—பகைவரை வெல்லக் கருதியிருக்கிற ஒருவன் அப்பகைவருக்கு முடிவுகாலம் வருமளவும் அவரைக் கண்டால் பணிக; இறுவரை காணின் தலை கிழக்காம்-அப்ப

டிப் பணிந்து வந்தால் முடிவுகாலம் வந்தபோது அப்பகைவாது தலை தானே கீழாக, அவர் கெடுவர்.

XVIII. இடனறிதல்—தான் எந்த இடத்தில் போனால் க்ஷேமத்தை அடையலாமோ, அந்த இடத்தை அறிதல்.

26. 'தொடங்கற்க........லது'

முற்றும் இடம் கண்டபின் அல்லது - காரியம் முடிவு பெறுதற்கு ஏற்ற இடத்தைப் பெற்றபின் அல்லாமல்; எவ்வினையும் தொடங்கற்க - யாதொரு காரியத்தையும் தொடங்காதொழிக; எள்ளற்க - காரியம் அற்பந்தானே என்று அலக்ஷியம் செய்யாதொழிக.

XIX. தெரிந்து தெளிதல்— பிறாது பிறப்பு, குணம், அறிவு என்பவற்றையும் நடத்தையையும் ஆராய்ந்து தெளிதல்.

27. 'தேரான்......தரும்'

பிறனைத்தேரான் தெளிந்தான் - தன் குணத்தோடும் நடத்தையோடும் ஒவ்வாத ஒருவனை ஆராயாமல் சேர்த்துக் கொண்ட ஒருவனுக்கு, வழிமுறை தீரா இடும்பை தரும் - அச்செயல் அவனுக்கே அன்றி அவன் ஸந்ததிக்கும் நீங்காத் துன்பத்தைக் கொடுக்கும்.

XX. செங்கோன்மை—அரசனாலே செய்யப்படும் நீதி முறையின் தன்மை.

28. 'எண்பதத்தா........கெடும்'

எண்பதத்தான்-காணச் செல்வோர்க்கு எளிதான சமயத்தையுடையவனாகி, ஓரா-செய்யத்தக்க காரியங்களை ஆராய்ந்து, முறை செய்யா மன்னவன் - முறை செய்யாத ராஜன், தண்பதத்தால் தானே கெடும்- தாழ்ந்த பதவியிலே இருந்து கெட்டுப்போவான்.

XXI. மடியின்மை—கருதிச் செய்யும் காரியத்தில் சோம்பவில்லா திருத்தல்.

29. 'இடிபுரிந்......லவர்'

மடிபுரிந்து மாண்ட உஞற்றிலவர் - சோம்பலை விரும்புதலால் நல்ல முயற்சியில்லாத சோம்பேறிகள், இடிபுரிந்து எள்ளும் சொல் கேட்பர் - பலராலும் கண்டிக்கப்பட்டு, இகழ்ந்து சொல்லும் சொல்லையும் கேட்பர்.

XXII. ஆள்வினை யுடைமை—இடைவிடாத சரீர முயற்சியை உடையனுதல்.

30. 'பொறியின்மை......பழி'

பொறியின்மை யார்க்கும் பழி அன்று-பயனைத் தருவதாகிய நல்ல அதிருஷ்டம் ஒருவனுக்கு இல்லாமையானது பழியாகாது, அறிவு அறிந்து ஆள்வினை இன்மை பழி-அறிய வேண்டியவற்றை அறிந்தும் முயற்சி யில்லாதிருக்கும் சோம்பலே ஒருவர்க்குப் பழியாகும்.

XXIII. இடுக்கண் அழியாமை — ஒருவருக்கு ஆபத்து வருங் காலத்து மனங் கலங்கா திருத்தல்.

31. 'இலக்கம்........மேல்'

உடம்பு இடும்பைக்கு இலக்கம் என்று-இந்தச் சரீரம் துன்பத் திற்கு லக்ஷியம் என்று தெளிந்து (சரீரத்துக்குத் துன்பம் வருதல் ஸகஜம் என்று); கலக்கத்தைக் கையாருக் கொள்ளாதாம் மேல்-தமக்கு தவந் துன்பங்களைத் துன்பமாகக் கொள்ளார் அறிவுடையார்.

XXIV. அமைச்சு — மந்திரியினது குணங்களையும் செயல்களையும் பற்றிக் கூறுவது.

32. 'தெரிதலும்.......அமைச்சு'

தெரிதலும்-ஒரு காரியத்தை செய்யலாம் கூடாது என்பதை அறிதலும், தேர்ந்து செயலும்-காரியத்தைச் செய்யும்போது அது வாய்க்கும் வகையை யறிந்து செயலும், ஒருதலையாச் சொல்லலும்-சிலரைப் பிரித்தல் சேர்த்தல்களின்கண் அரசனுக்கு இதுவே செய் யத்தக்கது, இதுசெய்யத் தகாதது என்று துணிவு பிறக்கும்படி சொல்லுதலும்; வல்லது அமைச்சு - வல்லவனே மந்திரி ஆவான்.

XXV. சொல்வன்மை — தான் கருதிய காரியம் முடியும்படி யாய் சாதுர்யமான சொற்களைச் சொல்லுதல்.

33. 'ஆக்கமும்... ...சோர்வு'

ஆக்கமும் கேடும் அதனுல் வருதலால்-ஒருவனுச்குச் செல்வ மும் கேடும் தனது சொல்லின் நன்மை தீமைகளால் வருதலால்

சொல்லின் கண் சோர்வு காத்தோம்பல்-அப்படிப்பட்ட சொல்லின் கண்ணே குற்றம் உண்டாகாதபடி அவன் காப்பானாக.

XXVI. வினைத்தூய்மை — ஒருவன் தான் செய்யும் காரியம் தனக்குப் பொருள் ஈதலே அன்றி புகழும் தரும்படி நல்லதாயிருத்தல்.

34. 'என்றும்.........வினை'

புகழொடு நன்றி பயவா வினை-புகழும் பொருளும் தாராத காரியத்தை, என்றும் ஒருவுதல் வேண்டும்-எக்காலத்தும் ஒழித்தல் வேண்டும்.

35. 'எற்றென்........செய்யற்க'

எற்று என்று இரங்குவ செய்யற்க-"யான் செய்தது என்ன மூடதனம்!" என்று தானே வருந்தும்படி ஒருவன் செய்யா தொழிக.

XXVII. தூது — ஸந்தி விக்ரகங்கட்கு வேற்று வேந்தரிடம் செல்வாரது இயல்பு.

36. 'கற்றுக்கண்........தூது'

கற்று-நீதி நூல்களைக் கற்றும், செலசொல்லி-தான் வந்த காரியத்தைப் பகைவேந்தர் மனங்கொள சொல்லியும், கண் அஞ்சான்-அவர் கோபித்து நோக்கினால் அந்தப்பார்வைக்காக அஞ்சாமலும் இருந்து, காலத்தால் தக்கது அறிவது தூதாம்- நல்லஸமயம் பார்த்திருந்து அக்காரியம் முடிக்கத்தக்க உபாயம்அறிவானே தூதனாவான்.

XXVIII. அவை அறிதல் — ஒரு காரியம் சொல்லும்போது இன்னதன்மையாளர்க்குச் சொல்லலாம் என்பதை அறிதல்.

37. 'அங்கணத்துள்.........கொளல்'

தம் கணத்தர் அல்லார்முன் கோட்டிகொளல் - நல்லவர்கள், யோக்கியர் அல்லாதாரிடம் நல்லது ஒன்றனையும் சொல்லற்க; அங்கணத்துள் உக்க அமிழ்தற்று - அப்படிச் சொன்னால் அந்தச் சொல் அபரிசுத்தமான முற்றத்திற் கொட்டுண்ட அமிர்தத்தைப் போலத் தமக்குப் பயன் தாராது வியர்த்தமாகும்.

XXIX. பொருள் செயல் வகை — பொருளைச் சேகரிக்கும் முறை.

38. 'இல்லாரை......எள்ளுவர்'

இல்லாரை எல்லாரும் எள்ளுவர்-அறிவு முதலிய எல்லா நலங் களும் உடையராயினும் பொருளில்லாத எளியாரை எல்லாரும் இகழ்ந்து பேசுவர்.

XXX. நட்பு—சிநேகிதாது தன்மை.

39. 'செயற்......காப்பு'

நட்பின் செயற்கு அரிய யா உள-நட்பினைச் செய்துகொள் வதற்குப்போல அரிய பொருள் யாவை யுண்டு? அதுபோல் வினைக்கு அரிய காப்பு யா உள-செய்துகொண்டால், அதுபோலப் பகைவர் செய்யும் கொடிய வினைகளுக்கு உயர்ந்த காவல் யாவை யுண்டு?

40. 'அழிவின.........நட்ப்'

அழிவினவை நீக்கி-கேட்டைத் தருவதாகிய தீயவழியில் செல் லுங் காலத்தில் விலக்கி, ஆறு உய்த்து-நல்ல வழியில் செல்லும்படி செய்து, அழிவின்கண் அல்லல் உழப்பதாம் நட்பு-அப்படி நன் னெறியில் செல்லாதபோது கேடு வந்த காலத்துத் தானும் துன் பத்தை உடனனுபவிப்பதே நட்பாவது.

41. 'மதிப்பின்னீர........நட்பு'

பேதையார் நட்பு மதிப்பின்னீர- பேதைமை யுடையார் நட் புக்கள் பூரணசந்திரன் பிறகு குறையும் தன்மைபோல நாடோறு குறையும் தன்மையது.

XXXI. நட்பு ஆராய்தல்—இன்னாரை நட்பினராகக் கொள்ள லாம் என்று ஆராய்தல்.

42. 'ஆய்ந்......தரும்'

ஆய்ந்து ஆய்ந்து கேண்மை கொள்ளாதான் - குணத்தாலும் நடத்தையாலும் இவன் நல்லவனா தீயவனா என்று பலகாலும் ஆராய்ந்து அவனிடத்து நட்புக் கொள்ளாதவன், கடைமுறை தான் சாந்துயரம் தரும்-முடிவில்தான் சாதற்கு ஏதுவாகிய துன்

பத்தினைத் தன் மாற்றார் விளக்க வேண்டாமலே தானே விளைத்துக் கொள்வான்.

43. 'குணனும்........நட்பு'

குணனும் குடிமையும் குற்றமும் குன்றா இனனும் அறிந்து-ஒருவனது குணத்தையும் குடிப்பிறப்பையும் தோஷத்தையும், குறைவற்ற சுற்றத்தையும் ஆராய்ந்து அறிந்துகொண்டு, நட்பு யாக்க- சிநேகம் செய்க.

XXXII. கூடா நட்பு—அந்தரங்கமான சிநேக மில்லாமல் தன் காரியம் ஆகும் வரையில் வெளிக்குச் சிநேகம் போல ஒழுகுவார் நட்பு.

44. 'சீரிடம்......நட்பு'

நேரா நிரந்தவர் நட்பு-அந்தரங்கமான சிநேக வாத்ஸல்ய மில்லாமல் தன் காரியம் ஆகும் வரையில் வெளிக்குச் சிநேகம்போலக் கூடி ஒழுகுவாரது நட்பு, சீரிடம் காணின் எறிதற்குப் பட்டடை-ஸமயம் வாய்த்ததும் முற்றும் கெடுக்கும் கொல்லனது பட்டடைக் கல்போலாம். (பட்டடைக்கல் தன்மேலுள்ள பண்ட மொன்றைத் தாங்கிக் காப்பதுபோலவிருந்து, வெட்டும் ஸமயம் வந்தபோது அப்பண்டத்தை முற்றும் சிதைந்து போம்படி விடுதல் போலவாம்).

45. 'பகை நட்பாங்.....விடல்'

பகை நட்பாங் காலம் வருங்கால்-பகைவர் தமக்கு நட்பினராக ஒழுகும் காலம் வந்தால், முகம் நட்டு அகம்நட்பு ஒரீஇ விடல்-தாமும் அவரோடு முகத்தால் நட்புச் செய்து மனத்திற்குள் அந்த நட்பை விட்டு, பின்பு அந்த வெளிச் சிநேகத்தையும் விடுக.

XXXIII. பேதைமை—யாதும் அறியாமை.

46. 'பொய்படும்.......கொளின்'

கையறியா பேதை வினை மேற்கொளின்-செய்யும் முறைமைய அறியாத பேதை ஒரு காரியத்தை மேற்கொள்ளுவானாயின், பொய்படும் ஒன்றோ புனைபூணும்-அக்காரியமும் கெட்டுத் தானும் விலங்கிடப் படுவான்.

XXXIV. புல்லறிவாண்மை—தான் சிற்றறிவினனா யிருந்தும் தன்னைப் பேரறிவினனாக மதித்து உயர்ந்தோர் சொல்லும் நன்மொழியைக் கேளா திருத்தல்.

47. 'வெண்மை........செருக்கு'

வெண்மை எனப்படுவது யாதெனில்-புல்லறி வுடைமை யானது யாதென்று வினவில், யாம் ஒண்மை உடையம் என்னும் செருக்கு-யாம் (மகாபுத்திமான் என்று) தானே நன்கு மதிக்கும் மயக்கமாம்.

48. 'அருமறை........தனக்கு'

அருமறை சோரும் அறிவிலான்-என்ன உபதேசம் செய்தாலும் உட்கொள்ளாது மறந்துவிடும் புல்லறிவாளன், தானே தனக்குப் பெரும் இறை செய்யும்-தானே தனக்கு மிக்க வருத்தத்தைச் செய்யும்.

49. 'காணாதாற்........தான்காணான்'

காணாதான் காட்டுவான் தான் காணான்-தன்னை எல்லாம் அறிந்தவனாகப் புல்லறிவாளன் நினைத்தலால், பிறர்பால் ஒன்றையும் அறியும் தன்மையிலாத அந்த புல்லறிவாளனை அறிவு புகட்டப் புகும் நல்லவன் அம் மூடனால் பழிக்கப்பட்டுத் தான் அறியானாய் முடியும்.

XXXV. பகைத்திறம் தெரிதல்—பகைவராகக் கூடாதவரைப் பகை ஆககும் குற்றமும், முன்னே பகையாகியாருள் யாரை நட்பாக்கவேண்டுமென்பதும், அப்போது செய்ய வேண்டுவது இன்னது என்பதும், பகைவரை வேரோடு களைவதன்கண் இன்னது செய்ய வேண்டுமென்பதும், இன்ன காலத்திற் செய்ய வேண்டுமென்பதும், பகை நாசம் செய்யாதுபோனால் உண்டாகும் அனர்த்தமும் என்னும் இவ் வகைகளை ஆராய்தல்.

50. 'வகையறிந்து........செருக்கு'

வகை அறிந்து தற்செய்து தற்காப்ப-தான் செய்யும் காரியத்தின் வகையை அறிந்து அது முடித்தற்கேற்பத் தன்னைப் பலவா